S.R. 2




من أذكار الكتاب والسنة

# பிரார்த்தனைப் பேழை

(குர்ஆன்-ஹதீஸில் வந்துள்ள
பிரார்த்தனைகள்)

ஸயீத் பின் அலி பின் வஹஃப் அல் ஃகஹ்தானி

தமிழில் :
மௌலவி K.J. மஸ்தான் அலீ பாகவி, உமரி
(அபூகாலித்)




வெளியீடு :
இஸ்லாமிக் சென்டர்
P.O.Box : 808
உனைஸா, சவூதி அரேபியா




# பிரார்த்தனைப் பேழை

(குர்ஆன்-ஹதீஸில் வந்துள்ள
பிரார்த்தனைகள்)

**ஸயீத் பின் அலி பின் வஹஃப் அல் ஃகஹ்தானி**

தமிழில் :
மௌலவி K.J. **மஸ்தான் அலீ பாகவி, உமரி**
**(அபூகாலித்)**

பார்வையிட்டவர் :
ஓ.எல். இல்யாஸ் மௌலவி (அஷ்ஷர்கீ)
அபூஅப்தில்லாஹ்

வெளியீடு :

## இஸ்லாமிக் சென்டர்

**P.O.Box : 808**
**உனைஸா, சவூதி அரேபியா**



# முன்னுரை

இது ஒரு சிறு நூல்தான். ஆயினும் இது வழங்குகிற பயன்மிகு பிரார்த்தனைகளைப் பொருத்து பெருநூலாகும்!

அனைத்துவிதமான துஆ - திக்ர்களின் கருவூலமே இந்நூல்! அதிலும் குறிப்பாக தொழுகையின் எல்லா நிலைகளிலும் ஓதுகிற பிரார்த்தனைகளை -- இறைப்புகழ் மாலைகளை — இறைத்தூதரின் மீதான ஸலவாத்களை இந்நூல் தொகுத்துத் தருகிறது!

இந்நூலில் அனைத்து நபிமொழிகளுக்கும் ஆதாரங்கள் விரிவாகக் கொடுக்கப்பட்டிருப்பதும் அவை அனைத்தும் நம்பகமானவையாய் இருக்க வேண்டும் என்பதில் மூல நூலாசிரியர் தனிக்கவனம் செலுத்தியிருப்பதும் இந்நூலின் சிறப்பிற்கு மற்றோர் அணிகலனாகும்!

ஸஹீஹுல் புகாரி — ஸஹீஹ் முஸ்லிம் எனும் இரு நபிமொழித் தொகுப்புகளும் நம்பகமானவை என்பதில் இஸ்லாமிய உலகில் இரு கருத்துக்கு இடமில்லை! அபூதாவூத், திர்மிதி, நஸாஈ, இப்னுமாஜா போன்ற நபிமொழித் தொகுப்புகளைப் பொருத்தவரையில் அவற்றிலிருந்து 'நம்பகமான நபிமொழி' என பிரபல நபிமொழி ஆய்வாளர் ஒருவரால் தெரிவு செய்யப்பட்ட ஹதீஸ்களே ஆதாரமாக எடுக்கப்பட்டுள்ளன. இவ்விஷயத்தில் ஷைக் நாஸிருத்தீன் அல்பானி அவர்களின் ஆய்வுக்கே முன்னுரிமை கொடுக்கப்பட்டுள்ளது.

ஸஹீஹ் அபுதாவூத், ஸஹீஹுத் திர்மிதி, ஸஹீஹ் நஸாஈ, ஸஹீஹ் இப்னுமாஜா எனக் குறிப்பிடப்படும் நூல்கள் ஷைக் அல்பானி அவர்களால் தொகுக்கப்பட்ட ஸஹீஹான ஹதீஸ்களின் திரட்டுகளாகும்.

இதுபோல் ஸஹீஹுல் ஜாமிவு என்பது ஜாமிவுஸ் ஸகீர் எனும் நூலிலிருந்து நம்பகமான நபிமொழிகளைத் தேர்ந்தெடுத்துத் தொகுக்கப்பட்ட நூலாகும்! இதனைத் தொகுத்ததும் ஷைக் அல்பானி அவர்கள்தாம்!

'பிரார்த்தனைப் பேழை' எனும் நூல் — ஹிஸ்னுல் முஸ்லிம்மின் அஸ்காரில் கிதாபி வஸ்ஸுன்னா' எனும் அரபி நூலின் தமிழ்மொழி பெயர்ப்பாகும். இந்நூல் உர்தூ மொழியில் பெயர்க்கப்பட்டு இதே பெயரில் வெளியிடப்பட்டுள்ளது.

அழகிய வரிசை அமைப்பு, நம்பகத்தன்மை ஆகியவற்றின் காரணத்தால் இந்நூல் முஸ்லிம் பொதுமக்கள் அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது, பெரிதும் பாராட்டப்படுகிறது.

பல்வேறு முஸ்லிம் நாடுகளின் சென்டர்களில், இராணுவத் தளங்களில் இந்நூல் பரவலாக வாசிக்கப்படுகிறது. படைவீரர்களும் போர்ப் பயிற்சி பெறும் இளைஞர்களும் இதிலுள்ள துஆக்களை மனனம் செய்து தம் இறைவனிடம் பணிந்து பிரார்த்தனை புரிந்து வருகிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கது!

வாசகர்களின் வசதியை முன்னிட்டு அரபி மூலத்துடன் அவற்றிற்கான குறியீடுகளையும் நாம் கொடுத்துள்ளோம். இலகுவாக ஓதுவதற்கு அது பெரிதும் துணை செய்யும்!

இந்நூலின் மூலம் எங்களுக்கும், இதனைப் படிக்கும் எல்லாச் சகோதரர்களுக்கும் இவ்வுலகிலும் மறுமையிலும் இறைவன் நற்பயன் அளிக்க வேண்டுமென இறைஞ்சுகிறோம்.

வஸ்ஸலாம்

அன்புடன்
மொழிபெயர்த்தோன்

## பொருளடக்கம்


| | | |
|---|---|---|
| 1 | திக்ர் - அல்லாஹ்வை நினைவு கூர்வதன் சிறப்பு | 1 |
| 2 | உறக்கத்திலிருந்து விழித்த பின் ஓதவேண்டியவை | 8 |
| 3 | ஆடை அணிந்த பின் ஓதும் துஆ | 11 |
| 4 | புத்தாடை அணிந்த பின் ஓதும் துஆ | 11 |
| 5 | புத்தாடை அணிபவருக்காக கேட்க வேண்டிய துஆ | 12 |
| 6 | ஆடையைக் களையும் போது ஓதவேண்டியது | 13 |
| 7 | கழிப்பிடம் நுழையும் போது ஓதவேண்டியது | 13 |
| 8 | கழிப்பிடத்திலிருந்து வெளியேறும் போது ஓதவேண்டியது | 13 |
| 9 | உளூ செய்யுமுன் ஓதவேண்டியது | 13 |
| 10 | உளூ செய்த பின் ஓதவேண்டியது | 14 |
| 11 | வீட்டில் இருந்து புறப்படும்போது ஓதும் திக்ர் | 15 |
| 12 | வீட்டில் நுழையும்போது ஓதும் திக்ர் | 16 |
| 13 | மஸ்ஜிதுக்குப் போகும்போது ஓதும் துஆ | 16 |
| 14 | மஸ்ஜிதுனுள் நுழையும்போது ஓதும் துஆ | 17 |
| 15 | மஸ்ஜிதிலிருந்து வெளியேறும் போது ஓதும் துஆ | 18 |
| 16 | பாங்கின் திக்ர் | 19 |
| 17 | தொழுகையை ஆரம்பிக்கும்போது ஓதும் துஆ | 21 |
| 18 | ருகூவின்போது ஓதும் துஆ | 27 |
| 19 | ருகூவிலிருந்து எழும்போது ஓதும் துஆ | 29 |
| 20 | ஸுஜூதின் துஆ | 30 |
| 21 | இரு ஸஜ்தாவுக்கு மத்தியில் ஓதும் துஆ | 32 |
| 22 | குர்ஆனின் ஸஜ்தாவின்போது ஓதும் துஆ | 33 |
| 23 | அத்தஹிய்யாத் | 34 |
| 24 | அத்தஹிய்யாத் ஓதிய பின் நபி மீது ஸலவாத்து கூறுதல் | 35 |
| 25 | இறுதி அத்தஹிய்யாத்திற்குப் பின் ஸலாமுக்கு முன் ஓதும் துஆ | 36 |
| 26 | தொழுகையில் ஸலாம் கொடுத்த பின் ஓதும் திக்ர்கள் | 43 |
| 27 | ஃபஜ்ர் தொழுகைக்குப் பிறகு | 47 |
| 28 | இஸ்திகாரா - நன்மை தேடி தொழும் தொழுகையின் துஆ | 47 |
| 29 | காலை - மாலை நேரங்களில் ஓதும் திக்ர் | 49 |
| 30 | காலை நேரத்தில் ஓதும் துஆ | 51 |
| 31 | மாலை நேத்தில் ஓதும் துஆ | 51 |
| 32 | தூங்குவதற்கு முன் ஓத வேண்டியவை | 62 |

| | | |
|---|---|---|
| 33 | இரவில் தூக்கத்தில் புரளும்போது ஓதுவது | 69 |
| 34 | தூக்கத்தில் அமைதியின்மை, திடுக்கம், விரக்தி போன்ற நிலைகளில் ஓதும் துஆ | 70 |
| 35 | நல்ல அல்லது தீய கனவு காணும் போது- - - | 71 |
| 36 | கெட்ட கனவு கண்டால்- - - - | 71 |
| 37 | வித்ருடைய குனூத்தில் ஓதும் துஆ | 72 |
| 38 | வித்ரு தொழுகையில் ஸலாம் கொடுத்த பின் ஓதவேண்டியது | 74 |
| 39 | துயரம், கவலையின் போது ஓதும் துஆ | 75 |
| 40 | நிலை குலைந்த சமயம் ஓதும் துஆ | 77 |
| 41 | எதிரிகளையும் ஆட்சியாளர்களையும் சந்திக்கும் போது ஓதும் துஆ | 78 |
| 42 | இறைவிசுவாசத்தில் சந்தேகம் ஏற்படும்போது ஓதும் துஆ | 79 |
| 43 | கடன் அடைவதற்காக ஓதும் துஆ | 80 |
| 44 | தொழுகையிலோ, குர்ஆன் ஓதும் போதோ ஊச லாட்டம் ஏற்படும் போது ஓதும் துஆ | 81 |
| 45 | காரியங்களில் சிரமம் ஏற்படும் போது ஓதும் துஆ | 82 |
| 46 | பாவம் செய்துவிட்டால் என்ன சொல்ல,செய்யவேண்டும்? | 82 |
| 47 | ஷைத்தானையும் அவனது ஊச லாட்டங்களையும் தூரமாக்கும் துஆ | 82 |
| 48 | விருப்பத்திற்கு மாறாக ஒரு நிகழ்ச்சி நிகழும் போது அல்லது ஏதேனும் பணி தனது ஆற்றல், அதிகாரத்திற்கு உட்படாது போகும்போது | 83 |
| 49 | குழந்தைகளுக்காக பாதுகாவல் தேடுவதற்கான வார்த்தைகள் | 84 |
| 50 | நோயாளியை நலன் விசாரிக்கும் போது ஓதும் துஆ | 85 |
| 51 | நலம் விசாரிப்பதன் சிறப்பு | 86 |
| 52 | உயிர் பிரியாதா என விரக்தி அடைந்திருக்கும் நோயாளி ஓதும் துஆ | 85 |
| 53 | மரண நேரம் நெருங்கியவருக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டிய திக்ர் | 88 |
| 54 | துன்பம் நேர்ந்தவர் ஓதும் திக்ர் | 88 |
| 55 | மரணமடைந்தவரின் கண்களை மூடும் போது ஓதும் துஆ | 88 |
| 56 | ஜனாஸா தொழுகையில் ஓதும் துஆ | 89 |
| 57 | குழந்தைக்கான ஜனஸா தொழுகையில் ஓதும் துஆ | 92 |
| 58 | இறப்புக்கு ஆறுதல் சொல்வதற்கான துஆ | 93 |
| 59 | மரணமடைந்தவரை மண்ணறையில் வைக்கும்போது ஓதும் துஆ | 94 |
| 60 | அடக்கம் செய்த பின் ஓதும் துஆ | 94 |
| 61 | மண்ணறைகளைத் தரிசிக்கும்போது ஓதும் துஆ | 95 |
| 62 | பலமாக காற்றடிக்கும்போது ஓதும் துஆ | 95 |

| | | |
|---|---|---|
| 63 | இடி இடிக்கும்போது ஓதும் துஆ | 96 |
| 64 | மழைவேண்டி ஓதும் துஆ | 97 |
| 65 | மழை பொழியும்போது ஓதும் துஆ | 98 |
| 66 | மழை பெய்தபின் ஓதும் துஆ | 98 |
| 67 | மேகம் கலைவதற்காக ஓதும் துஆ | 98 |
| 68 | பிறை பார்க்கும்போது ஓதும் துஆ | 98 |
| 69 | நோன்பு திறக்கும்போது ஓதும் துஆ | 99 |
| 70 | சாப்பிடுவதற்கு முன் ஓதும் திக்ர் | 100 |
| 71 | சாப்பிட்டு முடிந்ததும் ஓதும் துஆ | 101 |
| 72 | உணவளித்தவருக்காக விருந்தினர் செய்யும் துஆ | 102 |
| 73 | பானம் வழங்கியவருக்காக அல்லது வழங்கிட நாடியவருக்காக ஓதும் துஆ | 102 |
| 74 | பிறர் இல்லத்தில் நோன்பு திறப்பவர் ஓதும் துஆ | 102 |
| 75 | நோன்பாளியின் முன் உணவுகொண்டு வரப்பட்டு அவர் நோன்பை முறிக்காதபோது ஓதும் துஆ | 103 |
| 76 | முதல் கனியைப் பார்க்கும்போது ஓதும் துஆ | 103 |
| 77 | தும்மலின்போது ஓதும் துஆ | 103 |
| 78 | மணமக்களுக்காக செய்யும் துஆ | 104 |
| 79 | மணமுடித்துக் கொண்டவரும் புதிய வாகனம் வாங்கியவரும் தனக்காக ஓதும் துஆ | 104 |
| 80 | மனைவியுடன் கூடும்போது ஓதும் துஆ | 105 |
| 81 | கோபத்தின்போது ஓதும் துஆ | 105 |
| 82 | துன்பத்திற்குள்ளானவரைப் பார்க்கும்போது ஓதும் துஆ | 105 |
| 83 | சபையில் ஓதும் துஆ | 106 |
| 84 | சபை கலையும்போது ஓதும் துஆ | 106 |
| 85 | சபைகளை முடித்துவைக்கும்போது ஓதும் துஆ | 107 |
| 86 | அல்லாஹ் உன்னை மன்னிப்பானாக எனக் கூறியவருக்காக ஓதும் துஆ | 108 |
| 87 | உபகாரம் செய்தவருக்காக ஓதும் துஆ | 108 |
| 88 | தஜ்ஜாலின் குழப்பத்தைவிட்டும் பாதுகாவல் தேடுவதற்கான திக்ர் | 109 |
| 89 | அல்லாஹ்வுக்காக உன்னை நேசிக்கிறேன் எனக்கூறியவருக்காக ஓதும் துஆ | 109 |
| 90 | தனது செல்வத்தை உங்கள் முன் சமர்ப்பிப்பவருக்காக ஓதும் துஆ | 109 |
| 91 | கடனைத் திருப்பிக் கொடுக்கும்போது கடன் வழங்கியவருக்காகச் செய்யும் துஆ | 110 |
| 92 | ஷிர்க்கை அஞ்சும்போது ஓதும் துஆ | 110 |

| | | |
|---|---|---|
| 93 | அன்பளிப்பு அல்லது தர்மம் செய்பவருக்கு ஓதும் துஆ | 110 |
| 94 | சகுனத்தை வெறுக்கும்போது ஓதும் துஆ | 111 |
| 95 | வாகனிக்கும்போது ஓதும் துஆ | 112 |
| 96 | பயணத்தின் துஆ | 113 |
| 97 | ஊரினுள் நுழையும்போது ஓதும் துஆ | 114 |
| 98 | கடைவீதியில் நுழையும்போது ஓதும் துஆ | 115 |
| 99 | வாகனம் சறுக்கி விழுந்தால் - - - | 116 |
| 100 | பயணி மற்றவருக்காகச் செய்யும் துஆ | 116 |
| 101 | பயணிக்காக மற்றவர் செய்யும் துஆ | 116 |
| 102 | உயரமான இடங்களில் ஏறும்போது தக்பீரும் கீழே இறங்கும்போது தஸ்பீஹும் சொல்ல வேண்டும் | 117 |
| 103 | அதிகாலையில் பயணி ஓதும் துஆ | 117 |
| 104 | பயணத்திலும் மற்ற நேரத்திலும் எங்காவது தங்கும் போது ஓதும் துஆ | 118 |
| 105 | பயணத்திலிருந்து திரும்பும்போது ஓதும் துஆ | 118 |
| 106 | மகிழ்ச்சிக்குரிய அல்லது வெறுப்புக்குரிய பொருள் எதிர்படும்போது ஓதும் துஆ | 119 |
| 107 | ஸலாவாத்து சொல்வதன் சிறப்பு | 120 |
| 108 | ஸலாத்தைப் பரப்புவது | 120 |
| 109 | சேவல் கூவும்போதும் கழுதை கத்தும்போதும் ஓதும் துஆ | 121 |
| 110 | இரவில் நாய் குரைக்கும்போது ஓதும் துஆ | 122 |
| 111 | பிறரைத் திட்டினால் ஓதும் துஆ | 122 |
| 112 | ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமைப் புகழும்போது கூற வேண்டியது | 123 |
| 113 | ருக்னுல் யமானிக்கும் ஹஜருல் அஸ்வதுக்குமிடையில் ஓதும் துஆ | 123 |
| 114 | ஸஃபா, மர்வா குன்றுகளில் ஏறி நிற்கும்போது ஓதும் துஆ | 124 |
| 115 | அரஃபா நாள் துல்ஹஜ் 9 - ல் ஓதும் துஆ | 125 |
| 116 | மஷ்அருல் ஹராமில் (முஸ்தலிபாவில்) ஓதும் திக்ர் | 126 |
| 117 | கல் எறியும்போது ஒவ்வொரு கல்லுக்கும் தக்பீர் சொல்ல வேண்டும் | 126 |
| 118 | ஹஜருல் அஸ்வத் உள்ள மூலையில் தக்பீர் சொல்வது | 127 |
| 119 | எதிரி தோல்வி அடைய ஓதும் துஆ | 127 |
| 120 | ஒரு கூட்டாத்தார் குறித்து அஞ்சும்போது ஓதும் துஆ | 128 |
| 121 | ஆச்சரியத்தின்போதும் மகிழ்ச்சியின்போதும் ஓதும் துஆ | 128 |
| 122 | சந்தோஷமான செய்தி வரும்போது ஓதும் துஆ | 128 |
| 123 | உடலில் வலி ஏற்படும்போது ஓதும் துஆ | 129 |
| 124 | கண் திஷ்டிக்காக ஓதும் துஆ | 129 |

| | | |
|---|---|---|
| 125 | பிற்சேர்க்கை | 129 |
| 126 | தல்பியா | 130 |
| 127 | பதற்றம் அடையும்போது ஓதவேண்டியது | 131 |
| 128 | நிராகரிப்பவர் தும்பும்போது கூறவேண்டியது | 131 |
| 129 | நிராகரிப்பவர் ஸலாம் கூறும்போது சொல்லவேண்டியது | 131 |
| 130 | நோன்பாளி ஏசப்படும்போது கூறவேண்டியது | 132 |
| 131 | ஆடு, மாடு,ஒட்டகங்களை அறுக்கும்போது - - - | 132 |
| 132 | மூர்க்கத்தனம் கொண்ட ஷைத்தான்களின் சதியை முறியடிக்க | 132 |
| 133 | பாவமன்னிப்புத் தேடும்போது | 133 |
| 134 | ஸுப்ஹானல்லாஹ், அல்ஹம்து லில்லாஹ், லா இலாஹ இல்லல்லாஹ்,அல்லாஹு அக்பர் ஆகியவற்றின் சிறப்பு | 135 |
| 135 | நபி (ஸல்) அவர்கள் எவ்வாறு தஸ்பீஹ் செய்வார்கள்? | 142 |

## திக்ர் - அல்லாஹ்வை நினைவுகூர்வதன் சிறப்பு

*அல்லாஹ் குர்ஆனில் கூறுகிறான்:*

قال الله تعالى ﴿فَاذْكُرُونِيْ أَذْكُرْكُمْ وَاشْكُرُوا لِيْ وَلَا تَكْفُرُوْنِ﴾

*"எனவே என்னை நீங்கள் நினைவுகூருங்கள்; நான் உங்களை நினைவு கூருவேன். எனக்கு நன்றி செலுத்துங்கள்; (என் அருட்கொடைகளை மறுத்து) நன்றி மறவாதீர்கள்".* *(குர்ஆன் 2:152)*

*"இறைநம்பிக்கை கொண்டவர்களே, அல்லாஹ்வை அதிகம் அதிகமாக நினைவுகூருங்கள்"* *(குர்ஆன்: 32:41)*

﴿وَالذَّاكِرِيْنَ اللهَ كَثِيْراً وَالذَّاكِرَاتِ أَعَدَّ اللهُ لَهُمْ مَغْفِرَةً وَأَجْراً عَظِيْماً﴾

*"அல்லாஹ்வை அதிகம் அதிகமாக நினைவுகூரக் கூடிய ஆண்கள் - பெண்கள் யாரோ அவர்களுக்கு மன்னிப்பையும் மகத்தான கூலியையும் அல்லாஹ் தயார் செய்து வைத்துள்ளான்".* *(குர்ஆன் 32:35)*

﴿وَاذْكُرْ رَبَّكَ فِيْ نَفْسِكَ تَضَرُّعاً وَخِيْفَةً وَدُوْنَ الْجَهْرِ مِنَ الْقَوْلِ بِالْغُدُوِّ وَالْآصَالِ وَلَا تَكُنْ مِنَ الْغَافِلِيْنَ﴾

***"மேலும் காலையிலும் மாலையிலும் - உம் மனத்திற் குள் பணிவாகவும் அச்சத்துடனும் மெதுவான குரலிலும் உம் இறைவனை நினைவுகூர்வீராக! மேலும் அலட்சியமாய் இருப்பவர்களுள் நீரும் ஒருவராகி விடாதீர்"***

*(குர்ஆன் 7:205)*

وقَالَ ﷺ : ((مَثَلُ الَّذِيْ يَذْكُرُ رَبَّهُ وَالَّذِيْ لَا يَذْكُرُ رَبَّهُ مَثَلُ الْحَيِّ وَالْمَيِّتِ))

***அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:***

**"தன் இறைவனை நினைவுகூருகிற மனிதன் மற்றும் தன் இறைவனை நினைவுகூராத மனிதன் இருவரின் உதார ணம் உயிருள்ளவனையும் மரணமானவனையும் போன்றதா கும்"** *நூல்: புகாரி - ஃபத்ஹுல் பாரி*

*(பாகம் 11 பக்கம் 208.)*

وَقَال ﷺ : أَلاَ أُنَبِّئُكُمْ بِخَيْرِ أَعْمَالِكُمْ، وَأَزْكَاهَا عِنْدَ مَلِيْكِكُمْ ، وَأَرْفَعِهَا فِيْ دَرَجَاتِكُمْ ، وَخَيْرٍ لَّكُمْ مِنْ إِنْفَاقِ الذَّهَبِ وَالْوَرِقِ ، وَخَيْرٍ لَّكُمْ مِنْ أَنْ تَلْقَوْا عَدُوَّكُمْ فَتَضْرِبُوْا أَعْنَاقَهُمْ وَيَضْرِبُوْا أَعْنَاقَكُمْ ؟)) قَالُوْا بَلَىٰ . قَالَ : ((ذِكْرُ اللهِ تَعَالَىٰ ))

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் வினவினார்கள்: நான் உங்க ளுக்கு ஓர் அமலை அறிவித்துத் தரவா? அது உங்களின் எல்லா அமல்களை விடவும் சிறந்தது. உங்கள் அரச(ன் இறைவ)னிடத்தில் மிகவும் தூய்மையானது: உங்கள் அந்தஸ்துகளை உயர்த்தக் கூடியது: தங்கம் வெள்ளியை நீங்கள் செலவு செய்வதை விடவும் உங்களுக்குச் சிறந்தது:

மட்டுமல்ல, நீங்கள் உங்கள் எதிரிகளுடன் போரிட்டு- நீங்கள் அவர்களின் கழுத்தையும் அவர்கள் உங்களின் கழுத்தையும் வெட்டுவதை விடவும் சிறந்ததும் ஆகும்" தோழர்கள்: "அவசியம் கற்றுத்தாருங்கள்: "நபியவர்கள் கூறினார்கள்: அதுதான் அல்லாஹ்வை திக்று செய்வது- நினைவுகூருவது"

*நூல்: திர்மிதி பாகம் 5 பக்கம் 459.*
*இப்னுமாஜா பாகம் 2 பக்கம் 1245.*
*பார்க்க: ஸஹீஹ் இப்னுமாஜா பாகம் 2.*
*பக்கம் 316.*
*ஸஹீஹுத் திர்மதி பாகம் 3 பக்கம் 139.*

وَقَالَ ﷺ : (( يَقُوْلُ اللهُ تَعَالَى : أَنَا عِنْدَ ظَنِّ عَبْدِيْ بِيْ ، وَأَنَا مَعَهُ إِذَا ذَكَرَنِيْ، فَإِنْ ذَكَرَنِيْ فِيْ نَفْسِهِ ذَكَرْتُهُ فِيْ نَفْسِيْ، وَإِنْ ذَكَرَنِيْ فِيْ مَلَإٍ ذَكَرْتُهُ فِيْ مَلَإٍ خَيْرٍ مِنْهُمْ ، وَإِنْ تَقَرَّبَ إِلَيَّ شِبْرًا تَقَرَّبْتُ إِلَيْهِ ذِرَاعًا وَإِنْ تَقَرَّبَ إِلَيَّ ذِرَاعًا تَقَرَّبْتُ إِلَيْهِ بَاعًا، وَإِنْ أَتَانِيْ يَمْشِيْ أَتَيْتُهُ هَرْوَلَةً))

*அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்: "அல் லாஹ் கூறுகிறான்: என் அடியான் (மனிதன்) என்னைக் குறித்து என்ன எண்ணம் கொண்டுள்ளானோ அதற்கு ஏற் பவே நான் உள்ளேன். அவன் என்னை நினைவு கூரும் போது நான் அவனுடன் இருக்கிறேன். அவன் என்னை மனத்தினுள் நினைவு கூர்ந்தால் நானும் அவனை என் மனத்தினுள் நினைவு கூருகிறேன். அவன் என்னை ஒரு கூட்டத்தில் நினைவு கூர்ந்தால், அதனை விடவும் சிறந்த கூட்டத்தில் நான் அவனை நினைவு கூருகிறேன். அவன் என்னை நோக்கி ஒரு சாண் நெருங்கி வந்தால் நான் அவனை நோக்கி ஒரு முழம் நெருங்கிச் செல்கிறேன்; அவன் என்னை நோக்கி ஒரு முழம் நெருங்கி வந்தால் நான் அவனை நோக்கி*

ஒரு பாகம் நெருங்கிச் செல்கிறேன். அவன் என்னை நோக்கி நடந்து வந்தால் நான் அவன் பக்கம் ஓடோடிச் செல்கிறேன்''.

நூல்: புகாரி பாகம் 8 பக்கம் 171.
முஸ்லிம் பாகம் 4 பக்கம் 2061.

وَعَنْ عَبْدِ اللهِ بْنِ بُسْرٍ رَضِيَ اللهُ عَنْهُ أَنَّ رَجُلاً قَالَ : يَا رَسُوْلَ اللهِ إِنَّ شَرَائِعَ الْإِسْلَامِ قَدْ كَثُرَتْ عَلَيَّ فَأَخْبِرْنِيْ بِشَيْءٍ أَتَشَبَّثُ بِهِ . قَالَ : (( لَا يَزَالُ لِسَانُكَ رَطْباً مِنْ ذِكْرِ اللهِ ))

அப்துல்லாஹ் இப்னு புஸ்ர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: ''ஒரு மனிதர் கேட்டார்: அல்லாஹ்வின் தூதரே! இஸ்லாத்தின் கடமைகள் - நெறிமுறைகள் என்னைப் பொறுத்து மிகவும் அதிகமாகி விட்டன. எனவே ஒரு விஷயத்தை எனக்கு நீங்கள் அறிவித்துத் தாருங்கள்; நான் அதை உறுதியாகப் பற்றிக் கொள்வேன்''. அதற்கு நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். உமது நாவு அல்லாஹ்வின் திக்ரில் ஈடுபட்டுப் பசுமையாக இருக்கட்டுமாக''.

நூல்: திர்மிதி பாகம் 5 பக்கம் 458.
இப்னுமாஜா பாகம் 2 பக்கம் 1246.
ஸஹீஹுத் திர்மிதி பாகம் 3 பக்கம் 139.
ஸஹீஹ் இப்னு மாஜா பாகம் 2.
பக்கம் 317.

وَقَالَ ﷺ : (( مَنْ قَرَأَ حَرْفاً مِنْ كِتَابِ اللهِ فَلَهُ بِهِ حَسَنَةٌ . وَالْحَسَنَةُ بِعَشْرِ أَمْثَالِهَا ، لَا أَقُوْلُ : ﴿الم﴾ حَرْفٌ ؛ وَلٰكِنْ : أَلِفٌ حَرْفٌ ، وَلَامٌ حَرْفٌ ، وَمِيْمٌ حَرْفٌ ))

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்: ''எவர் அல்லாஹ்வின் வேதத்தில் இருந்து ஓர் எழுத்தை ஓதுகிறாரோ அவருக்கு அதன் பொருட்டால் ஒரு நன்மை உண்டு. அந்த ஒரு நன்மை, அதைப்போன்ற பத்து நன்மைகளுடன் அதிகரிக்கிறது. அலிஃப், லாம், மீம் என்பது ஓர் எழுத்து என்று நான் கூறவில்லை. மாறாக அலிஃப் ஓர் எழுத்து 'லாம்' ஓர் எழுத்து, 'மீம்' ஓர் எழுத்து''.

நூல்: திர்மிதி பாகம் 5 பக்கம் 175. ஸஹீஹுத் திர்மிதி பாகம் 3 பக்கம் 9. அல்ஜாமி உஸ் ஸகீர் பாகம் 5 பக்கம் 340.

وَعَنْ عُقْبَةَ بْنِ عَامِرٍ رَضِيَ اللهُ عَنْهُ قَالَ : خَرَجَ رَسُوْلُ اللهِ ﷺ وَنَحْنُ فِي الصُّفَّةِ فَقَالَ : ((أَيُّكُمْ يُحِبُّ أَنْ يَغْدُوَ كُلَّ يَوْمٍ إِلَىٰ بَطْحَانَ أَوْ إِلَى الْعَقِيْقِ فَيَأْتِيَ مِنْهُ بِنَاقَتَيْنِ كَوْمَاوَيْنِ فِيْ غَيْرِ إِثْمٍ وَلَا قَطِيْعَةِ رَحِمٍ؟ فَقُلْنَا : يَا رَسُوْلَ اللهِ نُحِبُّ ذٰلِكَ. قَالَ : ((أَفَلَا يَغْدُوْ أَحَدُكُمْ إِلَى الْمَسْجِدِ فَيَعْلَمَ، أَوْ يَقْرَأَ آيَتَيْنِ مِنْ كِتَابِ اللهِ عَزَّوَجَلَّ خَيْرٌ لَهُ مِنْ نَاقَتَيْنِ، وَثَلَاثٌ خَيْرٌ لَهُ مِنْ ثَلَاثٍ، وَأَرْبَعٌ خَيْرٌ لَهُ مِنْ أَرْبَعٍ، وَمِنْ أَعْدَادِهِنَّ مِنَ الْإِبِلِ)).

உக்பா இப்னு ஆமிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நாங்கள் ஸுஃப்பாவில் (மஸ்ஜிதின் முன்வராந்தாவின் திண்ணையில்) இருந்து கொண்டிருந்தபோது நபி (ஸல்) அவர்கள் (வீட்டில் இருந்து) வெளியே வந்தார்கள். அப்போது கூறினார்கள்: தினமும் பத்ஹாவுக்கு அல்லது அகீகிற்குச் சென்று அங்கிருந்து பெரிய பெரிய கொழுத்த இரண்டு

ஒட்டகங்களை பாவமோ பந்தமுறிவோ இல்லாத வகையில் கொண்டு வருவதை விரும்புபவர் உங்களில் எவரும் உண் டா?'' அதற்கு நாங்கள் கூறினோம்: ''அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் அனைவருமே அதை விரும்புகிறோம்.'' நபியவர் கள் சொன்னார்கள்: உங்களில் ஒருவர் மஸ்ஜிதுக்குச் சென்று, அல்லாஹ்வின் வேதத்திலிருந்து இரண்டு வசனங்களைக் கற்றுக் கொடுக்கவோ ஓதவோ செய்யலாமே! இரண்டு வசனங்களை ஓதுவது அவருக்கு இரண்டு ஒட்டகங்களை விடவும் சிறந்ததாகும். மூன்று வசனங்கள் என்றால் மூன்று ஒட்டகங்களை விடச் சிறந்ததாகும். நான்கு வசனங்கள் என்றால் நான்கு ஒட்டகங்களை விடச் சிறந்ததாகும். இவ் வாறே அவற்றின் எண்ணிக்கைகளுக்கு ஏற்ப உள்ள அத் தனை ஒட்டகங்களைவிடச் சிறந்ததாகும்''

நூல்: ஸஹீஹுல் முஸ்லிம் பாகம் 1 பக்கம் 553.

وَقَالَ ﷺ : ((مَنْ قَعَدَ مَقْعَدًا لَمْ يَذْكُرِ اللهَ فِيهِ كَانَتْ عَلَيْهِ مِنَ اللهِ تِرَةٌ ، وَمَنِ اضْطَجَعَ مَضْجَعًا لَمْ يَذْكُرِ اللهَ فِيهِ كَانَتْ عَلَيْهِ مِنَ اللهِ تِرَةٌ))

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்: ''ஒரு வர் தான் அமர்ந்திருந்த இடத்தில் அல்லாஹ்வை நினைவு கூர்ந்திடவில்லையெனில் அல்லாஹ்வின் புறத்திலிருந்து அவர் மீது அது குறைபாட்டிற்குரியதாக அமைந்து விடும். ஒருவர் தான் படுத்திருந்த இடத்தில் அல்லாஹ்வை நினைவு கூர்ந்திடவில்லையெனில் அதுவும் அல்லாஹ்வின் புறத்திலி ருந்து அவர் மீது குறைபாட்டிற்குரியதாக அமைந்து விடும்''.

நூல்: அபூதாவூத், பாகம் 4 பக்கம் 264.

وَقَالَ ﷺ : ((مَا جَلَسَ قَوْمٌ مَجْلِسًا لَمْ يَذْكُرُوا اللهَ فِيهِ ، وَلَمْ يُصَلُّوا عَلَى نَبِيِّهِمْ إِلَّا كَانَ عَلَيْهِمْ تِرَةً فَإِنْ شَاءَ عَذَّبَهُمْ وَإِنْ شَاءَ غَفَرَ لَهُمْ)).

''எந்த ஒரு கூட்டத்தினரும் தாங்கள் அமர்ந்திருந்த இடத்தில் அல்லாஹ்வை நினைவு கூர்ந்திடாமலும் தங்களின் நபி மீது ஸலவாத் சொல்லாமலும் இருப்பார்களானால் அது அவர்கள் மீது நஷ்டத்திற்குரியதாகவே அமைந்துவிடும். பிறகு அவன் நாடினால் அவர்களை வேதனையில் ஆழ்த்துவான்; அவன் நாடினால் அவர்களை மன்னிப்பான்''.

நூல்: திர்மிதி. பார்க்க: ஸஹீஹுத் திர்மிதி பாகம் 3 பக்கம் 140.

وَقَالَ ﷺ : (( مَا مِنْ قَوْمٍ يَقُومُونَ مِنْ مَجْلِسٍ لَا يَذْكُرُونَ اللهَ فِيهِ إِلَّا قَامُوا عَنْ مِثْلِ جِيفَةِ حِمَارٍ وَكَانَ لَهُمْ حَسْرَةً ))

''ஒரு கூட்டத்தினர் தாங்கள் அமர்ந்திருந்த இடத்தில் அல்லாஹ்வை நினைவுகூர்ந்திடாமல் எழுந்தார்களேயானால், அவர்கள் செத்த கழுதையை விட்டு விட்டு எழுந்து சென்றவர்கள் போல் ஆவார்கள். மேலும் அது அவர்களுக்குக் கைசேதமாகவே அமையும்!''

## உறக்கத்திலிருந்து விழித்த பின் ஓதவேண்டியவை

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ اَحْيَانَا بَعْدَ مَا اَمَاتَنَا وَإِلَيْهِ النُّشُوْرُ .

1. எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே; அவனே நம்மை மரணம் எனும் தூக்கத்தில் ஆழ்த்தியபின் உயிர்பெற்றெழச் செய்தான். மேலும் (நாளை மறுமையில்) மீண்டும் எழுப்பப்பட்டு அவனிடமே செல்ல வேண்டியுள்ளது.
நூல்: புகாரி, முஸ்லிம்.

2. அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "ஒருவர் இரவில் விழித்த நேரத்தில் அல்லது (அதிகாலையில்) விழித்தெழும் நேரத்தில் இவ்வாறு ஓதட்டும்:

لَا إِلٰهَ إِلَّا اللهُ وَحْدَهُ لَا شَرِيْكَ لَهُ، لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ، وَهُوَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ. سُبْحَانَ اللهِ، وَالْحَمْدُ لِلّٰهِ، وَلَا إِلٰهَ إِلَّا اللهُ وَاللهُ أَكْبَرُ وَلَا حَوْلَ وَلَا قُوَّةَ إِلَّا بِاللهِ الْعَلِيِّ الْعَظِيْمِ رَبِّ اغْفِرْلِيْ .

(பொருள்: அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. அவன் தனித்தவன்; அவனுக்கு யாதொரு இணையும் இல்லை. ஆட்சியதிகாரம் அவனுக்குரியதே. புகழ் அனைத்தும் அவனுக்கே. அவன் எல்லாவற்றின் மீதும் பேராற்றல் கொண்டவனாக இருக்கிறான். அல்லாஹ் தூய்மையானவன். மேலும் புகழ் அனைத்தும் அல்லாஹ் ஒருவனுக்கே! அவனைத் தவிர வேறு இறைவன் இல்லை. மேலும் அல்லாஹ் மாபெரியவன். அல்லாஹ்வைக் கொண்டே தவிர எந்த ஆற்றலும் அதிகாரமும் இல்லை. அவன் மகத்துவமிக்கவன்; யாவும் அறிந்தவன். என் இறைவனே, என்னை மன்னித்தருள்வாயாக!")

இவ்வாறு கூறினால் அவருக்கு மன்னிப்பு வழங்கப்படு கிறது. இந்த நபிமொழியின் அறிவிப்பாளர் வலீத் என்பார் இவ்வாறு கூறுகிறார்: ''பிறகு அந்த மனிதர் என்ன பிரார்த் தனை செய்தாலும் அது ஏற்றுக்கொள்ளப்படும். பிறகு எழுந்து உளூ செய்து அவர் தொழுவாரெனில் அவரது தொழுகை ஏற்றுக்கொள்ளப்படும்''.

நூல்: புகாரி பாகம் 3 பக்கம் 39.
இப்னு மாஜா பாகம் 2 பக்கம் 335.
பார்க்க: ஸஹீஹ் இப்னுமாஜா பாகம் 2.
பக்கம் 335.

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ عَافَانِي فِيْ جَسَدِيْ وَرَدَّ عَلَيَّ رُوْحِيْ
وَاَذِنَ لِيْ بِذِكْرِهٖ

3. பொருள்: ''எல்லாப் புகழும் அல்லாஹ் ஒருவனுக்கே! அவனே என் உடலுக்கு சுகம் அளித்தான். மேலும் எனது உயிரை எனக்குத் திருப்பிக் கொடுத்தான். மேலும் தன்னை நினைவுகூர்வதற்கு எனக்கு அனுமதியளித்தான்''.

நூல்: திர்மிதி பாகம் 5 பக்கம் 473.
பார்க்க: ஸஹீஹ் த் திர்மிதி பாகம் 3.
பக்கம் 144.

﴿ إِنَّ فِيْ خَلْقِ السَّمَاوَاتِ وَالْأَرْضِ وَاخْتِلَافِ اللَّيْلِ وَالنَّهَارِ
لَآيَـٰتٍ لِّأُولِي الْأَلْبَـٰبِ () الَّذِينَ يَذْكُرُونَ اللهَ قِيَامًا وَقُعُودًا
وَعَلَىٰ جُنُوبِهِمْ وَيَتَفَكَّرُونَ فِيْ خَلْقِ السَّمَاوٰتِ وَالْأَرْضِ رَبَّنَـا
مَا خَلَقْتَ هٰذَا بَاطِلًا سُبْحَانَكَ فَقِنَا عَذَابَ النَّارِ () رَبَّنَا إِنَّكَ

مَنْ تُدْخِلِ النَّارَ فَقَدْ أَخْزَيْتَهُ وَمَا لِلظَّالِمِينَ مِنْ أَنْصَارٍ ()
رَبَّنَا إِنَّنَا سَمِعْنَا مُنَادِيًا يُنَادِي لِلْإِيمَانِ أَنْ آمِنُوا بِرَبِّكُمْ فَآمَنَّا رَبَّنَا
فَاغْفِرْ لَنَا ذُنُوبَنَا وَكَفِّرْ عَنَّا سَيِّئَاتِنَا وَتَوَفَّنَا مَعَ الْأَبْرَارِ () رَبَّنَا
وَآتِنَا مَا وَعَدْتَنَا عَلَىٰ رُسُلِكَ وَلَا تُخْزِنَا يَوْمَ الْقِيَامَةِ إِنَّكَ
لَا تُخْلِفُ الْمِيعَادَ ()

*4.* பொருள்: *திண்ணமாக* வானங்கள், *பூமி* ஆகியவற்றைப் படைத்திருப்பதிலும், இரவு - பகல் மாறி மாறி வருவதிலும் அறிவுடையோர்க்குப் பல சான்றுகள் உள்ளன. அவர்கள் எத்தகையவர்கள் எனில் நிற்கும் போதும் உட்காரும் போதும் படுத்திருக்கும் போதும் (ஆக எல்லா நிலைகளி லும்) அல்லாஹ்வை நினைவு கூர்கிறார்கள். மேலும் வானங் களிலும் பூமியிலும் சிந்தனை செலுத்துகிறார்கள். (பிறகு அவர்கள் இப்படிப் பிரார்த்தனை புரிகிறார்கள்:) எங்கள் இறைவனே, இவை அனைத்தையும் வீணாக (யாதொரு நோக்கமுமின்றி) நீ படைக்கவில்லை. (வீணான செயல் களை விட்டு) நீ தூய்மையானவன். எனவே நரக வேதனை யிலிருந்து நீ எங்களைக் காப்பாற்றுவாயாக. எங்கள் இறை வனே, நீ யாரை நரகத்தில் புகுத்தினாயோ அவனை நீ உண்மையில் கேவலப்படுத்தி விட்டாய். மேலும் இப்படிப் பட்ட அக்கிரமக்காரர்களுக்கு உதவி செய்வோர் எவருமிலர். எங்கள் அதிபதியே, இறை விசுவாசத்தின் பக்கம் அழைக்கக் கூடிய ஒருவரின் அழைப்பினை நாங்கள் செவியேற்றோம். 'உங்கள் இறைவனை ஏற்றுக் கொள்ளுங்கள்' என்று அவர் கூறினார். நாங்கள் ஏற்றுக் கொண்டோம். எனவே எங்கள் இரட்சகனே, எங்கள் குற்றங்குறைகளை மன்னித்தருள்வா யாக! எங்களிடம் உள்ள தீமைகளை அகற்றுவாயாக! மேலும் எங்களை நல்லவர்களுடன் மரணிக்கச் செய்வா

யாக! மேலும் எங்கள் அதிபதியே! உன்னுடைய தூதர்களின் வாயிலாக நீ அளித்த வாக்குறுதிகளை எங்களுக்கு நிறை வேற்றித் தருவாயாக! மேலும் மறுமைநாளில் எங்களைக் கேவலப்படுத்திட வேண்டாம்! திண்ணமாக நீ வாக்குறுதி மீறாதவன் ஆவாய்!''

குர்ஆன்: *3:190-194.*

புகாரி பாகம்: 8 பக்கம் 235

முஸ்லிம் பாகம் 1 பக்கம் 530.

## ஆடை அணிந்தபின் ஓதும் துஆ

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ كَسَانِيْ هٰذَا (الثَّوْبَ) وَرَزَقَنِيْهِ مِنْ غَيْرِ حَوْلٍ مِنِّيْ وَلَا قُوَّةٍ .....

5. பொருள்: ''எல்லாப் புகழும் அல்லாஹ் ஒருவனுக்கே! அவனே இந்த ஆடையை எனக்கு அணிவித்தான். என்னி டத்தில் எந்த ஆற்றலும் சக்தியுமின்றியே இதனை எனக்கு வழங்கினான்''.

நூல்: அபூ தாவூத், திர்மிதி, இப்னு மாஜா,
பார்க்க: இர்வாவுல் ஃகலீல் பாகம் 7 பக்கம் 47.

## புத்தாடை அணிந்தபின் ஓதும் துஆ

اَللّٰهُمَّ لَكَ الْحَمْدُ أَنْتَ كَسَوْتَنِيْهِ أَسْأَلُكَ مِنْ خَيْرِهِ وَخَيْرِ مَا صُنِعَ لَهُ، وَأَعُوْذُ بِكَ مِنْ شَرِّهِ وَشَرِّ مَا صُنِعَ لَهُ.

6. பொருள்: யா, அல்லாஹ்! உனக்கே எல்லாப் புகழும். நீயே எனக்கு இதனை அணிவித்தாய். இதன் நன்மையை யும் எதற்காக இது தயாரிக்கப்பட்டதோ அதன் நன்மை யையும் நான் உன்னிடம் கோருகிறேன். மேலும் இதன்

**தீமையை விட்டும் எதற்காக இது தயார் செய்யப்பட்டதோ அதன் தீமையை விட்டும் நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்''.**

***நூல்: அபூ தாவூத், திர்மிதி, அல்பானியின் முக்தஸர் ஷமாயிலுத் திர்மிதி பக்கம் 47.***

**புத்தாடை அணிபவருக்காகக் கேட்க வேண்டிய துஆ**

تُبْلِيْ وَيُخْلِفُ اللهُ تَعَالَى

7. பொருள்: நீ இதனை - பழயதாகும் வரை அணிந்திடுவாய்; மேலும் இதற்குப் பகரமாக அல்லாஹ் இன்னொரு ஆடை வழங்கிடுவான்''.

***நூல்:அபூ தாவூத் பாகம் 4. பக்கம் 41.***

اِلْبَسْ جَدِيْدًا وَعِشْ حَمِيْدًا وَمُتْ شَهِيْدًا

8. பொருள் "புத்தாடை அணிந்திடு: புகளோடு வாழ்ந்திடு: மேலும் உயிர்த் தியாகியாக மரணம் அடைந்திடு".

***நூல்: இப்னு மாஜா, பாகம் 2 பக்கம் 1178.***
***பகவி பாகம் 12 பக்கம் 41.***
*பார்க்க: ஸஹீஹ் இப்னுமாஜா பாகம் 2 பக்கம் 275.*

### ஆடையைக் களையும் போது ஓதவேண்டியது

بِسْمِ اللهِ

9. அல்லாஹ்வின் திருப்பெயர் கொண்டு...!

*நூல்: திர்மிதி பாகம் 2 பக்கம் 505.*
*பார்க்க: அல்இர்வாவு ஹதீஸ் எண் 49.*
*ஸஹீஹுல் ஜாமிஃ பாகம் 3.*
*பக்கம் 203.*

### கழிப்பிடம் நுழையும் போது ஓத வேண்டியது

[ بِسْمِ اللهِ ] اَللّٰهُمَّ إِنِّي أَعُوْذُ بِكَ مِنَ الْخُبُثِ وَالْخَبَائِثِ .

*10.* பொருள்: *அல்லாஹ்வின் திருப்பெயர் கொண்டு...! யா அல்லாஹ்! தீய ஆண்கள் - தீய பெண்களை விட்டு உன்னிடம் நான் பாதுகாவல் தேடுகிறேன்".*

*நூல்: புகாரி, பாகம் 1 பக்கம் 45.*
*முஸ்லிம் பாகம் 1 பக்கம் 283.*

*(ஆரம்பத்தில் 'பிஸ்மில்லாஹ்' இருப்பதாக ஸயீத் இப்னு மன்சூர் அறிவித்துள்ளார்கள்: ஃபத்ஹுல் பாரி பாகம் 1 பக்கம் 244)*

### கழிப்பிடத்திலிருந்து வெளியேறும்போது ஓதவேண்டியது

غُفْرَانَكَ

11. (யாஅல்லாஹ்) "உன்னிடம் பாவமன்னிப்பு கோருகிறேன்".

*நூல்: திர்மிதி, அபூதாவூத், இப்னுமாஜா.*

### உளூ செய்யுமுன் ஓதவேண்டியது

بِسْمِ اللهِ

*12. அல்லாஹ்வின் திருப்பெயர் கொண்டு...!*

*நூல்: அபூ தாவூத், இப்னுமாஜா, அஹ்மத். பார்க்க: இர்வா வுல் ஃகலீல் பாகம் 1 பக்கம் 22.*

உளூ செய்தபின் ஓதவேண்டியது

أَشْهَدُ أَنْ لَا إِلٰهَ إِلَّا اللهُ وَحْدَهُ لَا شَرِيْكَ لَهُ وَأَشْهَدُ أَنَّ مُحَمَّدًا عَبْدُهُ وَرَسُوْلُهُ .

*13. வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை; அவன் தனித்தவன்; அவனுக்கு இணை - துணை யாருமில்லை என்று நான் சாட்சியம் அளிக்கிறேன். மேலும் முஹம்மத் (ஸல்) அவர்கள் அவனுடைய அடிமையும் தூதருமாவார்கள் என்றும் சாட்சியம் அளிக்கிறேன்.''*

*நூல்: ஸஹீஹ் முஸ்லிம் பாகம் 1 பக்கம் 209.*

اَللّٰهُمَّ اجْعَلْنِيْ مِنَ التَّوَّابِيْنَ وَاجْعَلْنِيْ مِنَ الْمُتَطَهِّرِيْنَ .

*14. யா அல்லாஹ்! என்னை - பாவமீட்சி தேடக் கூடியவர்களுள் ஒருவனாக ஆக்கியருள்வாயாக. மேலும் மிகவும் தூய்மை பெற்றவர்களுள் ஒருவனாகவும் ஆக்கியருள்வாயாக''*

*நூல்: திர்மிதி பாகம் 1. பக்கம் 78.*

سُبْحَانَكَ اللّٰهُمَّ وَبِحَمْدِكَ أَشْهَدُ أَنْ لَا إِلٰهَ إِلَّا أَنْتَ أَسْتَغْفِرُكَ وَأَتُوْبُ إِلَيْكَ .

15. (யாஅல்லாஹ்) "உன்னைப் புகழ்வதோடு நீ தூய்மையானவன் என்று துதிக்கவும் செய்கிறேன். வணக்கத்திற்கு உரிய

இறைவன் உன்னைத் தவிர வேறு யாரும் இல்லை என்று நான் சாட்சியம் அளிக்கிறேன். உன்னிடமே நான் பாவமன்னிப்பு கோருகிறேன் மேலும் (பாவமீட்சி தேடி) உன்னிடமே மீளுகிறேன்".

*நூல்: நஸாஈ, பக்கம் 173.*

**வீட்டில் இருந்து புறப்படும்போது ஓதும் 'திக்ர்'**

بِسْمِ اللهِ تَوَكَّلْتُ عَلَى اللهِ وَلاَ حَوْلَ وَلاَ قُوَّةَ إِلاَّ بِاللهِ.

16. அல்லாஹ்வின் திருப்பெயர் கொண்டு.. அல்லாஹ்வின் மீதே நான் முழு நம்பிக்கை வைத்துள்ளேன். அல்லாஹ்வி(ன் உதவியும், பாதுகாப்புமி)ன்றி (நன்மைகள் செய்வதற்கு) எந்த ஆற்றலும் இல்லை,(தீமைகளை விட்டு விலக) எந்த சக்தியும் இல்லை.

*நூல்: அபூதாவூத் பாகம் 4 பக்கம் 325*
*திர்மிதி பாகம் 5 பக்கம் 490.*
*பார்க்க: ஸஹீஹுத் திர்மிதி*
*பாகம் 3 பக்கம் 151.*

اَللّٰهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ أَنْ أَضِلَّ، أَوْ أُضَلَّ، أَوْ أَزِلَّ، أَوْ أُزَلَّ أَوْ أَظْلِمَ، أَوْ أُظْلَمَ، أَوْ أَجْهَلَ، أَوْ يُجْهَلَ عَلَيَّ.

*17. "யா அல்லாஹ் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்; நான் வழிதவறிப் போவதில் இருந்தும்! அல்லது நான் வழிகெடுக்கப்படுவதில் இருந்தும்! அல்லது நான் வழிசறுகுவதில் இருந்தும் அல்லது வழிசறுக்கச் செய்யப்படுவதில் இருந்தும்! அல்லது நான் பிறர் மீது அநீதி இழைப்பதில் இருந்தும் அல்லது பிறர் என் மீது அநீதி இழைப்பதில் இருந்தும்! அல்லது நான் பிறரிடம் அறியாத்த னமாக நடப்பதில் இருந்தும் அல்லது என்னிடம் பிறர்*

*அறியாத்தனமாக நடப்பதில் இருந்தும் (உன்னிடம் நான் பாதுகாவல் தேடுகிறேன்)''*

*நூல்: அபூதாவூத், திர்மிதி, நஸாஈ இப்னுமாஜா. பார்க்க: ஸஹீஹுத் திர்மிதி பாகம் 3 பக்கம் 152 ஸஹீஹ் இப்னுமாஜா பாகம் 2 பக்கம் 336.*

### வீட்டில் நுழையும் போது ஓதும் திக்ர்

بِسْمِ اللهِ وَلَجْنَا ، وَبِسْمِ اللهِ خَرَجْنَا ، وَعَلَى رَبِّنَا تَوَكَّلْنَا .

18. "அல்லாஹ்வின் திருப்பெயர் கொண்டு பிரவேசித்தோம். அல்லாஹ்வின் திருப்பெயர் கொண்டு வெளியேறினோம். மேலும் எங்கள் இரட்சகன் மீதே முழு நம்பிக்கை வைத்துள்ளோம்". *நூல்: அபூதாவூத், பாகம் 4 பக்கம் 325*

### மஸ்ஜிதுககுப் போகும்போது ஓதும் துஆ

اَللّٰهُمَّ اجْعَلْ فِيْ قَلْبِيْ نُوْرًا ، وَفِيْ لِسَانِي نُوْرًا ، وَاجْعَلْ فِيْ سَمْعِيْ نُوْرًا ، وَاجْعَلْ فِيْ بَصَرِيْ نُوْرًا ، وَاجْعَلْ مِنْ خَلْفِيْ نُوْرًا ، وَمِنْ أَمَامِيْ نُوْرًا ، وَاجْعَلْ مِنْ فَوْقِيْ نُوْرًا وَمِنْ تَحْتِيْ نُوْرًا . اَللّٰهُمَّ أَعْطِنِيْ نُوْرًا .

*19. யா அல்லாஹ்! என் உள்ளத்தில் ஒளி வழங்குவா யாக. எனது நாவில் ஒளி வழங்குவாயாக. எனது செவியில் ஒளி வழங்குவாயாக. எனக்குப் பின்னால் ஒளி வழங்குவா யாக. எனக்கு முன்னால் ஒளி வழங்குவரயாக! எனக்கு*

மேலே ஒளி வழங்குவாயாக! எனக்குக் கீழே ஒளி வழங்கு வாயாக! யா அல்லாஹ் எனக்கு ஒளி வழங்குவாயாக!

*நூல்: முஸ்லிம் பாகம் 1 பக்கம் 530.*

*(புகாரியின் விரிவுரை ஃபத்ஹுல் பாரியில் சில பயனுள்ள வார்த்தைகள் கூடுதலாக உள்ளன. பாகம் 11 பக்கம் 116.)*

மஸ்ஜிதினுள் நுழையும் போது ஓதும் துஆ

أَعُوْذُ بِاللهِ الْعَظِيْمِ وَبِوَجْهِهِ الْكَرِيْمِ وَسُلْطَانِهِ الْقَدِيْمِ مِنَ الشَّيْطَانِ الرَّجِيْمِ ، بِسْمِ اللهِ ، وَالصَّلَاةُ [وَالسَّلَامُ عَلَى رَسُوْلِ اللهِ] ، اَللّٰهُمَّ افْتَحْ لِيْ أَبْوَابَ رَحْمَتِكَ .

20. மகத்துவம் கொண்ட அல்லாஹ்வைக் கொண்டும் அவனது திருமுகத்தைக் கொண்டும் அவனது நிலையான மேலாதிக்கத்தைக் கொண்டும் - விரட்டப்பட்ட ஷைத் தானை விட்டுப் பாதுகாப்புத் தேடுகிறேன். அல்லாஹ்வின் திருப்பெயர் கொண்டு (மஸ்ஜிதில் நுழைகிறேன்) இறையருளும் சாந்தியும் இறைத் தூதர் மீது உண்டாவதாக! யா அல்லாஹ்! எனக்காக உனது அருள்வாயில்களைத் திறந்துவிடுவாயாக!''

நூல்: அபூ தாவூத், ஸஹீஹுல் ஜாமிஃ, நூலில் பார்க்க ஹதீஸ் நம்பர்: 4591, இப்னு ஸுன்னீ ஹதீஸ் நம்பர் 88. நாஸிருத்தீன் அல்பானி அவர்கள் இந்த ஹதீஸை 'ஹஸன்' எனக் கூறியுள்ளார்கள்.

*அபூ தாவூத்: பாகம் 1 பக்கம் 126*
*முஸ்லிம்: பாகம் 1 பக்கம் 494*

*இப்னு மாஜாவில் ஃபாத்திமா (ரலி) அவர்களிடம் இருந்து இந்த துஆ அறிவிக்கப்பட்டுள்ளது:*

(பொருள்: *யா அல்லாஹ்! என்னுடைய பாவங்களை மன்னிப்பாயாக. எனக்கு உனது அருள் வாயில்களைத் திறந்துவிடுவாயாக)* அல்பானி அவர்கள், இதனைச் சான்றுகளின் அடிப்படையில் 'ஸஹீஹ்' என்று கூறியுள்ளார்கள்.

*பார்க்க: இப்னுமாஜா பாகம் 1 பக்கம் 128-129*

**மஸ்ஜிதில் இருந்து வெளியே வரும்போது ஓதவேண்டிய துஆ**

بِسْمِ اللهِ وَالصَّلَاةُ وَالسَّلَامُ عَلٰى رَسُولِ اللهِ ، اَللّٰهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ مِنْ فَضْلِكَ ، اَللّٰهُمَّ اعْصِمْنِيْ مِنَ الشَّيْطَانِ الرَّجِيْمِ .

*21. ''அல்லாஹ்வின் திருப்பெயரால்! இறையருளும் சாந்தியும் இறைத் தூதர் மீது உண்டாவதாக! யா அல்லாஹ் நான் உனது கிருபையை யாசிக்கிறேன். யா அல்லாஹ் விரட்டப்பட்ட ஷைத்தானை விட்டு என்னைப் பாதுகாப்பாயாக!*

***நூல்: எண் 20-ன் கீழ் உள்ள நூல்களைப் பார்க்க.***

மேலும் اَللّٰهُمَّ اعْصِمْنِيْ مِنَ الشَّيْطَانِ الرَّجِيْمِ எனும் வார்த்தைகள் இப்னு மாஜாவில் வந்துள்ளன. *இப்னு மாஜா பாகம் 1 பக்கம் 129.*

## பாங்கின் திக்ர்கள்

*22. (அ) பாங்கு சொல்பவருக்கான பதிலில் அவர் சொன்ன வார்த்தையினையே திரும்பச் சொல்ல வேண்டும். ஆனால்* حَيَّ عَلَى الصَّلَاةِ *மற்றும்* حَيَّ عَلَى الْفَلَاحِ *இவ்விரண்டின் பதிலில்:*

لَا حَوْلَ وَلَا قُوَّةَ اِلَّا بِاللهِ

என்று சொல்ல வேண்டும். (பொருள்:) அல்லாஹ்வி(ன் உதவியும், பாதுகாப்புமி)ன்றி (நன்மைகள் செய்வதற்கு) எந்த ஆற்றலும் இல்லை, தீமைகளை விட்டு விலக) எந்த சக்தியும் இல்லை.

*நூல்: புகாரி பாகம் 1 பக்கம் 152. முஸ்லிம் பாகம் 1 பக்கம் 288.*

*23. (ஆ) பாங்கு சொல்பவர்* اَشْهَدُ اَنْ لَا اِلٰهَ اِلَّا اللهُ *என்று மொழிந்ததும் அதற்கு பதிலில் பின்வரும் திக்ரைக் கூற வேண்டும்.*

وَاَنَا اَشْهَدُ اَنْ لَا اِلٰهَ اِلَّا اللهُ وَحْدَهُ لَا شَرِيْكَ لَهُ وَاَنَّ مُحَمَّدًا عَبْدُهُ وَرَسُوْلُهُ رَضِيْتُ بِاللهِ رَبًّا وَبِمُحَمَّدٍ رَسُوْلًا وَبِالْاِسْلَامِ دِيْنًا .

"மேலும் நானும் சாட்சியம் அளிக்கிறேன். அதாவது, வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை என்றும் முஹம்மத் நபி அல்லாஹ்வின் அடிமையாகவும் தூதராகவும் இருக்கிறார்கள் என்றும்! நான் அல்லாஹ்வை இரட்சகன் - அதிபதி என்றும் முஹம்மது

நபியை தூதர் என்றும் இஸ்லாத்தை இறைமார்க்கம் என்றும் பொருந்திக் கொண்டேன்.

நூல்: இப்னு ஹுஸைமா
பாகம் 1 பக்கம் 220
முஸ்லிம் பாகம் 1 பக்கம் 290.

24. (இ) பாங்கு சொல்பவருக்கு பதிலளித்த பிறகு நபி (ஸல்) அவர்கள் மீது ஸலவாத் சொல்ல வேண்டும்.

நூல்: முஸ்லிம் பாகம் 1 பக்கம் 288.

اَللّٰهُمَّ رَبَّ هٰذِهِ الدَّعْوَةِ التَّامَّةِ وَالصَّلَاةِ الْقَائِمَةِ آتِ
مُحَمَّدَنِ الْوَسِيْلَةَ وَالْفَضِيْلَةَ وَابْعَثْهُ مَقَامًا
مَحْمُوْدَنِ الَّذِي وَعَدْتَّهُ [إِنَّكَ لَا تُخْلِفُ الْمِيْعَادَ]

25. (ஈ) "யா அல்லாஹ்! இந்த முழுமையான அழைப்பு மற்றும் நிலையான தொழுகையின் இரட்சகனே; முஹம்மத் (ஸல்) அவர்களுக்கு பிரத்தியேக நெருக்கத்தையும் சிறப்பையும் வழங்குவாயாக! மேலும் 'மகாம் மஹ்மூத்' எனும் புகழுக்குரியதோர் இடத்தில் அவர்களை எழுப்புவாயாக! அவ்வாறே நீ வாக்குறுதி அளித்துள்ளாய்; திண்ணமாக நீ வாக்குறுதி மீறுவதில்லை!

நூல்: புகாரி பாகம் 1 பக்கம் 152

பிறை வளைவினுள் கொடுக்கப்பட்ட வார்த்தை பைஹகீ (பாகம் 1 பக்கம் 410) உடையதாகும். அதன் அறிவிப்பு உறுதியானது. பார்க்க: ஷைக் அப்துல் அஸீஸ்

இப்னு பாஸ் அவர்களின் 'துஹ்ஃபதுல் அக்யார்' எனும் நூலை!

26. (உ) பாங்கு - இகாமத் இரண்டிற்கும் இடைப்பட்ட நேரத்தில் கேட்கப்படும் துஆ மறுக்கப்படுவதில்லை.

நூல்: திர்மிதி, அபூ தாவூத், அஹ்மத்,
பார்க்க: இர்வாவுல் ஃகலீல்: பாகம் 1 பக்கம் 262

**தொழுகையை ஆரம்பம் செய்யும் போது ஓதும் துஆ**

27. அல்லாஹு அக்பர் என்று சொல்லித் தொழுகையை ஆரம்பம் செய்யவேண்டும். பிறகு பின்வரும் துஆக்களில் ஒன்றை ஓதவும்.

اَللّٰهُمَّ بَاعِدْ بَيْنِي وَبَيْنَ خَطَايَايَ كَمَا بَاعَدْتَ بَيْنَ الْمَشْرِقِ

وَالْمَغْرِبِ ، اَللّٰهُمَّ نَقِّنِي مِنْ خَطَايَايَ كَمَا يُنَقَّى الثَّوْبُ الْأَبْيَضُ

مِنَ الدَّنَسِ ، اَللّٰهُمَّ اغْسِلْنِي مِنْ خَطَايَايَ بِالثَّلْجِ وَالْمَاءِ وَالْبَرَدِ .

பொருள்: யா அல்லாஹ், எனக்கும் என்னுடைய தவறு களுக்கும் மத்தியில் இடைவெளியை அதிகப்படுத்துவா யாக! கிழக்கிற்கும் மேற்கிற்கும் மத்தியில் நீ இடைவெளி ஏற்படுத்தியது போன்று! யா அல்லாஹ், என்னுடைய தவறுகளை விட்டு என்னைத் தூய்மைப்படுத்துவாயாக! அழுக்கிலிருந்து வெண்ணிற ஆடையைத் தூய்மைப் படுத்து வது போன்று! யா அல்லாஹ் தண்ணீர், பனி, பனிக்கட்டி கொண்டு என்னைக் கழுவி என் குற்றங்களைப் போக்குவா யாக!

நூல்: புகாரி பாகம் 1 பக்கம் 181
முஸ்லிம் பாகம் 1 பக்கம் 419

سُبْحَانَكَ اللّٰهُمَّ وَبِحَمْدِكَ وَتَبَارَكَ اسْمُكَ وَتَعَالَى جَدُّكَ وَلَا إِلٰهَ غَيْرُكَ .

28. பொருள்: யா அல்லாஹ், உன்னைப் புகழ்வதுடன் துதிக்கவும் செய்கிறேன். உனது திருப்பெயர் அருட்பேறு உடையது. உனது ஆற்றல் மிகவும் உயர்ந்தது. உன்னைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறு யாரும் இல்லை.

நூல்: அபூதாவூத், திர்மிதி, நஸாஈ, இப்னுமாஜா.
பார்க்க: ஸஹீஹ் திர்மிதி, பாகம் 1 பக்கம் 77
ஸஹீஹ் இப்னுமாஜா பாகம் 1 பக்கம் 135

وَجَّهْتُ وَجْهِيَ لِلَّذِيْ فَطَرَ السَّمٰوَاتِ وَالْأَرْضَ حَنِيْفًا وَمَا أَنَا مِنَ الْمُشْرِكِيْنَ إِنَّ صَلَاتِيْ ، وَنُسُكِيْ ، وَمَحْيَايَ ، وَمَمَاتِيْ لِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ ، لَا شَرِيْكَ لَهُ وَبِذٰلِكَ أُمِرْتُ وَأَنَا مِنَ الْمُسْلِمِيْنَ اَللّٰهُمَّ أَنْتَ الْمَلِكُ لَا إِلٰهَ إِلَّا أَنْتَ . أَنْتَ رَبِّيْ وَأَنَا عَبْدُكَ ، ظَلَمْتُ نَفْسِيْ وَاعْتَرَفْتُ بِذَنْبِيْ فَاغْفِرْلِيْ ذُنُوْبِيْ جَمِيْعًا إِنَّهُ لَا يَغْفِرُ الذُّنُوْبَ إِلَّا أَنْتَ . وَاهْدِنِيْ لِأَحْسَنِ الْأَخْلَاقِ لَا يَهْدِيْ لِأَحْسَنِهَا إِلَّا أَنْتَ وَاصْرِفْ عَنِّيْ سَيِّئَهَا ، لَا يَصْرِفُ عَنِّيْ سَيِّئَهَا إِلَّا أَنْتَ لَبَّيْكَ وَسَعْدَيْكَ ، وَالْخَيْرُ كُلُّهُ بِيَدَيْكَ وَالشَّرُّ لَيْسَ إِلَيْكَ أَنَا بِكَ وَإِلَيْكَ تَبَارَكْتَ وَتَعَالَيْتَ أَسْتَغْفِرُكَ وَأَتُوْبُ إِلَيْكَ.

**29.** பொருள்: வானங்களையும் பூமியையும் படைத்த இறைவனின் பக்கம் எனது முகத்தை நான் திருப்பிவிட் டேன்; ஒருமுகப்பட்டவனாக! மேலும் நான், 'இணை வைத்து வணங்கக் கூடியவர்களைச் சேர்ந்தவனல்லன். திண் ணமாக எனது தொழுகையும் எனது குர்பானியும் எனது வாழ்வும் எனது மரணமும் - அகில உலகின் இரட்சகனாகிய அல்லாஹ்வுக்கே உரியனவாகும். அவனுக்கு யாதொரு இணையும் இல்லை. அதைக் கொண்டே நான் ஏவப்பட்டுள் ளேன். மேலும் முஸ்லிம்களில் ஒருவனாக இருக்கிறேன். யா அல்லாஹ் நீயே அரசன். வணக்கத்திற்குரிய இறைவன் உன்னைத் தவிர யாருமில்லை. நீயே என்னுடைய இரட்ச கன்; நான் உனது அடிமை! எனக்கு நானே அநீதி இழைத்துக் கொண்டேன்; எனது பாவத்தை நான் ஒப்புக் கொண்டேன். எனவே என் பாவங்கள் அனைத்தையும் மன்னித்தருள்வா யாக! ஏனெனில் பாவங்களை மன்னிப்பவர் உன்னைத் தவிர வேறு யாருமில்லை. மேலும் மிகச்சிறந்த குணவொழுக்கங் களின் பால் எனக்கு வழிகாட்டுவாயாக. நல்லொழுக்கங்க ளின் பால் வழிகாட்டுபவர் உன்னைத் தவிர வேறு யாரு மில்லை. தீய குணங்களை என்னை விட்டு அப்புறப்படுத்து வாயாக! தீய குணங்களை என்னை விட்டு அப்புறப்படுத்து பவர் உன்னைத் தவிர வேறு யாருமில்லை. இதோ நான் வந்து விட்டேன்; ஆஜராகி விட்டேன்! நன்மைகள் யாவும் உனது கைவசத்திலேயே உள்ளன. தீமைகள் உன் பால் சேர்க்கப்படுவதில்லை. நான் உன்னோடு இருக்கிறேன்; உன் பக்கம் விரைகிறேன்! நீ பாக்கியம் மிகுந்தவன்! உயர்வான வன்! நான் உன்னிடம் பாவமன்னிப்பு கோருகிறேன். மேலும் பாவமீட்சி தேடி உன்பக்கம் மீளுகிறேன்!

நூல்: முஸ்லிம்; பாகம் 1 பக்கம் 534.

اَللّٰهُمَّ رَبَّ جِبْرَائِيْلَ ، وَمِيْكَائِيْلَ ، وَإِسْرَافِيْلَ فَاطِرَ

السَّمٰوَاتِ وَالْأَرْضِ. عَالِمَ الْغَيْبِ وَالشَّهَادَةِ أَنْتَ تَحْكُمُ

بَيْنَ عِبَادِكَ فِيمَا كَانُوا فِيهِ يَخْتَلِفُونَ . اِهْدِنِيْ لِمَا اخْتُلِفَ فِيهِ مِنَ الْحَقِّ بِإِذْنِكَ إِنَّكَ تَهْدِيْ مَنْ تَشَاءُ إِلَى صِرَاطٍ مُسْتَقِيمٍ.

30. யா அல்லாஹ்! ஜிப்ரீல், மீகாயில், இஸ்ராஃபீல் ஆகியோரின் இரட்சகனே, வானங்களையும் பூமியையும் படைத்தவனே, மறைவானவை - வெளிப்படையானவை அனைத்தையும் அறிந்தவனே, உன் அடியார்கள் என்னென்ன விஷயங்களில் கருத்து வேறுபாடு கொண்டுள்ளார்களோ அவற்றில் அவர்களுக்கிடையே நீதான் தீர்ப்பளிப்பாய்! சத்தியத்தின் என்னென்ன விஷயங்களில் கருத்து வேறுபாடு ஏற்பட்டுள்ளதோ அவற்றில் சத்தியத்தின் பக்கம் - உனது அனுமதி கொண்டு எனக்கு நேர்வழி காட்டுவாயாக! திண்ணமாக நீ யாரை விரும்புகிறாயோ அவர்களுக்கு நேரான வழிகாட்டுகிறாய்''

நூல்: முஸ்லிம் பாகம் 1 பக்கம் 534

اَللهُ اَكْبَرُ كَبِيْرًا ، اَللهُ اَكْبَرُ كَبِيْرًا ، اَللهُ اَكْبَرُ كَبِيْرًا ،

وَالْحَمْدُ لِلّٰهِ كَثِيْرًا ، وَالْحَمْدُ لِلّٰهِ كَثِيْرًا، وَالْحَمْدُ لِلّٰهِ كَثِيْرًا ، وَالْحَمْدُ لِلّٰهِ كَثِيْرًا ، وَسُبْحَانَ اللهِ بُكْرَةً وَأَصِيْلًا (٣) أَعُوْذُ بِاللهِ مِنَ الشَّيْطَانِ مِنْ نَفْخِهِ وَنَفْثِهِ وَهَمْزِهِ.

-31. அல்லாஹ் அனைவரினும் பெரியவன்; மிகப் பெரிய வன். அல்லாஹ் அனைவரினும் பெரியவன் - மிகப்பெரிய வன். அல்லாஹ் அனைவரினும் பெரியவன் - மிகப்பெரிய வன். எல்லாப்புகழும் அல்லாஹ்வுக்கே என அதிகம் புகழ்கி றேன்! எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே என அதிகம் புகழ்கி றேன். காலையிலும், மாலையிலும் அல்லாஹ்வைத் தூயவன் எனத் துதிக்கிறேன். ஷைத்தானை விட்டும், அவனது ஊதலைவிட்டும், துப்பலுடன் கூடிய ஊதலைவிட்டும், அவனது ஊசலாட்டத்தை விட்டும் அல்லாஹ்விடம் நான் பாதுகாவல் தேடுகிறேன்.

நூல்: அபூதாவூத்; பாகம் 1 பக்கம் 203
இப்னுமாஜா பாகம் 1 பக்கம் 265
அஹ்மத் பாகம் 4 பக்கம் 85

மேலும் இமாம் முஸ்லிம் (ரஹ்) அவர்கள் இதனை இப்னு உமர் (ரலி) அவர்களிடம் இருந்து அறிவித்துள்ளார் கள். அதாவது, ஒரு தடவை நாங்கள் நபி (ஸல்) அவர்களு டன் தொழுகையில் இருந்தோம். அப்போது ஒரு மனிதர்,

اَللّٰهُ اَكْبَرُ كَبِيْرًا وَالْحَمْدُ لِلّٰهِ كَثِيْرًا وَسُبْحَانَ اللّٰهِ بُكْرَةً وَّاَصِيْلًا

என்று கூறினார்: நபி (ஸல்) அவர்கள் இந்த வார்த்தைகளை மொழிந்தவர் யார்? என்று கேட்டார்கள். அதற்கு அங்கிருந்த வர்களில் ஒருவர் ''நான்தான்'' என்று சொன்னார். ''இந்த வார்த்தைகளைக் குறித்து எனக்கு ஆச்சரியம் ஏற்பட்டது; இவற்றிற்காக வானத்தின் கதவுகள் திறந்து விடப்பட்டன'' என்று நபியவர்கள் மொழிந்தார்கள்''.

நூல்: முஸ்லிம்; பாகம் 1 பக்கம் 420.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இரவில் தஹஜ்ஜுத் தொழுகைக்காக விழிக்கும் போது இவ்வாறு கூறுவார்கள்:

اَللّٰهُمَّ لَكَ الْحَمْدُ أَنْتَ نُوْرُ السَّمٰوَاتِ وَالْأَرْضِ وَمَنْ فِيْهِنَّ ،
وَلَكَ الْحَمْدُ أَنْتَ قَيِّمُ السَّمٰوَاتِ وَالْأَرْضِ وَمَنْ فِيْهِنَّ ،[وَلَكَ
الْحَمْدُ أَنْتَ رَبُّ السَّمٰوَاتِ وَالْأَرْضِ وَمَنْ فِيْهِنَّ ] [وَلَكَ
الْحَمْدُ ] لَكَ مُلْكُ السَّمٰوَاتِ وَالْأَرْضِ وَمَنْ فِيْهِنَّ وَلَكَ الْحَمْدُ
أَنْتَ مَلِكُ السَّمٰوَاتِ وَالْأَرْضِ وَمَنْ فِيْهِنَّ [أَنْتَ الْحَقُّ ،
وَوَعْدُكَ الْحَقُّ ، وَقَوْلُكَ الْحَقُّ ، وَلِقَاؤُكَ الْحَقُّ ، وَالْجَنَّةُ حَقٌّ ،
وَالنَّارُ حَقٌّ ، وَالنَّبِيُّوْنَ حَقٌّ ، وَمُحَمَّدٌ حَقٌّ ، وَالسَّاعَةُ حَقٌّ ]
[اَللّٰهُمَّ لَكَ أَسْلَمْتُ ، وَعَلَيْكَ تَوَكَّلْتُ ، وَبِكَ آمَنْتُ ،
وَإِلَيْكَ أَنَبْتُ وَبِكَ خَاصَمْتُ ، وَإِلَيْكَ حَاكَمْتُ. فَاغْفِرْ لِيْ
مَا قَدَّمْتُ ، وَمَا أَخَّرْتُ ، وَمَا أَسْرَرْتُ ، وَمَا أَعْلَنْتُ] [أَنْتَ
الْمُقَدِّمُ ، وَأَنْتَ الْمُؤَخِّرُ لَا إِلٰهَ إِلَّا أَنْتَ ] [ أَنْتَ إِلٰهِيْ لَا إِلٰهَ إِلَّا أَنْتَ]

32. பொருள்: *யா அல்லாஹ், அனைத்துப் புகழும் உனக்கே!* நீயே வானங்கள் மற்றும் பூமியின் ஒளி ஆவாய். அவற்றில் இருப்பவர்களின் ஒளி ஆவாய். உனக்கே புகழ் அனைத்தும்! வானங்களையும் பூமியையும் அவற்றில் வசிப்பவர்களை யும் நிர்வகிப்பவன் நீயே! உனக்கே அனைத்துப் புகழும்! வானங்கள் மற்றும் பூமியின் இரட்சகன் நீயே. அவற்றில் வசிப்பவர்களின் இரட்சகன் நீயே! எல்லாப் புகழும் உனக்கே! நீயே சத்தியமானவன். உனது வாக்குறுதி சத்திய

மானது. உனது சொல் சத்தியமானது. உனது சந்திப்பு சத்தியமானது. சுவனம் சத்தியமானது; நரகம் சத்தியமானது. நபிமார்கள் சத்தியமானவர்கள்! முஹம்மத் சத்தியமானவர் கள். மறுமை சத்தியமானது. யா அல்லாஹ், நான் உனக்கே கீழ்ப்படிந்தேன். உன் மீதே முழு நம்பிக்கையும் வைத்துள் ளேன். உன்மீதே விசுவாசங்கொண்டேன். மேலும் உன் பக்கமே மீண்டேன். உனது உதவி கொண்டே (எதிரிகளுடன்) வழக் காடினேன். உன்பக்கமே தீர்ப்புக்காக முறையிட்டேன். நான் முன்னர் செய்த பாவங்களையும் பின்னர் செய்தவற்றையும் நான் மறைவாகச் செய்த பாவங்களையும் பகிரங்கமாகச் செய்தவற்றையும் எனக்காக மன்னித்தருள்வாயாக! நீயே எனது வணக்கத்திற்குரிய, உண்மையான இறைவன். வணக் கத்திற்குரிய இறைவன் உன்னைத் தவிர வேறு யாரும் இல்லை!

நூல்: புகாரி, பத்ஹுல் பாரி பாகம் *11* பக்கம் *464*
பாகம் *13* பக்கம் *116*.

*(இந்த வார்த்தைகள் புகாரியில் இரண்டு இடங்களில் இருந்து எடுக்கப்பட்டுள்ளன).*

*முஸ்லிம் பாகம் 1 பக்கம் 532*

**ருகூவின் போது ஓதும் துஆ**

سُبْحَانَ رَبِّيَ الْعَظِيْمِ

33. மகத்துவமிக்க என் இரட்சகனைத் தூயவன் எனத் துதிக்கிறேன். *(குறைந்தபட்சம் 3 தடவை)*

நூல்: அபூதாவூத், திர்மிதி, நஸாஈ, இப்னுமாஜா, அஹ்மத், ஸஹீஹுத் திர்மிதி பாகம் 1 பக்கம் 83

سُبْحَانَكَ اللّٰهُمَّ رَبَّنَا وَبِحَمْدِكَ اَللّٰهُمَّ اغْفِرْلِي

*34.* தூய்மையானவன் நீ, யா அல்லாஹ்! எங்களின் இரட்சகனே! மேலும் உன்னைப் புகழ்கிறேன் துதிக்கிறேன். யா அல்லாஹ் என்னை மன்னித்தருள்வாயாக!

நூல்: புகாரி, பாகம் 1 பக்கம் 199
முஸ்லிம், பாகம் 1 பக்கம் 350.

سُبُّوحٌ قُدُّوسٌ رَبُّ الْمَلَائِكَةِ وَالرُّوحِ

*35.* ''மிகவும் தூய்மையானவன்; மிகவும் புனிதமான வன்; மலக்குகள் மற்றும் ஜிப்ரீல் உடைய இரட்சகன்!''

நூல்: முஸ்லிம் பாகம் 1 பக்கம் 353

اَللّٰهُمَّ لَكَ رَكَعْتُ ، وَبِكَ آمَنْتُ ، وَلَكَ أَسْلَمْتُ خَشَعَ لَكَ سَمْعِي ، وَبَصَرِي ، وَمُخِّي ، وَعَظْمِي ، وَعَصَبِي ، وَمَا اسْتَقَلَّ بِهِ قَدَمِي

*36.* ''யா அல்லாஹ்! நான் உனக்காகவே குனிந்தேன். உன்மீதே விசுவாசம் கொண்டேன். உனக்கே அடிபணிந் தேன். எனது செவிப் புலனும் பார்வையும் எலும்பின் உள்ளிருக்கும் சத்தும் எலும்புகளும் நரம்புகளும் எனது பாதம் தாங்கி நிற்கக் கூடிய எனது உடலும் - அனைத்தும் உனக்குப் பயந்து பணிந்து விட்டன!''

நூல்: முஸ்லிம் பாகம் 1 பக்கம் 534
நஸாஈ, திர்மிதி, அபூ தாவூத்

سُبْحَانَ ذِي الْجَبَرُوْتِ وَالْمَلَكُوْتِ ، وَالْكِبْرِيَاءِ ، وَالْعَظَمَةِ

37. "அடக்கியாளும் திறனும் ஆட்சியதிகாரமும் உடைய பெருமையும் மகத்துவமும் உடைய, இறைவன் தூய்மையானவன்".

நூல்: அபூ தாவூத் பாகம் 1 பக்கம் 230 நஸாஈ, அஹ்மத்

ருகூவில் இருந்து எழும்போது ஓதும் துஆ

سَمِعَ اللّٰهُ لِمَنْ حَمِدَهُ

38. தன்னைப் புகழ்வதை அல்லாஹ் கேட்டுக் கொண்டான்.

நூல்: ஃபத்ஹுல் பாரீ பாகம் 2 பக்கம் 282.

رَبَّنَا وَلَكَ الْحَمْدُ حَمْدًا كَثِيرًا طَيِّبًا مُبَارَكًا فِيهِ

39. எங்கள் இரட்சகனே, மேலும் புகழ் அனைத்தும் உனக்கே; அருட்பேறும் அழகும் மிக்க அதிகமான புகழ் (உனக்கே)

நூல்: ஃபத்ஹுல் பாரீ பாகம் 2 பக்கம் 284.

مِلْءَ السَّمٰوَاتِ وَمِلْءَ الْأَرْضِ وَمَا بَيْنَهُمَا وَمِلْءَ مَا شِئْتَ مِنْ شَيْءٍ بَعْدُ. أَهْلَ الثَّنَاءِ وَالْمَجْدِ أَحَقُّ مَا قَالَ الْعَبْدُ وَكُلُّنَا لَكَ عَبْدٌ. اَللّٰهُمَّ لَا مَانِعَ لِمَا أَعْطَيْتَ وَلَا مُعْطِيَ لِمَا مَنَعْتَ وَلَا يَنْفَعُ ذَا الْجَدِّ مِنْكَ الْجَدُّ.

40. வானங்கள் நிரம்ப, பூமி நிரம்ப, அவற்றில் உள்ள பொருட்கள் நிரம்ப இதற்குப் பிறகு நீ விரும்பும் அத்தனை பொருட்கள் நிரம்ப (அனைத்துப் புகழும் உனக்கே) புகழுக்

கும் கீர்த்திக்கும் உரியவன் நீ; இது அடியான் கூறுவதற்கு மிகவும் தகுதி வாய்ந்ததாகும். நாங்கள் அனைவரும் உனக்கு அடிமைகளே! யா அல்லாஹ் நீ கொடுத்ததைத் தடுப்பவர் யாருமில்லை. நீ தடுத்ததைக் கொடுப்பவர் யாருமில்லை. செல்வம் உடையவர் எவரையும் அவரது செல்வம், உனது தண்டனையில் இருந்து காத்திட முடியாது''

நூல்: முஸ்லிம் பாகம் 1 பக்கம் 346.

**ஸுஜூதின் துஆ**

سُبْحَانَ رَبِّيَ ٱلأَعْلَى

*41. மிக உயர்ந்தவனாகிய என் இரட்சகன் தூய்மையான வன் (குறைந்த பட்சம் 3 தடவை)*

நூல்:அபூதாவூத், நஸாஈ, இப்னுமாஜா ஸஹீஹுத் திர்மிதி பாகம் 1 பக்கம் 83

سُبْحَانَكَ اللّٰهُمَّ رَبَّنَا وَبِحَمْدِكَ اللّٰهُمَّ اغْفِرْلِي

42. ''யா அல்லாஹ்! எங்கள் ரட்சகனாகிய உன்னைப் புகழ்வதுடன் தூயவன் எனத் துதிக்கவும் செய்கிறோம். யா அல்லாஹ் என்னை மன்னித்தருள்வாயாக!''

நூல்: புகாரி, முஸ்லிம் (பார்க்க நம்பர் 34)

سُبُّوحٌ قُدُّوسٌ رَبُّ ٱلْمَلَائِكَةِ وَالرُّوحِ

43. ''மிகவும் தூய்மையானவன்; மிகவும் புனிதமான வன், மலக்குகள் மற்றும் ஜிப்ரீலுடைய இரட்சகன்''

நூல்: முஸ்லிம் பார்க்க: எண் 35

اَللّٰهُمَّ لَكَ سَجَدْتُ وَبِكَ آمَنْتُ ، وَلَكَ أَسْلَمْتُ سَجَدَ وَجْهِيَ لِلَّذِيْ خَلَقَهُ وَصَوَّرَهُ وَشَقَّ سَمْعَهُ وَبَصَرَهُ تَبَارَكَ اللهُ أَحْسَنُ الْخَالِقِيْنَ))

44. ''யா அல்லாஹ்! உனக்கே நான் ஸுஜூது செய்தேன். உன் மீதே நான் விசுவாசம் கொண்டேன். உனது கட்டளைக்கே நான் கீழ்ப்பட்டிருந்தேன். எனது முகம் - அதனைப் படைத்து அதன் தோற்றத்தை அமைத்து அதன் கண்களுக்கும் காதுகளுக்கும் வழிஅமைத்துக் கொடுத்த இறைவனுக்கு ஸுஜூது செய்து விட்டது! படைப்பாளர்கள் அனைவரினும் சிறந்தவனாகிய இறைவன் அருட்பாக்கியம் உடையவனாவான்''.

நூல்: முஸ்லிம் பாகம் 1 பக்கம் 534.

سُبْحَانَ ذِي الْجَبَرُوْتِ وَالْمَلَكُوْتِ ، وَالْكِبْرِيَاءِ ، وَالْعَظَمَةِ

45. அடக்கியாளும் திறனும் பெரும் ஆட்சியதிகாரமும் உடையவனாகிய மேலும் பெருமையும் மகத்துவமும் கொண்டவனாகிய இறைவன் தூய்மையானவன்''.

நூல்: அபூதாவூத் பாகம் 1 பக்கம் 230 நஸாஈ, அஹ்மத்.

اَللّٰهُمَّ اغْفِرْلِيْ ذَنْبِيْ كُلَّهُ ، دِقَّهُ وَجُلَّهُ وَأَوَّلَهُ وَآخِرَهُ وَعَلَانِيَتَهُ وَسِرَّهُ

*46. ''யா அல்லாஹ்! என் பாவம் அனைத்தையும் சிறிய, பெரிய, முந்தைய, பிந்தைய, வெளிப்படையான, இரகசியமான எல்லாப் பாவங்களையும் மன்னித்தருள்வா யாக!''*

*நூல்: முஸ்லிம் பாகம் 1 பக்கம் 350.*

اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِرِضَاكَ مِنْ سَخَطِكَ ، وَبِمُعَافَاتِكَ مِنْ عُقُوْبَتِكَ وَأَعُوْذُ بِكَ مِنْكَ ، لَا أُحْصِيْ ثَنَاءً عَلَيْكَ أَنْتَ كَمَا أَثْنَيْتَ عَلَى نَفْسِكَ ))

47. ''யா அல்லாஹ்! உனது திருப்பொருத்தத்தைக் கொண்டு உனது கோபத்தை விட்டும், உனது மன்னிப்பைக் கொண்டு உனது தண்டனையை விட்டும் உன்னைக் கொண்டு நான் பாதுகாப்பு கோருகிறேன். உன்னை முழு மையாகப் புகழ்ந்திட என்னால் முடியாது! நீயே உன்னைப் புகழ்ந்தது போன்று முழுப் புகழுக்குரியவனாக நீ இருக்கின் றாய்!''

*நூல்: முஸ்லிம் பாகம் 1 பக்கம் 352*

**இரு ஸஜ்தாவுக்கு மத்தியில் ஓதும் துஆ**

رَبِّ اغْفِرْلِيْ رَبِّ اغْفِرْلِيْ "

*48. என் இரட்சகனே! என்னை மன்னித்தருள்வாயாக! என் இரட்சகனே! என்னை மன்னித்தருள்வாயாக!*

*நூல்: அபூதாவூத் பாகம் 1 பக்கம் 231*
*பார்க்க: இப்னு மாஜா பாகம் 1 பக்கம் 148.*

اَللّٰهُمَّ اغْفِرْلِي ، وَارْحَمْنِيْ وَاهْدِنِيْ وَاجْبُرْنِيْ وَعَافِنِيْ وَارْزُقْنِيْ ،
وَارْفَعْنِيْ

*49.* என் இரட்சகனே, என்னை மன்னித்தருள், எனக்கு கிருபை செய். எனக்கு நேர்வழி காட்டிடு. எனக்கு ஆறுதல் அளித்திடு. எனக்கு சுகம் அளித்திடு; எனக்கு ரிஜ்க் வழங்கு! எனக்கு உயர்வு அளி.

நூல்: அபூ தாவூத், திர்மிதி, இப்னு மாஜா, பார்க்க ஸஹீஹ் திர்மிதி பாகம் *1* பக்கம் *90.* ஸஹீஹ் இப்னு மாஜா பாகம் *1* பக்கம் *148.*

## குர்ஆனின் ஸஜ்தாவின் போது ஓதும் துஆ

سَجَدَ وَجْهِيَ لِلَّذِيْ خَلَقَهُ ، وَشَقَّ سَمْعَهُ وَبَصَرَهُ بِحَوْلِهِ وَقُوَّتِهِ
فَتَبَارَكَ اللّٰهُ أَحْسَنُ الْخَالِقِيْنَ

*50.* ''எனது முகம் - அதனைப் படைத்து, தனது ஆற்றலாலும் சக்தியாலும் அதன் காது - கண் புலன்களுக்கு வழி அமைத்துக் கொடுத்த இறைவனுக்கு ஸஜ்தா செய்து விட்டது. படைப்பாளர்கள் அனைவரினும் சிறந்தவனாகிய அல்லாஹ் பாக்கியம் உடையவன்!''

நூல்: திர்மிதி பாகம் *2* பக்கம் *474*
அஹ்மத் பாகம் *6* பக்கம் *30*

ஹாகிம் இதனை அறிவித்திருப்பதுடன் நம்பகமான ஹதீஸ் என்றும் கூறியுள்ளார். ஜஹபி இதற்கு உடன்பட்டிருக்கிறார்கள். فَتَبَارَكَ اللّٰهُ أَحْسَنُ الْخَالِقِيْنَ எனும் வார்த்தையும் ஹாகிம் அறிவித்திருப்பதாகும்.

اَللّٰهُمَّ اكْتُبْ لِيْ بِهَا عِنْدَكَ أَجْراً ، وَضَعْ عَنِّيْ بِهَا وِزْراً ، وَاجْعَلْهَا لِيْ عِنْدَكَ ذُخْراً ، وَتَقَبَّلْهَا مِنِّيْ كَمَا تَقَبَّلْتَهَا مِنْ عَبْدِكَ دَاوُدَ ))

*51.* ''யா அல்லாஹ், இந்த ஸஜ்தாவுக்குப் பகரமாக உன்னிடத்தில் எனக்கு நற்கூலி எழுதுவாயாக. மேலும் இதன் மூலம் என்னை விட்டு (பாவங்களின்) சுமையை இறக்குவாயாக! மேலும் இதனை உன்னிடத்தில் எனக்காக பொக்கிஷமாக ஆக்குவாயாக. உன் அடியார் தாவூத் இடமிருந்து இதனை நீ ஏற்றுக் கொண்டதுபோன்று என்னிடமிருந்தும் ஏற்றுக் கொள்வாயாக''.

நூல்: திர்மிதி பாகம் 2 பக்கம் 473. ஹாகிம் அவர்கள் இதனை நம்பகமானது என்று கூறியுள்ளார்கள்.

## அத்தஹிய்யாத்

اَلتَّحِيَّاتُ لِلّٰهِ ، وَالصَّلَوَاتُ ، وَالطَّيِّبَاتُ ، اَلسَّلَامُ عَلَيْكَ أَيُّهَا النَّبِيُّ وَرَحْمَةُ اللّٰهِ وَبَرَكَاتُهُ ، اَلسَّلَامُ عَلَيْنَا وَعَلٰى عِبَادِ اللّٰهِ الصَّالِحِيْنَ . أَشْهَدُ أَنْ لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ وَأَشْهَدُ أَنَّ مُحَمَّداً عَبْدُهُ وَرَسُوْلُهُ

*52. ("காணிக்கைகள், வணக்கங்கள் மற்றும் நற்பணி கள் அனைத்தும் அல்லாஹ்வுக்கே உரியனவாகும். நபியே, அமைதியும் அல்லாஹ்வின் கருணையும் அருட்பேறுகளும் உங்கள் மீது உண்டாகட்டும். எங்கள் மீதும் அல்லாஹ்வின் நல்லடியார்கள் மீதும் அமைதி உண்டாகட்டும். வணக்கத் திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை என்றும் முஹம்மத் நபி அவர்கள் அல்லாஹ்வின் அடியாரும் தூதரும் ஆவார்கள் என்றும் நான் சாட்சியம் கூறுகிறேன்")*

*நூல்: ஃபத்ஹுல் பாரி பாகம் 11 பக்கம் 13 முஸ்லிம் பாகம் 1 பக்கம் 301 அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத்.*

**அத்தஹிய்யாத் ஓதியபின் நபி மீது ஸலவாத்து**

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ وَعَلٰى آلِ مُحَمَّدٍ كَمَا صَلَّيْتَ عَلٰى إِبْرَاهِيْمَ وَعَلٰى آلِ إِبْرَاهِيْمَ إِنَّكَ حَمِيْدٌ مَجِيْدٌ، اَللّٰهُمَّ بَارِكْ عَلٰى مُحَمَّدٍ وَعَلٰى آلِ مُحَمَّدٍ كَمَا بَارَكْتَ عَلٰى إِبْرَاهِيْمَ وَعَلٰى آلِ إِبْرَاهِيْمَ إِنَّكَ حَمِيْدٌ مَجِيْدٌ

*53. (யா அல்லாஹ்! முஹம்மத் நபி மீதும் அவர்களின் வழிவந்தவர்கள் மீதும் கருணை பொழிவாயாக; இப்றாஹீம் நபி மீதும் அவர்களின் வழிவந்தவர்கள் மீதும் நீ கருணை பொழிந்தது போன்று! நிச்சயமாக நீ புகழுக்கும் மகத்துவத்திற்கும் உரியவன். யா அல்லாஹ்! முஹம்மத் நபி மீதும் அவர்களின் வழிவந்தவர்கள் மீதும் நீ அருட்பேறுகள் பொழிவாயாக; இப்றாஹீம் நபி மீதும் அவர்கள் வழிவந்த*

வர்கள் மீதும் நீ அருட்பேறுகள் பொழிந்தது போன்று! நிச்சயமாக நீயே புகழுக்கும் மகத்துவத்திற்கும் உரியவன்)

நூல்: ஃபத்ஹுல்பாரி பாகம் 6 பக்கம் 407
முஸ்லிம் பாகம் 1 பக்கம் 306.

இறுதி அத்தஹிய்யாத்க்குப் பிறகு ஸலாமுக்கு முன் ஓதும் துஆ

اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنْ عَذَابِ الْقَبْرِ ، وَمِنْ عَذَابِ جَهَنَّمَ ، وَمِنْ فِتْنَةِ الْمَحْيَا وَالْمَمَاتِ ، وَمِنْ شَرِّ فِتْنَةِ الْمَسِيْحِ الدَّجَّالِ

54 & 55. (யா அல்லாஹ்! மண்ணறையின் வேதனையில் இருந்தும் நரகத்தின் வேதனையில் இருந்தும் வாழ்க்கை மற்றும் மரணத்தின் குழப்பத்தில் இருந்தும் தஜ்ஜாலின் குழப்பத்தில் இருந்தும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகி றேன்.)

நூல்: புகாரி பாகம் 2 பக்கம் 102
முஸ்லிம் பாகம் 1 பக்கம் 412.

اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنْ عَذَابِ الْقَبْرِ ، وَأَعُوْذُ بِكَ مِنْ فِتْنَةِ الْمَسِيْحِ الدَّجَّالِ ، وَأَعُوْذُ بِكَ مِنْ فِتْنَةِ الْمَحْيَا وَالْمَمَاتِ. اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنَ الْمَأْثَمِ وَالْمَغْرَمِ

*56. (யா அல்லாஹ்! மண்ணறையின் வேதனையில் இருந்து நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். தஜ்ஜா லின் குழப்பத்தில் இருந்தும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். வாழ்வு மற்றும் மரணத்தின் குழப்பத்தில் இருந்தும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். பாவம் மற்றும் கடனில் இருந்தும் நான் பாதுகாவல் தேடுகிறேன்.)*

நூல்: புகாரி பாகம் 1 பக்கம் 202.
முஸ்லிம் பாகம் 1 பக்கம் 412.

اَللّٰهُمَّ إِنِّيْ ظَلَمْتُ نَفْسِيْ ظُلْمًا كَثِيْرًا وَلَا يَغْفِرُ الذُّنُوْبَ إِلَّا أَنْتَ
فَاغْفِرْلِيْ مَغْفِرَةً مِنْ عِنْدِكَ وَارْحَمْنِيْ إِنَّكَ أَنْتَ الْغَفُوْرُ الرَّحِيْمُ

*57. (யா அல்லாஹ்! எனக்கு நானே அதிக அளவு அநீதி இழைத்து விட்டேன். பாவங்களை மன்னிப்பவர் உன்னைத் தவிர யாரும் இல்லை. எனவே உனது பிரத்யேக மன்னிப் பில் என்னை மன்னித்தருள்வாயாக! மேலும் என் மீது அருள்பொழிவாயாக! திண்ணமாக நீயே அதிகம் மன்னிப்பு வழங்குபவன். கருணை பொழிபவன்.)*

நூல்: புகாரி, பக்கம் 8. பக்கம் 168
முஸ்லிம் பாகம் 4 பக்கம் 2078.

اَللّٰهُمَّ اغْفِرْ لِيْ مَا قَدَّمْتُ ، وَمَا أَخَّرْتُ ، وَمَا أَسْرَرْتُ ،
وَمَا أَعْلَنْتُ ، وَمَا أَسْرَفْتُ ، وَمَا أَنْتَ أَعْلَمُ بِهِ مِنِّيْ .
أَنْتَ الْمُقَدِّمُ ، وَأَنْتَ الْمُؤَخِّرُ لَا إِلٰهَ إِلَّا أَنْتَ

*58. (யா அல்லாஹ்! நான் முன்னர் செய்தவற்றையும் பின்னர் செய்தவற்றையும் இரகசியமாய்ச் செய்தவற்றையும் அதிகப்படியாகச் செய்தவற்றையும் மேலும் எந்தப் பிழை களை நீ என்னைவிட அதிகம் அறிந்துள்ளாயோ அந்தப் பிழைகளையும் நீ மன்னிப்பாயாக! முன்னதாக அல்லது தாமதமாக ஏற்பட்ட அனைத்துப் பொருட்களையும் உரு வாக்கியவன் நீயே! உன்னைத் தவிர வேறு இறைவன் இல்லை)*

*நூல்: முஸ்லிம் பாகம் 1 பக்கம் 534.*

اَللّٰهُمَّ اَعِنِّيْ عَلٰى ذِكْرِكَ ، وَشُكْرِكَ ، وَحُسْنِ عِبَادَتِكَ

*59. (யா அல்லாஹ்! உன்னை நினைவு கூர்வதற்கும் உனக்கு நன்றி செலுத்துவதற்கும் நல்ல முறையில் உனக்கு வழிபாடு செலுத்துவதற்கும் எனக்கு நீ உதவி செய்தருள்வா யாக!)*

*நூல்: அபூ தாவூத் பாகம் 2 பக்கம் 86*
*நஸாஈ பாகம் 3 பக்கம் 53*

اَللّٰهُمَّ إِنِّيٓ أَعُوذُ بِكَ مِنَ الْبُخْلِ ، وَأَعُوذُ بِكَ مِنَ الْجُبْنِ ، وَأَعُوذُ بِكَ مِنْ أَنْ أُرَدَّ إِلٰى أَرْذَلِ الْعُمُرِ ، وَأَعُوذُ بِكَ مِنْ فِتْنَةِ الدُّنْيَا وَعَذَابِ الْقَبْرِ

*60 & 61. (யா அல்லாஹ்! திண்ணமாக நான் கஞ்சத்த னத்தை விட்டு உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். மேலும் கோழைத் தனத்தை விட்டும் உன்னிடம் பாதுகாப் புத் தேடுகிறேன். மேலும் அதிமுதிர்ந்த வயது வரையில் எனது வாழ்வு நீடிக்கச் செய்யப்படுவதை விட்டும் நான் உன்னைக் கொண்டு பாதுகாவல் தேடுகிறேன். மேலும் உலகத்தின் குழப்பத்தை விட்டும் மண்ணறையின் வேதனையை விட் டும் உன்னைக் கொண்டு நான் பாதுகாவல் தேடுகிறேன்")*

*நூல்: அபூ தாவூத், ஸஹீஹ் இப்னுமாஜா பாகம் 2 பக்கம் 328.*

اَللّٰهُمَّ بِعِلْمِكَ الْغَيْبَ وَقُدْرَتِكَ عَلَى الْخَلْقِ أَحْيِنِيْ مَا عَلِمْتَ الْحَيَاةَ خَيْرًا لِي وَتَوَفَّنِيْ إِذَا عَلِمْتَ الْوَفَاةَ خَيْرًا لِي اَللّٰهُمَّ إِنِّي أَسْأَلُكَ خَشْيَتَكَ فِي الْغَيْبِ وَالشَّهَادَةِ ، وَأَسْأَلُكَ كَلِمَةَ الْحَقِّ فِي الرِّضَا وَالْغَضَبِ ، وَأَسْأَلُكَ الْقَصْدَ فِي الْغِنٰى وَالْفَقْرِ

وَأَسْأَلُكَ نَعِيمًا لَا يَنْفَدُ ، وَأَسْأَلُكَ قُرَّةَ عَيْنٍ لَا تَنْقَطِعُ، وَأَسْأَلُكَ الرِّضَا بَعْدَ الْقَضَاءِ ، وَأَسْأَلُكَ بَرْدَ الْعَيْشِ بَعْدَ الْمَوْتِ ، وَأَسْأَلُكَ لَذَّةَ النَّظَرِ إِلَىٰ وَجْهِكَ وَالشَّوْقَ إِلَىٰ لِقَائِكَ فِيْ غَيْرِ ضَرَّاءَ مُضِرَّةٍ وَلَا فِتْنَةٍ مُضِلَّةٍ اَللّٰهُمَّ زَيِّنَّا بِزِيْنَةِ الْإِيْمَانِ وَاجْعَلْنَا هُدَاةً مُهْتَدِيْنَ

62. (யா அல்லாஹ்! மறைவானவற்றை நீ அறிவது கொண்டும் படைப்பினங்களின் மீது நீ கொண்டுள்ள ஆற்றல் கொண்டும் நான் பிரார்த்தனை செய்கிறேன். வாழ்வு எனக்குச் சிறந்தது என நீ அறியும் காலம் வரை என்னை வாழவைப்பாயாக! மரணம் எனக்குச் சிறந்தது என நீ அறியும்போது என்னை மரணிக்கச் செய்வாயாக! யா அல்லாஹ்! மறைவான நிலையிலும் வெளிப்படையான நிலையிலும் உனக்கு நான் அஞ்சி வாழுமாறு செய்வாயாக! சாந்தமான நிலையிலும் கோபத்தின் போதும் சத்தியத்தை மொழியும் பாக்கியத்தை உன்னிடம் கோருகிறேன். வசதியின் போதும் வறுமையிலும் நடுநிலை தவறா நிலையைக் கேட்கிறேன். மேலும் முடிவுறாத அருட் பாக்கியத்தை உன்னிடம் யாசிக்கிறேன். முடிவுறாத கண்குளிர்ச்சியையும் உன்னிடம் யாசிக்கிறேன். மேலும் உனது தீர்ப்பின் மீது திருப்தி கொள்ளும் நிலையை உன்னிடம் கேட்கிறேன். மேலும் மரணத்தின் பின் இதமான வாழ்க்கையையும் உன்னிடம் யாசிக்கிறேன். மேலும் உனது திருமுகத்தைக் காணும் இன்பத்தையும் உன்னைச் சந்திப்பதில் ஆர்வத்தையும் உன்னிடம் நான் யாசிக்கிறேன். துன்புறுத்தும் தொல்

லையோ வழிகெடுக்கும் குழப்பமோ - எதுவுமின்றி! யா அல்லாஹ்! ஈமான் எனும் இறை விசுவாசத்தின் அழகைக் கொண்டு எங்களை அழகுபடுத்துவாயாக! மேலும் நேர்வழி யில் செலுத்தக் கூடியவர்களாகவும் நேர்வழியில் வாழக்கூடி யவர்களாகவும் எங்களை ஆக்கியருள்வாயாக)

நூல்: நஸாஈ பாகம் 3 பக்கம் 54. அஹ்மத் பாகம் 4 பக்கம் 364. இதன் அறிவிப்புத் தொடர் சிறப்புடையதாகும்.

اَللّٰهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ يَا اَللهُ بِأَنَّكَ الْوَاحِدُ الْأَحَدُ الصَّمَدُ الَّذِي لَمْ يَلِدْ وَلَمْ يُوْلَدْ وَلَمْ يَكُنْ لَهُ كُفُوًا أَحَدٌ أَنْ تَغْفِرَ لِيْ ذُنُوبِيْ إِنَّكَ أَنْتَ الْغَفُوْرُ الرَّحِيْمُ

63. (யா அல்லாஹ்! திண்ணமாக நீ ஏகன்; தனித்தவன்; எல்லாராலும் நாடப்படுபவன்; எவர் பக்கமும் தேவையாகா தவன்; யாரையும் பெறாதவன்; எவராலும் பெறப்படாத வன்; உனக்கு நிகராக எவரும் - எதுவும் இல்லை என்பதைக் கொண்டு நான் உன்னிடம் யாசிக்கிறேன்; நீ என் பாவங் களை மன்னிக்க வேண்டும்; திண்ணமாக நீ பெரிதும் பாவங்கள் மன்னிப்பவன்; கருணை பொழிபவன்)

நூல்: நஸாஈ பாகம் 3 பக்கம் 52, அஹ்மத் பாகம் 4 பக்கம் 338. அல்பானியின் நபி(ஸல்) அவர்களின் தொழுகை முறை எனும் நூலைப் பார்க்க; பக்கம் 204.

اَللّٰهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ بِأَنَّ لَكَ الْحَمْدُ لَا إِلٰهَ إِلَّا أَنْتَ وَحْدَكَ لَا شَرِيْكَ لَكَ الْمَنَّانُ يَا بَدِيْعَ السَّمٰوَاتِ وَالْأَرْضِ يَاذَا

الْجَلَالِ وَالْإِكْرَامِ يَا حَيُّ يَا قَيُّومُ إِنِّي أَسْأَلُكَ الْجَنَّةَ وَأَعُوذُ بِكَ مِنَ النَّارِ

64. (யா அல்லாஹ்! நான் உன்னிடம் யாசிக்கிறேன்- இதன் அடிப்படையில்! அதாவது, திண்ணமாக அனைத்துப் புகழும் உனக்கே! வணக்கத்திற்குரிய இறைவன் உன்னைத் தவிர வேறு யாரும் இல்லை; நீ தனித்தவன்; உனக்கு யாதொரு இணை துணை இல்லை. பேருபகாரம் புரிபவன் நீ! வானங்களையும் பூமியையும் படைத்தவனே! மகத்துவமும் கண்ணியமும் உடையவனே! நித்ய ஜீவனே! (பேரண்டம் முழுவதையும்) நிர்வகிப்பவனே! நான் உன்னிடம் சுவனத்தை யாசிக்கிறேன். நரகத்தை விட்டு உன்னைக் கொண்டு பாதுகாவல் தேடுகிறேன்!)

நூல்: அபூதாவூத், நஸாஈ, திர்மிதி, இப்னுமாஜா, ஸஹீஹ் இப்னுமாஜா பாகம் 2 பக்கம் 329.

اَللّٰهُمَّ إِنِّي أَسْأَلُكَ بِأَنِّي أَشْهَدُ أَنَّكَ أَنْتَ اللهُ لَا إِلٰهَ إِلَّا أَنْتَ الْأَحَدُ الصَّمَدُ الَّذِي لَمْ يَلِدْ وَلَمْ يُوْلَدْ وَلَمْ يَكُنْ لَهُ كُفُوًا أَحَدٌ

65. (யா அல்லாஹ்! நான் உன்னிடம் யாசிக்கிறேன்; இதன் அடிப்படையில்: அதாவது, நீயே ஏக இறைவன்; வணக்கத்திற்குரியவன் உன்னைத் தவிர வேறு யாரும் இல்லை என்று நான் சாட்சியம் அளிக்கிறேன். நீ தனித்தவன்; எவர் பக்கத்திருந்தும் தனக்குத் தேவையில்லாதவன்; எவரையும் பெறாதவன்; யாராலும் பெறப்படாதவன். உனக்கு நிகராக எவருமில்லை

நூல்: அபூ தாவூத் பாகம் 2 பக்கம் 62, திர்மிதி பாகம் 5 பக்கம் 515. இப்னுமாஜா பாகம் 2 பக்கம் 1267. அஹ்மத் பாகம் 5 பக்கம் 360. ஸஹீஹ் இப்னு மாஜா பாகம் 2 பக்கம் 329. ஸஹீஹ் திர்மிதி பாகம் 3 பக்கம் 163.

## தொழுகையில் சலாம் கொடுத்தபின் ஓதும் திக்ர்கள்

أَسْتَغْفِرُ اللهَ

அல்லாஹ்விடம் பாவ மன்னிப்பு கோருகிறேன். (மூன்று தடவை)

اَللّٰهُمَّ أَنْتَ السَّلَامُ وَمِنْكَ السَّلَامُ تَبَارَكْتَ يَاذَا الْجَلَالِ وَالْإِكْرَامِ

66. (யா அல்லாஹ்! நீ ஈடேற்றமளிப்பவன். உன்னிடமிருந்தே ஈடேற்றம் உண்டாகிறது! கண்ணியமும் மாண்பும் உடையவனே! நீயே அருட்பேறுடையவன்.)

நூல்: முஸ்லிம் பாகம் 1 பக்கம் 414.

لَا إِلٰهَ إِلَّا اللهُ وَحْدَهُ لَا شَرِيْكَ لَهُ ، لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ ، اَللّٰهُمَّ لَا مَانِعَ لِمَا أَعْطَيْتَ ، وَلَا مُعْطِيَ لِمَا مَنَعْتَ ، وَلَا يَنْفَعُ ذَا الْجَدِّ مِنْكَ الْجَدُّ

67. (வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறில்லை; அவன் தனித்தவன்; அவனுக்கு யாதொரு இணையுமில்லை; ஆட்சியதிகாரம் அவனுக்குரியதே; அனைத்துப் புகழும் அவனுக்கே. அவன் அனைத்தின் மீதும் பேராற்றல் உடையவன். யா அல்லாஹ்! நீ கொடுத்ததைத் தடுப்பவர் யாருமில்லை; நீ தடுத்ததைக் கொடுப்பவர்

யாருமில்லை; செல்வம் உடையவர் எவரையும் அவரது செல்வம் உனது தண்டனையில் இருந்து காத்திட முடியாது)

நூல்: புகாரி, பாகம் 1 பக்கம் 255.
முஸ்லிம் பாகம் 1 பக்கம் 414.

لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ وَحْدَهُ لَا شَرِيْكَ لَهُ، لَهُ الْمُلْكُ، وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ. لَا حَوْلَ وَلَا قُوَّةَ إِلَّا بِاللّٰهِ، لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ، وَلَا نَعْبُدُ إِلَّا إِيَّاهُ، لَهُ النِّعْمَةُ وَلَهُ الْفَضْلُ وَلَهُ الثَّنَاءُ الْحَسَنُ، لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ مُخْلِصِيْنَ لَهُ الدِّيْنَ وَلَوْ كَرِهَ الْكَافِرُوْنَ

68. (வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறில்லை; அவன் தனித்தவன்; அவனுக்கு யாதொரு இணையுமில்லை. ஆட்சியதிகாரம் அவனுக்கே உரியது; புகழ் அனைத்தும் அவனுக்கே உரியது. அல்லாஹ்வி(ன் உதவி யும், பாதுகாப்புமி)ன்றி (நன்மைகள் செய்வதற்கு) எந்த ஆற்றலும் இல்லை. (தீமைகளைவிட்டு விலக)எந்த சக்தியும் இல்லை. வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறில்லை. அருட்கொடைகள் அனைத்தும் அவனுக்கு உரியவையே. சிறப்பனைத்தும் அவனுக்கே உரியது. அழகிய புகழ் மாலையும் அவனுக்குரியதே. வணக்கத்திற்குரிய இறைவன் அவனைத் தவிர வேறு யாருமில்லை. நிராகரிப்பாளர்கள் வெறுத்த போதிலும் அவனுக்காகவே வணக்கத்தை கலப்பற்றதாக ஆக்கி அவன் ஒருவனைத் தவிர வேறு யாரையும் நாங்கள் வணங்கமாட்டோம்.

நூல்: நஸாஈ, ஸஹீஹுல் ஜாமிஃ பாகம் 5 பக்கம் 339.
நூல்: முஸ்லிம் பாகம் 1 பக்கம் 415.

سُبْحَانَ اللهُ وَالْحَمْدُ لِلّٰهِ وَاللهُ أَكْبَرُ

69. ''அல்லாஹ் தூய்மையானவன்; எல்லாப் புகழும் இறைவனுக்கே; அல்லாஹ் மிகப்பெரியவன். *(33 தடவை)*

لَا إِلٰهَ إِلَّا اللهُ وَحْدَهُ لَا شَرِيْكَ لَهُ، لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ

(வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை; அவன் தனித்தவன்; அவனுக்கு யாதொரு இணையுமில்லை. ஆட்சியதிகாரம் அவனுக்கே; புகழ் அனைத்தும் அவனுக்குரியதே! மேலும் அவன் அனைத்தின் மீதும் பேராற்றல் கொண்டவன்)

ஒவ்வொரு தொழுகைக்குப் பின்பும் யார் இவற்றை ஓதி வருவாரோ அவருடைய பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன; அவை கடல் அளவு இருந்தாலும் சரியே!

நூல்: *முஸ்லிம் பாகம் 1 பக்கம் 418.*

قُلْ هُوَ اللهُ أَحَدٌ وَ قُلْ أَعُوْذُ بِرَبِّ الْفَلَقِ وَ قُلْ أَعُوْذُ بِرَبِّ النَّاسِ

70. (குல்ஹுவல்லாஹு அஹத்' அத்தியாயத்தையும் 'குல் அவூது பிரப்பில் ஃபலக்' அத்தியாயத்தையும் 'குல் அவூது பிரப்பிந் நாஸ்' அத்தியாயத்தையும் ஒவ்வொரு தொழுகைக்குப் பின்பும் ஒருதடவை ஓதவேண்டும். மஃரிப் தொழுகை மற்றும் ஃபஜ்ர் தொழுகைக்குப் பிறகு 3 தடவை ஓதவேண்டும்)

*நூல்: அபூ தாவூத், பாகம் 2 பக்கம் 86. நஸாஈ பாகம் 3 பக்கம் 68. ஸஹீஹுத் திர்மிதி பாகம் 2 பக்கம் 8.*

71. ஒவ்வொரு தொழுகைக்குப் பின்பும் 'ஆயதுல் குர்ஸி' ஓதவும்.

اَللّٰهُ لَآ اِلٰهَ اِلَّا هُوَ الْحَيُّ الْقَيُّوْمُ لَا تَاْخُذُهٗ سِنَةٌ وَّلَا نَوْمٌ لَهٗ مَا فِي السَّمٰوٰتِ وَمَا فِي الْاَرْضِ مَنْ ذَا الَّذِيْ يَشْفَعُ عِنْدَهٗ اِلَّا بِاِذْنِهٖ يَعْلَمُ مَا بَيْنَ اَيْدِيْهِمْ وَمَا خَلْفَهُمْ وَلَا يُحِيْطُوْنَ بِشَيْءٍ مِّنْ عِلْمِهٖ اِلَّا بِمَا شَآءَ وَسِعَ كُرْسِيُّهُ السَّمٰوٰتِ وَالْاَرْضَ وَلَا يَئُوْدُهٗ حِفْظُهُمَا وَهُوَ الْعَلِيُّ الْعَظِيْمُ

அல்லாஹ் (எத்தகையவனென்றால்) அவனைத்தவிர (வணக்கத்திற்குரிய வேறு) நாயன் இல்லை: (அவன்) ஜீவனுள்ளவன்: (என்றென்றும்) நிலைத்திருப்பவன்: அவனை சிறு துயிலும், உறக்கமும் பீடிக்காது. வானங்களிலுள்ளவையும், பூமியிலுள்ளவையும் அவனுக்கே உரியன: அவனுடைய அனுமதியின்றி அவனிடத்தில் பரிந்து பேசுபவர் யார்? அவர்களுக்கு முன்னால் இருப்பவற்றையும், பின்னால் இருப்பவற்றையும் அவன் நன்கறிவான். அவனுடைய நாட்டமின்றி அவனுக்குத் தெரிந்தவற்றிலிருந்து யாதொன்றையும் முற்றிலும் (மற்றெவரும்) அறிந்து கொள்ளமாட்டார்கள். அவனுடைய 'குர்சீய்யு' வானங்களிலும், பூமியிலும் விசாலமாக (பரவி) இருக்கின்றது. அவ்விரண்டையும் காப்பது அவனுக்குச் சிரமத்தை உண்டாக்காது. மேலும் அவன் மிக்க உயர்ந்தவன், மகத்துவமிக்கவன்.

لَا إِلٰهَ إِلَّا اللهُ وَحْدَهُ لَا شَرِيْكَ لَهُ ، لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ يُحْيِيْ وَيُمِيْتُ وَهُوَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ

*72. (மஃரிப் மற்றும் ஃபஜ்ர் தொழுகைக்குப் பிறகு 10 தடவை)*

நூல்: *திர்மிதி பாகம் 5 பக்கம் 515, அஹ்மத் பாகம் 4 பக்கம் 227. இடம் பெற்றுள்ள நூல்: ஸாதுல் மஆத் பாகம் 1 பக்கம் 300*

ஃபஜ்ர் தொழுகைக்குப் பிறகு

اَللّٰهُمَّ إِنِّيْ اَسْأَلُكَ عِلْمًا نَافِعًا ، وَرِزْقًا طَيِّبًا ، وَعَمَلًا مُتَقَبَّلًا

*73. (யா அல்லாஹ்! பயன் தரும் கல்வியையும் தூய்மையான உணவையும் ஒப்புக் கொள்ளத்தக்க அமலையும் நான் உன்னிடம் யாசிக்கிறேன்)*

நூல்: *இப்னுமாஜா, ஸஹீஹ் இப்னுமாஜா பாகம் 1 பக்கம் 152. மஜ்மஉ - ஸ்ஸவாயித் பாகம் 10 பக்கம் 111.*

**இஸ்திகாரா - நன்மை தேடித் தொழும் தொழுகையின் துஆ**

ஜாபர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: அண்ணல் நபி (ஸல்) அவர்கள் எல்லாப் பணிகளின் போதும் - முன்னதாக இறைவனிடம் நன்மை தேடிக் கொள்ளுமாறு எங்களுக்குக் கற்றுத் தந்தார்கள்; எங்களுக்கு திருக்குர்ஆனின் அத்தியாயங்களைக் கற்றுத் தருவது போன்று! அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்! உங்களில் எவரேனும் ஒரு பணியைச் செய்ய நாடினால் கடமையான தொழுகை தவிர இரண்டு ரக்அத் தொழுது விட்டுப் பிறகு இவ்வாறு துஆ செய்யட்டும்.

اَللّٰهُمَّ إِنِّي أَسْتَخِيرُكَ بِعِلْمِكَ ، وَأَسْتَقْدِرُكَ بِقُدْرَتِكَ ، وَأَسْأَلُكَ
مِنْ فَضْلِكَ الْعَظِيمِ فَإِنَّكَ تَقْدِرُ وَلَا أَقْدِرُ ، وَتَعْلَمُ وَلَا أَعْلَمُ ،
وَأَنْتَ عَلَّامُ الْغُيُوبِ ، اَللّٰهُمَّ إِنْ كُنْتَ تَعْلَمُ أَنَّ هٰذَا الْأَمْرَ –
خَيْرٌ لِي فِي دِينِي وَمَعَاشِي وَعَاقِبَةِ أَمْرِي – فَاقْدُرْهُ لِي وَيَسِّرْهُ لِي
ثُمَّ بَارِكْ لِي فِيهِ ، وَإِنْ كُنْتَ تَعْلَمُ أَنَّ هٰذَا الْأَمْرَ شَرٌّ لِي فِي
دِينِي وَمَعَاشِي وَعَاقِبَةِ أَمْرِي – فَاصْرِفْهُ عَنِّي وَاصْرِفْنِي عَنْهُ
وَاقْدُرْ لِيَ الْخَيْرَ حَيْثُ كَانَ ثُمَّ أَرْضِنِي بِهِ .

*74. (யா அல்லாஹ்! நான் உன்னிடம் - உனது ஞானத்* தைக் கொண்டு நன்மையை யாசிக்கிறேன். மேலும் உனது ஆற்றலைக் கொண்டு ஆற்றலை யாசிக்கிறேன். மேலும் உன்னிடமிருந்து உனது மகத்தான அருளை யாசிக்கிறேன். ஏனெனில் நீ ஆற்றல் பெற்றவன்; என்னிடம் எந்த ஆற்றலும் இல்லை. மேலும் நீ நன்கு அறிபவன். நான் எதுவும் அறியேன். மேலும் நீ மறைவானவை அனைத்தும் அறிந்த வன்! யாஅல்லாஹ்! இந்தப் பணி (தனது பணியின் பெயர் குறிப்பிடுக) எனக்கு - எனது தீனுக்கும் எனது வாழ்க்கைக் கும் எனது விவகாரத்தின் முடிவுக்கும் (இவ்வாறும் சேர்த் துக் கொள்ளலாம். எனது உடனடியான - தாமதமான விவகாரத்திற்கும்) நன்மையானது என நீ அறிந்தால் இதனை

*எனது விதியில் சேர்ப்பாயாக! மேலும் இதனை எனக்கு எளிமையாக்கித் தருவாயாக! பிறகு இதில் எனக்கு பாக்கியம் அருள்வாயாக! ஆனால் இந்தப் பணி எனக்கு - எனது தீனுக்கும் எனது வாழ்க்கைக்கும் எனது விவகாரத்தின் முடிவுக்கும் (இவ்வாறும் சேர்த்துக் கொள்ளலாம். எனது உடனடியான - தாமதமான விவகாரத்திற்கும்) தீமையானது என நீ அறிந்தால் இதனை என்னை விட்டு அகற்றிடுவாயாக! இதனை விட்டு என்னையும் திருப்பிடுவாயாக! மேலும் எனது விதியில் நன்மையைச் சேர்ப்பாயாக, அது எங்கிருந்தாலும் சரியே! பிறகு அதில் எனக்குத் திருப்தி ஏற்படுத்தித் தருவாயாக'')*

*நூல்: புகாரி பாகம் 7 பக்கம் 162.*

இவ்வாறு ஒருவன், இறைவனிடம் நன்மை வேண்டிக் கொண்டு இறை விசுவாசமுள்ள சகோதரனிடம் ஆலோசனையும் கலந்து கொண்டு தனது பணியை முழு உறுதியுடனும் முயற்சியுடனும் செய்யத் தொடங்கினால் அதில் தோல்வியுறமாட்டான். ஏனெனில் அல்லாஹ் குர்ஆனில் கூறுகிறான்.

وَشَاوِرْهُمْ فِي الْأَمْرِ فَإِذَا عَزَمْتَ فَتَوَكَّلْ عَلَى اللهِ

(நபியே தீனுடைய) காரியத்தில் அவர்களுடன் கலந்தாலோசனை செய்வீராக (யாதொரு காரியத்தை) நீர் முடிவுசெய்தால், அல்லாஹ்வின் மீதே நீர் (அவற்றை ஒப்படைத்து) முழு நம்பிக்கை வைப்பீராக

*குர்ஆன் அத்: 3 வசனம் 159.*

**காலை - மாலை நேரங்களில் ஓதும் திக்ர்கள்**

أَمْسَيْنَا وَأَمْسَى الْمُلْكُ لِلّٰهِ وَالْحَمْدُ لِلّٰهِ لَا إِلٰهَ إِلَّا اللهُ وَحْدَهُ لَا شَرِيكَ لَهُ، لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ ،

رَبِّ اَسْأَلُكَ خَيْرَ مَا فِيْ هٰذِهِ اللَّيْلَةِ ، وَخَيْرَ مَا بَعْدَهَا ، وَأَعُوْذُ بِكَ مِنْ شَرِّ هٰذِهِ اللَّيْلَةِ وَشَرِّ مَا بَعْدِهَا ، رَبِّ أَعُوْذُ بِكَ مِنَ الْكَسَلِ وَسُوْءِ الْكِبَرِ ، رَبِّ أَعُوْذُ بِكَ مِنْ عَذَابٍ فِي النَّارِ، وَعَذَابٍ فِيْ الْقَبْرِ. أَصْبَحْنَا وَأَصْبَحَ الْمُلْكُ لِلّٰهِ

75. மாலைப் பொழுதிற்கு வந்து விட்டோம். ஆட்சியதிகாரம் அல்லாஹ்வுக்கே ஆகிவிட்டது. வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை. அவன் தனித்தவன்; அவனுக்கு யாதொரு இணையுமில்லை. ஆட்சியதிகாரம் அவனுடையதே! அனைத்துப் புகழும் அவனுக்கே! மேலும் அவன் அனைத்தின் மீதும் பேராற்றல் கொண்டவன். என் இரட்சகனே! இந்த இரவில் உள்ள நன்மையையும் அதன் பிறகுள்ள நன்மையையும் நான் உன்னிடம் யாசிக்கிறேன். மேலும் இந்த இரவின் தீமையை விட்டும் இதற்குப் பின்னுள்ள தீமையை விட்டும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். என் இரட்சகனே! சோம்பலை விட்டும் முதுமையின் தீமையை விட்டும் நான் உன்னிடம் பாதுகாப்பு தேடுகிறேன். மேலும் என் இரட்சகனே! நரகத்தின் வேதனையை விட்டும் மண்ணறையின் வேதனையை விட்டும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்''.

மேலும் காலைப் பொழுதிலும் இந்த துஆவை ஓதவும். ஆரம்பத்தில் காலைப் பொழுதில் ஆகிவிட்டோம்; ஆட்சியதிகாரம் அல்லாஹ்வுக்குரியதாகி விட்டது!'' என மாற்றிக் கொள்ளவும்.

நூல்: முஸ்லிம் பாகம் 4 பக்கம் 2088.

## காலை நேரத்தில் ஓதும் துஆ

اَللّٰهُمَّ بِكَ أَصْبَحْنَا وَبِكَ أَمْسَيْنَا ، وَبِكَ نَحْيَا وَبِكَ نَمُوْتُ ،
وَإِلَيْكَ النُّشُوْرُ

*76. (யா அல்லாஹ்! உன் பெயரைக் கொண்டு காலைப் பொழுதில் நாங்கள் ஆகிவிட்டோம். உன் பெயரைக் கொண்டே மாலைப் பொழுதில் ஆனோம். மேலும் உன் பெயரைக் கொண்டே நாங்கள் உயிர் வாழ்கிறோம்; உன் பெயரைக் கொண்டே நாங்கள் மரணமாவோம். மேலும் எழுப்பபப்பட்டு வருவதும் உன் பக்கமேயாகும்)*

## மாலை நேரத்தில் ஓதும் துஆ

اَللّٰهُمَّ بِكَ أَمْسَيْنَا ، وَبِكَ أَصْبَحْنَا ، وَبِكَ نَحْيَا ،
وَبِكَ نَمُوْتُ وَإِلَيْكَ الْمَصِيْرُ

**76-A.** *("யா அல்லாஹ்! உன் பெயரைக் கொண்டே நாங்கள் மாலைப் பொழுதில் ஆகிவிட்டோம்; உன் பெயரைக் கொண்டே காலைப் பொழுதில் ஆனோம். மேலும் உன் பெயரைக் கொண்டே உயிர் வாழ்கிறோம்; உன் பெயரைக் கொண்டே மரணமடைவோம். மேலும் திரும்பி வருவதும் உன் பக்கமே ஆகும்")*

اَللّٰهُمَّ أَنْتَ رَبِّيْ لَا إِلٰهَ إِلَّا أَنْتَ خَلَقْتَنِيْ وَأَنَا عَبْدُكَ ، وَأَنَا عَلٰى
عَهْدِكَ ، وَوَعْدِكَ مَا اسْتَطَعْتُ أَعُوْذُ بِكَ مِنْ شَرِّ مَا صَنَعْتُ ،

أَبُوْءُ لَكَ بِنِعْمَتِكَ عَلَيَّ ، وَأَبُوْءُ بِذَنْبِيْ ، فَاغْفِرْلِيْ فَإِنَّهُ لَا يَغْفِرُ الذُّنُوْبَ إِلَّا أَنْتَ .

*77. (யா அல்லாஹ்! நீயே என் இரட்சகன். உன்னைத்* தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறில்லை. நீயே என்னைப் படைத்தாய்; நான் உன்னுடைய அடிமை! நான் - என்னால் முடிந்த அளவுக்கு - உனது உடன்படிக்கை மற்றும் வாக்குறுதியின் மீது நிலைத்திருக்கிறேன்! நான் என்னென்ன செயல்கள் செய்தேனோ அவற்றின் தீமையை விட்டு உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். நீ என் மீது பொழிந்த அருட்கொடைகளைக் கொண்டு உன்பக்கம் நான் மீளுகிறேன்! மேலும் என்னுடைய பாவங்களை நான் ஏற்றுமொழிகிறேன்! எனவே என்னை நீ மன்னித்து அருள் வாயாக! ஏனெனில் உன்னைத் தவிர வேறு யாரும் பாவங் களை மன்னிப்பதில்லை)

நூல்: புகாரி பாகம் 7 பக்கம் 150.

اَللّٰهُمَّ إِنِّيْ أَصْبَحْتُ أُشْهِدُكَ ، وَأُشْهِدُ حَمَلَةَ عَرْشِكَ ، وَمَلَآئِكَتَكَ ، وَجَمِيْعَ خَلْقِكَ ، أَنَّكَ أَنْتَ اللّٰهُ لَا إِلٰهَ إِلَّا أَنْتَ ، وَحْدَكَ لَا شَرِيْكَ لَكَ ، وَأَنَّ مُحَمَّدًا عَبْدُكَ وَرَسُوْلُكَ

*78. (காலையில் - மாலையில் 4 தடவை ஓதவும்)*

பொருள்: *யா அல்லாஹ்! நான் இந்நிலையில் காலைப்* பொழுதில் ஆகிவிட்டேன். அதாவது, உன்னைச் சாட்சியாக் கிக் கூறுகிறேன்; உனது 'அர்ஷை' சுமந்து கொண்டிருக்கும்

மலக்குகளையும் உன்னுடைய இதர மலக்குகளையும் உன்னுடைய எல்லாப் படைப்புகளையும் சாட்சியாக்கிக் கூறுகிறேன்; நீயே வணக்கத்திற்குரிய ஏகஇறைவன்; உன்னைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறில்லை. நீ தனித்தவன்; உனக்கு யாதொரு இணை துணை இல்லை! மேலும் திண்ணமாக முஹம்மத் நபியவர்கள் உன் அடியாரும் தூதரும் ஆவார்கள்)

நூல்: அபூ தாவூத், பாகம் 4 பக்கம் 317. இமாம் புகாரியின் அல் அதபுல் முஃப்ரத் - ஹதீஸ் நம்பர் 1201. அன்றாடம் அமல் (நஸாஈ) ஹதீஸ் நம்பர் 9 இப்னு ஸுன்னி ஹதீஸ் நம்பர் 70

ஷைகு அப்துல் அஜீஸ் பின் அப்துல்லாஹ் பின் பாஸ் அவர்கள் அபூ தாவூத், நஸாஈ உடைய இந்த ஹதீஸின் அறிவிப்புத் தொடரை நம்பகமானது எனக் கூறியுள்ளார்கள். பார்க்க: துஹ்ஃபதுல் அக்யார் பக்கம் 23.

கீழ் காணும் இந்த துஆவைக் காலை நேரத்தில் ஓதியவர் அன்றைய பகலுக்கான நன்றியை நிறைவேற்றியவர் ஆவார். மாலை நேரத்தில் ஓதியவர் அன்றைய இரவுக்கான நன்றியை நிறைவேற்றியவர் ஆவார்.

اَللّٰهُمَّ مَا أَصْبَحَ بِيْ مِنْ نِعْمَةٍ ، أَوْ بِأَحَدٍ مِّنْ خَلْقِكَ ، فَمِنْكَ
وَحْدَكَ لَا شَرِيْكَ لَكَ ، فَلَكَ الْحَمْدُ وَلَكَ الشُّكْرُ

79. பொருள்: யா அல்லாஹ்! இந்தக் காலைப் பொழுதில் என் மீது அல்லது உனது படைப்பினத்தில் எவர் மீதாவது ஏதேனும் அருட்கொடை பொழிந்திருந்தால் அது உன்னிடமிருந்து கிடைத்ததாகும். நீ தனித்தவன்; உனக்கு யாதொரு இணையுமில்லை புகழ் அனைத்தும் உனக்கே; எல்லா நன்றியும் உனக்கே!

மாலை நேரத்தில் مَا أَصْبَحَ என்பதற்கு பதில் مَا أَمْسَى என்று சொல்லவும். அதாவது மாலை நேரத்தில் ஏதேனும் அருள் கிடைத்திருந்தால் என்று பொருள்.

நூல்: *அபூ தாவூத் பாகம் 4 பக்கம் 318 அமலுல் யவ்ம் வல் லைலா நஸாஈ ஹதீஸ் எண் 7, பக்கம் 137. இப்னு ஸின்னி ஹதீஸ் எண் 41 பக்கம் 23 இப்னு ஹிப்பான் "மவாரித்" ஹதீஸ் எண் 2361*

ஷைக் இப்னு பாஸ் அவர்கள் இந்த நபிமொழியின் அறிவிப்புத் தொடரை நம்பகமானது எனக் கூறியுள்ளார்கள். பார்க்க துஹ்ஃபதுல் அக்யார் பக்கம் 24.

اَللّٰهُمَّ عَافِنِيْ فِيْ بَدَنِيْ ، اَللّٰهُمَّ عَافِنِيْ فِيْ سَمْعِيْ ، اَللّٰهُمَّ عَافِنِيْ فِيْ بَصَرِيْ ، لَا إِلٰهَ إِلَّا أَنْتَ ....، اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنَ الْكُفْرِ ، وَالْفَقْرِ ، وَأَعُوْذُ بِكَ مِنْ عَذَابِ الْقَبْرِ ، لَا إِلٰهَ إِلَّا أَنْتَ .

80. பொருள்: யா அல்லாஹ்! எனது உடலில் நலன் அருள்வாயாக! யா அல்லாஹ்! எனது செவிப் புலனில் நலன் அருள்வாயாக! யா அல்லாஹ் எனது பார்வையில் நலன் அருள்வாயாக! வணக்கத்திற்குரிய இறைவன் உன்னைத் தவிர வேறில்லை!... யா அல்லாஹ்! இறை நிராகரிப்பை விட்டும் வறுமையை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். மண்ணறையின் வேதனையை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். வணக்கத்திற்குரிய இறைவன் உன்னைத் தவிர வேறில்லை.

*(காலை - மாலை நேரத்தில் 3 தடவை)*

நூல்: அபூ தாவூத் பாகம் 4 பக்கம் 324. அஹ்மத் பாகம் 5 பக்கம் 42. அமலுல் யவ்ம் வல்லைலா - நஸாஈ ஹதீஸ் எண் 22 பக்கம் 146. இப்னு ஸுன்னி ஹதீஸ் எண் 69 பக்கம் 35. இமாம் புகாரியின் அல்அதபுல் முஃப்ரத்-

'இப்னுபாஸ்' அவர்கள் இந்த நபிமொழியின் அறிவிப்புத் தொடரை நம்பகமானது என்று சொல்லியுள்ளார்கள்.

பார்க்க துஹ்ஃபதுல் அக்யார் பக்கம் 26.

حَسْبِيَ اللّٰهُ لَا إِلٰهَ إِلَّا هُوَ عَلَيْهِ تَوَكَّلْتُ وَهُوَ رَبُّ الْعَرْشِ الْعَظِيْمِ

81 பொருள்: எனக்கு அல்லாஹ்வே போதுமானவன். வணக்கத்திற்குரிய இறைவன் அவனைத் தவிர வேறு யாருமில்லை. அவன் மீதே நான் முழு நம்பிக்கையும் வைத்துள்ளேன். அவன் மகத்தான அர்ஷின் அதிபதி ஆவான்.

நூல்: அமலுல் யவ்ம் வல்லைலா - இப்னு ஸின்னி ஹதீஸ் எண் 72 பக்கம் 37 அபூ தாவூத் பாகம் 4 பக்கம் 321 - இந்த நபிமொழியின் அறிவிப்புத் தொடர் சிறந்ததாகும்.

أَعُوْذُ بِكَلِمَاتِ اللّٰهِ التَّامَّاتِ مِنْ شَرِّ مَا خَلَقَ

82. பொருள்: அல்லாஹ்வின் பூரணமான 'கலிமாக்களை'க் கொண்டு நான் பாதுகாவல் தேடுகிறேன்; அவன் படைத்த அனைத்துப் படைப்புகளின் தீமையை விட்டும்!

நூல்: திர்மிதி, அஹ்மத் பாகம் 2 பக்கம் 290. ஸஹீஹ் திர்மிதி பாகம் 3 பக்கம் 187 இந்த நபிமொழியின் மூலம் ஸஹீஹ் முஸ்லிமில் உள்ளது. பாகம் 4 பக்கம் 2080.

اَللّٰهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ الْعَافِيَةَ فِيْ الدُّنْيَا وَالْآخِرَةِ . اَللّٰهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ الْعَفْوَ وَالْعَافِيَةَ فِيْ دِيْنِيْ ، وَدُنْيَايَ وَأَهْلِيْ ، وَمَالِيْ ، اَللّٰهُمَّ اسْتُرْ عَوْرَاتِيْ ، وَآمِنْ رَوْعَاتِيْ ، اَللّٰهُمَّ احْفَظْنِيْ مِنْ بَيْنِ يَدَيَّ ، وَمِنْ خَلْفِيْ ، وَعَنْ يَمِيْنِيْ ، وَعَنْ شِمَالِيْ ، وَمِنْ فَوْقِيْ ، وَأَعُوْذُ بِعَظَمَتِكَ أَنْ أُغْتَالَ مِنْ تَحْتِيْ .

83. பொருள்: *"யா அல்லாஹ்! நான் உன்னிடம் - இம்மை மறுமை இரண்டிற்குமான நலனைக் கேட்கிறேன். மேலும் யா அல்லாஹ்! எனது தீனிலும் எனது உலக வாழ்விலும் எனது குடும்பத்திலும் எனது செல்வத்திலும் மன்னிப்பையும் நலனையும் நான் உன்னிடம் யாசிக்கி றேன்! யா அல்லாஹ் என்னுடைய பலவீனங்களை மறைப் பாயாக! என் அச்சங்களை அகற்றி எனக்கு அமைதி தருவா யாக! யா அல்லாஹ்! எனக்கு முன்பிருந்தும் பின்னாலிருந் தும் எனது வலது புறமிருந்தும் இடது புறமிருந்தும் எனக்கு மேலிருந்தும் எனக்குப் பாதுகாப்பு அளிப்பாயாக! கீழே இருந்தும் எதிர்பாராதவிதமாக நான் கொல்லப்படுவதிலிருந் தும் உனது கண்ணியத்தைக் கொண்டு நான் பாதுகாப்பு தேடுகிறேன்".*

*நூல்: அபூ தாவூத், இப்னுமாஜா பாகம் 2 பக்கம் 332.*

اللَّهُمَّ عَالِمَ الْغَيْبِ وَالشَّهَادَةِ فَاطِرَ السَّمَوَاتِ وَالأَرْضِ رَبَّ كُلِّ شَيْءٍ وَمَلِيكَهُ ، أَشْهَدُ أَنْ لاَ إِلَهَ إِلاَّ أَنْتَ أَعُوذُ

بكَ مِنْ شَرِّ نَفْسِي وَمِنْ شَرِّ الشَّيْطَانِ وَشِرْكِهِ ، وَأَنْ أَقْتَرِفَ عَلَى نَفْسِي سُوءاً أَوْ أَجُرَّهُ إِلَى مُسْلِمٍ.

*84. பொருள்: யா அல்லாஹ்! மறைவானவை - வெளிப் படையானவை அனைத்தும் அறிந்தவனே! வானங்களையும் பூமியையும் படைத்தவனே! ஒவ்வொரு பொருளின் இரட்ச கனாகவும் எஜமானனாகவும் இருப்பவனே! வணக்கத்திற்கு ரிய இறைவன் உன்னைத் தவிர வேறில்லை என்று நான் சாட்சியம் கூறுகிறேன்! எனது மனத்தின் தீமையை விட்டும் ஷைத்தானின் தீமையை விட்டும் அவனது 'ஷிர்க்'ஐ விட் டும் உன்னைக் கொண்டு பாதுகாவல் தேடுகிறேன்! மேலும் என் மனத்தின் மீது ஏதேனும் தீமை செய்வதை விட்டும் அல்லது அந்தத் தீமையை ஒரு முஸ்லிம் மீது செய்வதை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்!*

*நூல்: திர்மிதி, அபூ தாவூத். பார்க்க: ஸஹீஹ் திர்மதி பாகம் 3 பக்கம் 142.*

بِسْمِ اللَّهِ الَّذِي لاَيَضُرُّ مَعَ اسْمِهِ شَيْءٌ فِي الأَرْضِ وَلاَ فِي السَّمَاءِ وَهُوَ السَّمِيعُ الْعَلِيمُ. [ثلاثاً]

*85. பொருள்: அல்லாஹ்வின் திருப்பெயர் கொண்டு (தொடங்குகிறேன்) அவன் எப்படிப்பட்டவனெனில், அவ னது பெயருடன் இந்தப் பூமியிலும் வானத்திலும் எந்தப் பொருளும் தீங்கு அளித்திட முடியாது! அவன் எல்லாவற் றையும் கேட்பவன்; அறிபவன் ஆவான். (3 தடவை)*

*நூல்: அபூ தாவூத், திர்மிதி. பார்க்க: ஸஹீஹ் திர்மிதி பாகம் 2 பக்கம் 332.*

رَضِيْتُ بِاللهِ رَبًّا وَبِالْإِسْلَامِ دِيْنًا وَبِمُحَمَّدٍ ﷺ نَبِيًّا

*86.* அல்லாஹ்வை இரட்சகனாகவும் இஸ்லாத்தை மார்க்கமாகவும் முஹம்மத் (ஸல்) அவர்களை நபியாகவும் திருப்தியோடு ஏற்றுக் கொண்டேன். *(3 தடவை)*

*நூல்: திர்மிதி பாகம் 5 பக்கம் 465*
*பார்க்க: ஸஹீஹ் திர்மிதி பாகம் 3 பக்கம் 141.*

سُبْحَانَ اللهِ وَبِحَمْدِهِ عَدَدَ خَلْقِهِ وَرِضَا نَفْسِهِ وَزِنَةَ عَرْشِهِ وَمِدَادَ كَلِمَاتِهِ

87. பொருள்: 'ஸுப்ஹானல்லாஹி வபி ஹம்திஹி' *(அல்லாஹ்வைப் புகழ்வதோடு தூயவன் எனத் துதிக்கவும் செய்கிறேன்)* அவனுடைய படைப்பினங்களின் எண்ணிக்கை அளவிற்கு! அவனது மனதின் திருப்தி அளவிற்கு! அவனது அர்ஷின் சுமை அளவிற்கு! *(3 தடவை)*

*நூல்: முஸ்லிம் பாகம் 4 பக்கம் 2090.*

سُبْحَانَ اللهِ وَبِحَمْدِهِ

*88. ஸுப்ஹானல்லாஹி வபி ஹம்திஹி (100 தடவை)*

*நூல்: முஸ்லிம் பாகம் 4 பக்கம் 2071.*

يَا حَيُّ يَا قَيُّوْمُ بِرَحْمَتِكَ أَسْتَغِيْثُ أَصْلِحْ لِيْ شَأْنِيْ كُلَّهُ ، وَلَا تَكِلْنِيْ إِلَى نَفْسِيْ طَرْفَةَ عَيْنٍ

89. பொருள்: ''நித்திய ஜீவனே, (பேரண்டம் முழுவதையும்) நிர்வகிப்பவனே! உனது அருளைக் கொண்டு இரட்சிக்

கத் தேடுகிறேன். என்னுடைய எல்லாக் காரியங்களையும் சீர்படுத்துவாயாக! கண் இமைக்கும் நேரத்திற்குக் கூட என்னை (உனது பாதுகாப்பை விடுத்து) என் பொறுப்பில் விட்டு விடாதே!''

இமாம் ஹாகிம் அவர்கள் இந்த அறிவிப்புத் தொடரை சரி கண்டிருக்கிறார்கள். இமாம் தஹபீ அவர்களும் இதற்கு உடன்படுகிறார்கள். பார்க்க: ஸஹீஹ் - அத்தர்கீப்வத் தர்ஹீப் பாகம் *1* பக்கம் *273.*

لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ وَحْدَهُ لَا شَرِيْكَ لَهُ، لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ

*90.* பொருள்: வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை. அவன் தனித்தவன்; அவனுக்கு யாதொரு இணையுமில்லை. ஆட்சியதிகாரம் அவனுக்கே! புகழ் அனைத்தும் அவனுக்கே! மேலும் அவன் அனைத்தின் மீதும் ஆற்றல் கொண்டவனாவான். *(100* தடவை தினமும்)

நூல்: புகாரி பாகம் *4* பக்கம் *95.* முஸ்லிம் பாகம் *4* பக்கம் *2071.*

أَصْبَحْنَا وَأَصْبَحَ الْمُلْكُ لِلّٰهِ رَبِّ الْعَالَمِيْنَ، اَللّٰهُمَّ إِنِّي أَسْأَلُكَ خَيْرَ هٰذَا الْيَوْمِ: فَتْحَهُ، وَنَصْرَهُ، وَنُوْرَهُ، وَبَرَكَتَهُ، وَهُدَاهُ، وَأَعُوْذُ بِكَ مِنْ شَرِّ مَا فِيْهِ وَشَرِّ مَا بَعْدَهُ

*91.* பொருள்: நாங்கள் காலைப் பொழுதில் ஆகிவிட்டோம். அகிலம் அனைத்தையும் படைத்துப் பரிபாலிக்கும் அல்லாஹ்வுக்கே ஆட்சியதிகாரம் என ஆகிவிட்டது. யா அல்லாஹ்! இந்நாளின் நலனையும் - அதன் வெற்றி, உதவி,

ஒளி, அருட்பாக்கியம், நேர்வழி அனைத்தையும் நான் உன்னிடம் யாசிக்கிறேன்! மேலும் இந்நாளின் தீமையை விட்டும் இதன் பின் வரும் நாட்களின் தீமையை விட்டும் நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்.

நூல்: அபூ தாவூத் பாகம் 4 பக்கம் 322 இதன் அறிவிப்புத் தொடர் சரியானதே! பார்க்க: ஸாதுல் மஆத் பாகம் 2 பக்கம் 373.

92. அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். எவர் காலைப் பொழுதில்,

لَاإِلٰهَ إِلَّا اللهُ وَحْدَهُ لَا شَرِيْكَ لَهُ، لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ

என்னும் திக்ரை ஓதுகிறாரோ அவர் நபி இஸ்மாயீல் (அலை) அவர்களின் சந்ததிகளில் ஒருவரை விடுதலை செய்ததற்கான கூலி வழங்கப்படுவார். மேலும் அவருடைய பத்து பாவங்கள் மன்னிக்கப்படும்; பத்து அந்தஸ்துகள் உயர்த்தப்படும். மேலும் அவர் மாலை நேரம் வரை ஷைத்தானை விட்டு பாதுகாக்கப்படுவார். — மாலை நேரத்தில் இந்த திக்ரை அவர் ஓதினால் காலைப் பொழுது வரை இதேபோன்று அவருக்குக் கிடைக்கும். (இந்த திக்ரின் பொருள் எண் 90-இல் காண்க)

நூல்: இப்னு மாஜா. பார்க்க: ஸஹீஹ் இப்னு மாஜா பாகம் 2 பக்கம் 331.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் காலையிலும் மாலையிலும் இந்த வார்த்தைகளை ஓதக் கூடியவர்களாக இருந்தார்கள்:

أَصْبَحْنَا عَلَى فِطْرَةِ الْإِسْلَامِ ، وَعَلَى كَلِمَةِ الْإِخْلَاصِ ،
وَعَلَى دِينِ نَبِيِّنَا مُحَمَّدٍ ﷺ وَعَلَى مِلَّةِ أَبِيْنَا إِبْرَاهِيْمَ
حَنِيْفاً مُسْلِماً وَمَا كَانَ مِنَ الْمُشْرِكِيْنَ .

93. பொருள்: ''நாங்கள் இஸ்லாத்தின் இயல்பு நிலையின் மீதும் வாய்மையின் வார்த்தையின் மீதும் எங்கள் நபி முஹம்மத் (ஸல்) அவர்களின் மார்க்கத்தின் மீதும் எங்கள் தந்தை இப்ராஹீம் (அலை) அவர்களின் வழிமுறையின் மீதும் - காலை நேரத்தில் ஆகிவிட்டோம். இப்ராஹீம் நபி அவர்கள் இறைவனுக்குக் கீழ்ப்படிந்தவராகவும் ஓர்மனப் பட்டவராகவும் இருந்தார். இணைவைப்பவர்களில் ஒருவராய் இருக்கவில்லை.

நூல்: அஹ்மத், பாகம் 3 பக்கம் 406. பாகம் 5 பக்கம் 123. ஸஹீஹுல் ஜாமிஉ பாகம் 4 பக்கம் 209. அமலுல் யவ்ம் வல் லைலா ஹதீஸ் எண் 34.

94. அப்துல்லாஹ் இப்னு குபைப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். அண்ணல் நபி (ஸல்) அவர்கள், ''சொல்வீராக'' என்றார்கள். நான் கேட்டேன்: அல்லாஹ்வின் தூதரே! எதைச் சொல்ல?'' அதற்கு நபியவர்கள் - ''குல்ஹுவல்லாஹு அஹத்'' சூராவையும் குல்அவூது பிரப்பில் ஃபலக் - குல்அவூது பிரப்பின்னாஸ் சூராக்களையும் காலையிலும் மாலையிலும் 3 தடவை ஓதுவீராயின் அது எல்லாவற்றிற்கும் போதுமானதாகும்''.

நூல்: அபூ தாவூத், பாகம் 4 பக்கம் 322. திர்மிதி பாகம் 5 பக்கம். 567. ஸஹீஹுத் திர்மிதி பாகம் 3 பக்கம் 182.

## தூங்குவதற்கு முன் ஓதவேண்டியவை

95. ஒவ்வொரு இரவும் நபி (ஸல்) அவர்கள் படுக்கையில் உட்கார்ந்து கொண்டு இரண்டு உள்ளங்கைகளையும் விரித்து வைத்து அதில் ஊதுவார்கள். மேலும் குல்ஹுவல் லாஹு அஹத், குல்அஊது பிரப்பில் ஃபலக், குல்அஊது பிரப்பின்னாஸ் ஆகிய சூராக்களை ஓதுவார்கள். பிறகு உடலில் எந்த எந்தப் பகுதிகளில் தடவ முடியுமோ அந்தப் பகுதிகளில் கைகளால் தடவுவார்கள். தலை, முகம் போன்ற உடலின் முன்பகுதிகளில் இருந்து தடவுதலை ஆரம்பம் செய்வார்கள். இதுபோல் 3 தடவை செய்வார்கள்.

நூல்: ஃபத்ஹுல் பாரிபாகம் 9 பக்கம் 62
முஸ்லிம் பாகம் 4 பக்கம் 1723

96. நீ படுக்கைக்குச் செல்லும்போது ஆயதுல்குர்ஸி (அல்லாஹு லா இலாஹ இல்லாஹுவல் ஹையுல் கய்யூம்) முழுவதையும் ஓதுவாயானால் காலை வரையில் அல்லாஹ்வின் சார்பில் ஒரு பாதுகாப்பாளர் உனக்கு ஏற்படுத்தப்பட்டிருப்பார். மேலும் ஷைத்தான் உன் அருகில் கூட வரமாட்டான்.

நூல்: புகாரியின் விரிவுரை ஃபத்ஹுல்பாரி
பாகம் 4 பக்கம் 487

97. ஒருவர் அல்பகறா அத்தியாயத்தின் இறுதி இரண்டு வசனங்களை ஏதேனும் இரவில் ஓதுவாராயின் அது அவருக்குப் போதுமானதாகும். அந்த இரண்டு வசனங்கள் வருமாறு:

آمَنَ الرَّسُوْلُ بِمَا أُنْزِلَ إِلَيْهِ مِنْ رَّبِّهِ وَالْمُؤْمِنُوْنَ كُلٌّ آمَنَ بِاللّٰهِ وَمَلٰـٓئِكَتِهِ وَكُتُبِهِ وَرُسُلِهِ لَا نُفَرِّقُ بَيْنَ أَحَدٍ مِّنْ رُّسُلِهِ وَقَالُوْا سَمِعْنَا وَأَطَعْنَا غُفْرَانَكَ رَبَّنَا وَإِلَيْكَ الْمَصِيْرُ. لَا يُكَلِّفُ

اللهُ نَفساً إِلاَّ وُسْعَهَا لَهَا مَا كَسَبَتْ وَعَلَيْهَا مَا اكْتَسَبَتْ رَبَّنَا
لَا تُؤَاخِذْنَآ إِن نَسِينَآ أَوْ أَخْطَأْنَا رَبَّنَا وَلَا تَحْمِلْ عَلَيْنَآ إِصْراً
كَمَا حَمَلْتَهُ عَلَى الَّذِينَ مِنْ قَبْلِنَا رَبَّنَا وَلَا تُحَمِّلْنَا مَا لَا طَاقَةَ لَنَا
بِهِ وَاعْفُ عَنَّا وَاغْفِرْ لَنَا وَارْحَمْنَا أَنْتَ مَوْلَانَا فَانْصُرْنَا
عَلَى الْقَوْمِ الْكَافِرِينَ .

பொருள்: இந்தத் தூதர் தம் இறைவனிடமிருந்து தமக்கு அருளப்பட்டதின் மீது ஈமான் கொண்டார்; இறை நம் பிக்கை கொண்டவர்களும் அதன் மீது நம்பிக்கை கொண் டுள்ளனர். இவர்கள் அனைவரும் அல்லாஹ்வையும் அவனு டைய மலக்குகளையும் அவனுடைய வேதங்களையும் அவனுடைய தூதர்களையும் நம்பிக்கை கொள்கின்றனர். மேலும் (அவர்கள் கூறுகிறார்கள்:) நாங்கள் அவனுடைய தூதர்கள் எவருக்கிடையிலும் வேற்றுமை பாராட்டுவதில் லை'' மேலும் (அல்லாஹ்விடம் கோருகிறார்கள்:) நாங்கள் (உனது கட்டளையைச்) செவியேற்றோம்; கீழ்ப்படிந்தோம். எங்கள் இரட்சகனே! நாங்கள் உனது மன்னிப்பைக் கோருகி றோம். மேலும் உன்னிடமே நாங்கள் திரும்பிவர வேண்டியி ருக்கிறது'' அல்லாஹ் எந்த மனிதரையும் அவரது சக்திக்கு அதிகமாக (பொறுப்புகளைச் சுமத்தி) சிரமப்படுத்துவ தில்லை. அவர் சம்பாதித்த நன்மையின் பலனும் அவ ருக்கே; அவர் சம்பாதித்த தீமையின் விளைவும் அவருக்கே! (இறை நம்பிக்கை கொண்டவர்களே! நீங்கள் இவ்வாறு இறைஞ்சுங்கள்:) எங்கள் இரட்சகனே! நாங்கள் மறந்திருந்தா லும் பிழை செய்திருந்தாலும்! நீ எங்களைக் குற்றம் பிடிக் காதே! எங்கள் இரட்சகனே மேலும் எங்களுக்கு முன்சென் றோர் மீது நீ பாரத்தைச் சுமத்தியது போன்று எங்கள் மீதும்

பாரத்தைச் சுமத்தி விடாதே! எங்கள் இறைவனே! மேலும் நாங்கள் தாங்க முடியாத பாரத்தை எங்கள் மீது சுமத்தி விடாதே! எங்களைப் பொறுத்தருள்வாயாக! எங்களை மன்னிப்பாயாக! எங்கள் மீது கருணை பொழிவாயாக! நீயே எங்கள் பாதுகாவலன். சத்தியத்தை நிராகரிப்போருக்கு எதிராக வெற்றிகொள்ள எங்களுக்கு உதவி செய்வாயாக!''

*நூல்: ஃபத்ஹுல்பாரி பாகம் 9 பக்கம் 94*
*முஸ்லிம் பாகம் 1 பக்கம் 554.*

உங்களில் ஒருவர் படுக்கையில் இருந்து எழுந்து பிறகு மீண்டும் படுக்கைக்குச் செல்வதாயின் தனது விரிப்பை 3 தடவை உதறிக் கொள்ளவும். ஏனெனில் அவருக்குப் பிறகு அந்த விரிப்பில் - அவரது இடத்தில் எதுவெல்லாம் வந்துள்ளது என்பதை அவர் அறியார்!

மேலும் தூங்கும் போது-

بِاسْمِكَ رَبِّيْ وَضَعْتُ جَنْبِيْ وَبِكَ أَرْفَعُهُ فَإِنْ أَمْسَكْتَ نَفْسِيْ فَارْحَمْهَا وَإِنْ أَرْسَلْتَهَا فَاحْفَظْهَا بِمَا تَحْفَظُ بِهِ عِبَادَكَ الصَّالِحِيْنَ.

98. என் இரட்சகனே! உனது பெயரைக் கொண்டே எனது விலாப் புறத்தைக் கிடத்தினேன். மேலும் உனது உதவி கொண்டே அதை உயர்த்துகிறேன். எனவே நீ எனது உயிரைத் தடுத்துக் கொள்வாயானால் அதன் மீது கிருபை பொழிந்திடு! அதனை விட்டுவிடுவாயானால் - உனது நல்லடியார்களை எதனைக் கொண்டு நீ பாதுகாப்பாயோ அதனைக் கொண்டு என் உயிரையும் பாதுகாப்பாயாக!

*நூல்: புகாரி பாகம் 11 பக்கம் 126*
*முஸ்லிம் பாகம் 4 பக்கம் 2084.*

اَللّٰهُمَّ إِنَّكَ خَلَقْتَ نَفْسِيْ وَأَنْتَ تَوَفَّاهَا لَكَ مَمَاتُهَا وَمَحْيَاهَا إِنْ أَحْيَيْتَهَا فَاحْفَظْهَا ، وَإِنْ أَمَتَّهَا فَاغْفِرْ لَهَا . اَللّٰهُمَّ إِنِّي أَسْأَلُكَ الْعَافِيَةَ .

*99. யா அல்லாஹ்! நீயே எனது உயிரைப் படைத்தாய். நீயே அதனை மரணிக்கச் செய்வாய்! என் உயிரின் மரணமும் வாழ்வும் உனக்கேயாகும். நீ அதனை வாழச் செய்வாயா னால் அதனைப் பாதுகாத்திடு. அதனை மரணிக்கச் செய்வா யானால் அதற்கு மன்னிப்பு வழங்கிடு! யா அல்லாஹ் நான் உன்னிடம் சுகசௌகரியத்தை யாசிக்கிறேன்!*

*நூல்: முஸ்லிம் பாகம் 4 பக்கம் 2083 அஹ்மத் பாகம் 2 பக்கம் 79. அமலுல் யவம் வல்லைலா - இப்னு ஸின்னி ஹதீஸ் எண் 721.*

*தூங்கும்போது தன் வலது கையை கன்னத்தின் கீழ் வைத்துக் கொண்டு பின்வருமாறு 3 தடவை சொல்லவும்.*

اَللّٰهُمَّ قِنِيْ عَذَابَكَ يَوْمَ تَبْعَثُ عِبَادَكَ

*100. ''யா அல்லாஹ்! உனது தண்டனையில் இருந்து என்னைக் காப்பாற்றிடு; உன் அடியார்களையெல்லாம் எழுப்பி ஒன்று திரட்டும் அந்த மறுமை நாளில்!*

*நூல்: அபூதாவூத் பாகம் 4 பக்கம் 311.*
*ஸஹீஹுத் திர்மிதி பாகம் 3 பக்கம் 143.*

بِاسْمِكَ اللّٰهُمَّ أَمُوْتُ وَأَحْيَا

*101. யா அல்லாஹ்! உனது பெயரைக் கொண்டே நான் மரணிக்கிறேன்; உயிர் வாழ்கிறேன்.*

*நூல்: புகாரியின் விரிவுரை ஃபத்ஹுல் பாரி. பாகம் 11 பக்கம் 113. முஸ்லிம் பாகம் 4 பக்கம் 2083.*

*102. அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:*

நான் உங்கள் இருவருக்கும் (அலீ - ஃபாத்திமா) ஒரு பணியாளரை வழங்குவதை விடவும் சிறந்த ஒன்றைக் காண்பித்துத் தரட்டுமா? நீங்கள் படுக்கைக்குச் செல்லும் போது ஸுப்ஹானல்லாஹ் என்று 33 தடவையும் அல்ஹம்து லில்லாஹ் என்று 33 தடவையும் அல்லாஹு அக்பர் என்று 33 தடவையும் ஓதுங்கள். இது உங்களுக்குப் பணியாளரை விடவும் சிறந்ததாகும்.''

*நூல்: புகாரியின் விரிவுரை ஃபத்ஹுல்பாரி பாகம் 7 பக்கம் 71. முஸ்லிம் பாகம் 4 பக்கம் 2091.*

اَللّٰهُمَّ رَبَّ السَّمٰوَاتِ السَّبْعِ ، وَرَبَّ الْعَرْشِ الْعَظِيْمِ ، رَبَّنَا وَرَبَّ كُلِّ شَيْءٍ ، فَالِقَ الْحَبِّ وَالنَّوٰى ، وَمُنْزِلَ التَّوْرَاةِ وَالْإِنْجِيْلِ ، وَالْفُرْقَانِ ، اَعُوْذُ بِكَ مِنْ شَرِّ كُلِّ شَيْءٍ اَنْتَ آخِذٌ بِنَاصِيَتِهِ اَللّٰهُمَّ اَنْتَ الْاَوَّلُ فَلَيْسَ قَبْلَكَ شَيْءٌ ، وَاَنْتَ الْآخِرُ فَلَيْسَ بَعْدَكَ شَيْءٌ وَاَنْتَ الظَّاهِرُ فَلَيْسَ فَوْقَكَ شَيْءٌ ، وَاَنْتَ الْبَاطِنُ فَلَيْسَ دُوْنَكَ شَيْءٌ اِقْضِ عَنَّا الدَّيْنَ وَاَغْنِنَا مِنَ الْفَقْرِ

*103.* பொருள்: யா அல்லாஹ், வானங்கள் மற்றும் பூமியின் இறைவனே, மகத்தான அர்ஷின் அதிபதியே! எங்களுடையவும் அனைத்துப் பொருள்களுடையவும் அதி பதியே! வித்துகளையும் பேரீச்சங் கொட்டைகளையும் விளைவிக்கின்றவனே! தவ்றாத், இன்ஜீல், குர்ஆன் ஆகிய வேதங்களை இறக்கியருளியவனே, அனைத்துப் பொருட்க ளின் தீங்கை விட்டு நான் உன்னிடம் பாதுகாப்பு தேடுகி றேன்; அவற்றின் முன்உச்சி ரோமம் உன் பிடியிலேயே இருக்கிறது! நீயே முதலாமவன்; உனக்கு முன் எதுவு மில்லை! நீதான் இறுதியானவன்; அனைத்தும் அழிந்த பிறகும் நீ மட்டுமே எஞ்சியிருப்பாய்! நீயே வெளிப்படை யானவன்; உனக்கு அப்பால் எதுவுமே இல்லை. நீயே அந்தரங்கமானவன். நீ அன்றி எதுவுமில்லை. எனது கடனை அடைத்து வறுமையை அகற்றி வளமடையச் செய்வாயாக!''

நூல்: முஸ்லிம் பாகம் 4 பக்கம் *2084*

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ اَطْعَمَنَا وَسَقَانَا ، وَكَفَانَا ، وَآوَانَا فَكَمْ مِمَّنْ لَا كَافِيَ لَهُ وَلَا مُؤْوِيَ

*104.* பொருள்: எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவனே எங்களுக்கு உணவு அளித்தான்; தண்ணீர் புகட்டி னான். அவற்றை எங்களுக்குப் போதிய அளவு அளித்தான். மேலும் எங்களுக்குப் புகலிடமும் அளித்தான்! எத்த னையோ மனிதர்களின் நிலை எவ்வாறு உள்ளதெனில் அவர்களுக்குப் போதிய உணவோ பானமோ அளிப்பவனும் இல்லை; புகலிடம் அளிப்பவனும் இல்லை!''

நூல்: முஸ்லிம் பக்கம் *2085*.

اَللّٰهُمَّ عَالِمَ الْغَيْبِ وَالشَّهَادَةِ فَاطِرَ السَّمٰوَاتِ وَالْأَرْضِ رَبَّ كُلِّ شَيْءٍ وَمَلِيْكَهُ أَشْهَدُ أَنْ لَا إِلٰهَ إِلَّا أَنْتَ أَعُوْذُ بِكَ مِنْ شَرِّ نَفْسِيْ ، وَمِنْ شَرِّ الشَّيْطَانِ وَشِرْكِهِ وَأَنْ أَقْتَرِفَ عَلٰى نَفْسِيْ سُوْءًا أَوْ أَجُرَّهُ إِلٰى مُسْلِمٍ

105. பொருள்: *யா அல்லாஹ்! மறைவானவற்றையும் வெளிப்படையானவற்றையும் அறிபவனே! வானங்களை யும் பூமியையும் படைத்தவனே! ஒவ்வொரு பொருளின் இரட்சகனே! உடைமையாளனே! வணக்கத்திற்குரிய இறை வன் உன்னைத் தவிர வேறில்லை என்று நான் சாட்சியம் அளிக்கிறேன். மேலும் எனது மனத்தின் தீமையை விட்டு ஷைத்தானின் தீமையை விட்டு அவனது 'ஷிர்கை' விட்டு நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். மேலும் நான் என் மனத்திற்கு எதிராகத் தீமை செய்வதை விட்டும் அல்லது அதை ஒரு முஸ்லிமிடம் கொண்டு செல்வதை விட்டும் உன்னிடம் பாதுகாப்பு தேடுகிறேன்.*

*நூல்: அபூ தாவூத் பாகம் 4 பக்கம் 317. ஸஹீஹுத் திர்மிதி பாகம் 3 பக்கம் 142.*

*106. நபி (ஸல்) அவர்கள், 'அலிஃப், லாம், மீம் தன்ஜீல் சூரா'வும் 'தபாரகல்லதீ பி யதிஹில் முல்க்' சூராவும் ஓதாமல் தூங்கச் செல்வதில்லை''*

*நூல்: திர்மிதி, நஸாஈ, ஸஹீஹுல் ஜாமிஃ பாகம் 4 பக்கம் 255*

*107. அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:*

''நீ படுக்கைக்குச் செல்லும் போது தொழுகைக்கு உளூ செய்வது போல் உளூ செய். பிறகு வலது பக்கமாக ஒருக்கணித்துப் படுத்துக் கொண்டு இவ்வாறு ஓது.

اَللّٰهُمَّ أَسْلَمْتُ نَفْسِيْ إِلَيْكَ ، وَفَوَّضْتُ أَمْرِيْ إِلَيْكَ ،
وَوَجَّهْتُ وَجْهِيْ إِلَيْكَ ، وَأَلْجَأْتُ ظَهْرِيْ إِلَيْكَ ، رَغْبَةً
وَرَهْبَةً إِلَيْكَ ، لَا مَلْجَأَ وَلَا مَنْجَا مِنْكَ إِلَّا إِلَيْكَ ، آمَنْتُ
بِكِتَابِكَ الَّذِيْ أَنْزَلْتَ وَبِنَبِيِّكَ الَّذِيْ أَرْسَلْتَ

பொருள்: *''யா அல்லாஹ்! நான் என் மனத்தை உன்பால் சரணமடையுமாறு செய்துவிட்டேன். மேலும் என் காரியங் களை உன்னிடம் ஒப்படைத்து விட்டேன்; மேலும் எனது முகத்தை உன் பக்கம் திருப்பி விட்டேன்; உன்பால் ஆர்வம் கொண்டும் அச்சம் கொண்டும்...! உன்னை விட்டுத் தஞ்சம் புகும் இடமோ உன்னை விட்டு விரண்டோடும் இடமோ - உன் அளவிலே தவிர வேறில்லை! நீ இறக்கியருளிய வேதத்தின் மீதும் நீ அனுப்பிய நபியின் மீதும் நம்பிக்கை கொண்டேன்''. (இவ்வாறு ஓதிக் கொண்டு தூங்கி அதே நிலையில்) நீ மரணம் அடைவாயானால் இஸ்லாத்தின் இயல்பு நிலையின் மீது நீ மரணம் அடைந்தவனாவாய்''.*

*நூல்: புகாரி - விரிவுரையுடன் பாகம் 11 பக்கம் 113 முஸ்லிம் பாகம் 4 பக்கம் 2081.*

## இரவில் தூக்கத்தில் புரளும் போது ஓதுவது

*108. ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: ''அண் ணல் நபி (ஸல்) அவர்கள் இரவில் தூக்கத்தின் போது புரளும் நிலையில் இதை ஓதுவார்கள்.*

لَاإِلٰهَ إِلَّا اللّٰهُ الْوَاحِدُ الْقَهَّارُ ، رَبُّ السَّمٰوَاتِ وَالْأَرْضِ وَمَا بَيْنَهُمَا الْعَزِيْزُ الْغَفَّارُ

பொருள்: வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ் வைத் தவிர வேறு யாருமில்லை. அவன் தனித்தவன்; அடக்கியாளுபவன். வானங்களுக்கும் பூமிக்கும் அவற்றி லுள்ளவற்றிற்கும் அதிபதி. யாவரையும் மிகைத்தவன். பெரிதும் மன்னிப்பவன்''.

ஹாகிம் இதனை அறிவித்து விட்டு 'நம்பகமானது' என்று கூறியுள்ளார்கள். இமாம் தஹபி இதற்கு உடன்படுகி றார். பாகம் 1 பக்கம் 540. நஸாஈ உடையவும் இப்னு ஸுன்னி உடையவும் ''அமலுல் யவ்ம் வல் லைலா''. பார்க்க: ஸஹீஹுல் ஜாமிவு, பாகம் 4 பக்கம் 213.

**தூக்கத்தில் அமைதியின்மை, திடுக்கம் ஏற்படும் போதும் விரக்தி போன்ற நிலையிலும் ஓதும் துஆ**

أَعُوْذُ بِكَلِمَاتِ اللّٰهِ التَّامَّاتِ مِنْ غَضَبِهِ وَعِقَابِهِ ، وَشَرِّ عِبَادِهِ ، وَمِنْ هَمَزَاتِ الشَّيَاطِيْنِ وَأَنْ يَحْضُرُوْنِ

109. பொருள்: அல்லாஹ்வுடைய முழுமையான வார்த் தைகளைக் கொண்டு நான் பாதுகாப்பு தேடுகிறேன்; அவ னது கோபத்தை விட்டு தண்டனையை விட்டு அவனது அடிமைகளின் தீங்கை விட்டு ஷைத்தான்களின் தீண்டல் களை விட்டும் இன்னும் அவர்கள் என்னிடம் ஆஜராவதை விட்டும் நான் (பாதுகாவல் தேடுகிறேன்).

நூல்: அபூ தாவூத் பாகம் 4 பக்கம் 12
ஸஹீஹுத் திர்மிதி பாகம் 3 பக்கம் 171

## நல்ல அல்லது கெட்ட கனவு காணும் போது என்ன செய்யவேண்டும்?

*110.* நல்ல கனவு அல்லாஹ்விடம் இருந்து ஏற்படுகிறது. கெட்ட கனவு ஷைத்தான்களின் மூலம் உண்டாகிறது. **உங்களில் ஒருவர் தனக்கு விருப்பமான கனவைக் கண்டால் தனது நேசத்திற்குரியவரிடமே தவிர வேறு யாரிடமும் அதைச் சொல்ல வேண்டாம்...!**

*(இந்த நபிமொழி நீளமானது)*

*நூல்: முஸ்லிம் பாகம் 4 பக்கம் 1772.*
*புகாரி பாகம் 7 பக்கம் 24.*

## கெட்ட கனவு கண்டால் செய்ய வேண்டிய செயல்களின் சாரம்

*111. 1.* இடது பக்கம் 3 தடவை துப்ப வேண்டும்.

*நூல்: முஸ்லிம் பாகம் 4 பக்கம் 1772.*

**2. ஷைத்தானை விட்டு இந்த கெட்ட கனவை விட்டு மூன்று தடவை அல்லாஹ்விடம் பாதுகாப்பு தேட வேண்டும்.**

*நூல்: முஸ்லிம் பாகம் 4 பக்கம் 1772-1773.*

*3.* யாரிடமும் அந்தக் கனவைச் சொல்லக் கூடாது.

*நூல்: முஸ்லிம் பாகம் 4 பக்கம் 1772.*

*4.* எந்தப் பக்கத்தின் மீது (வலது அல்லது இடது) படுத்துள்ளாரோ அதை மாற்றிட வேண்டும்.

*நூல்: முஸ்லிம் பாகம் 4 பக்கம் 1773.*

*5.* விரும்பினால் எழுந்து தொழ வேண்டும்.

*நூல்: முஸ்லிம் பாகம் 4 பக்கம் 1773*

## வித்ருடைய குனூத்தில ஓதும் துஆ

اَللّٰهُمَّ اهْدِنِيْ فِيْمَنْ هَدَيْتَ ، وَعَافِنِيْ فِيْمَنْ عَافَيْتَ ، وَتَوَلَّنِيْ فِيْمَنْ تَوَلَّيْتَ ، وَبَارِكْ لِيْ فِيْمَا أَعْطَيْتَ ، وَقِنِيْ شَرَّ مَا قَضَيْتَ ، فَإِنَّكَ تَقْضِيْ وَلَا يُقْضٰى عَلَيْكَ ، إِنَّهُ لَا يَذِلُّ مَنْ وَالَيْتَ ، [وَلَا يَعِزُّ مَنْ عَادَيْتَ] ، تَبَارَكْتَ رَبَّنَا وَتَعَالَيْتَ ،

*112.* பொருள்: ''யா அல்லாஹ்! நீ யார் யாருக்கு நேர்வழி காட்டினாயோ அவர்களுள் எனக்கும் நேர்வழி காட்டுவாயாக! மேலும் நீ யார் யாருக்கு ஆரோக்கியம் அளித்தாயோ அவர்களுள் எனக்கும் ஆரோக்கியம் அளிப்பாயாக! மேலும் நீ யார் யாருக்குப் பொறுப்பேற்றுக் கொண்டாயோ அவர்களுள் எனக்கும் பொறுப்பேற்பாயாக! மேலும் நீ எனக்கு அளித்துள்ள செல்வத்தில் அபிவிருத்தி அருள்வாயாக! மேலும் நீ அளித்த தீர்ப்பின் தீங்கிலிருந்து என்னைக் காப்பாற்றுவாயாக! ஏனெனில் நீயே தீர்ப்பளிக்கிறாய்! உனக்கு மாற்றமாகத் தீர்ப்பளிக்கப்படுவதில்லை! நீ யாருக்கு நேசனாகிவிட்டாயோ அவர் ஒருபோதும் இழிவடைவதில்லை. மேலும் நீ யாரைப் பகைத்தாயோ அவர் ஒரு போதும் கண்ணியம் பெறுவதில்லை. எங்கள் இரட்சகனே! நீ அருட்பாக்கியம் உடையவனாகி விட்டாய்! உயர்வு உடையவனாகி விட்டாய்!

நூல்: அபூ தாவூத், திர்மிதி, நஸாஈ, இப்னுமாஜா, அஹ்மத், தாரமி, ஹாகிம், பைஹகி, (பிறை வளைவில் உள்ள வாசகம் பைஹகியில் வந்துள்ளது) ஸஹீஹுத் திர்மிதியில் பார்க்க பாகம் 1 பக்கம் 144. ஸஹீஹ் இப்னு மாஜா பாகம் 1 பக்கம் 194. இர்வாவுல் ஃகலீல் பாகம் 2 பக்கம் 172.

اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِرِضَاكَ مِنْ سَخَطِكَ ، وَبِمُعَافَاتِكَ مِنْ عُقُوْبَتِكَ ، وَأَعُوْذُ بِكَ مِنْكَ، لَا أُحْصِيْ ثَنَاءً عَلَيْكَ، أَنْتَ كَمَا أَثْنَيْتَ عَلٰى نَفْسِكَ

*113.* பொருள்: *யா அல்லாஹ்!* நான் உனது பொருத்தத்தைக் கொண்டு உனது கோபத்திலிருந்து பாதுகாவல் தேடுகிறேன். உனது பொறுத்தருளும் பண்பைக் கொண்டு உனது தண்டனையில் இருந்து பாதுகாவல் தேடுகிறேன். மேலும் உன்னைக் கொண்டு பாதுகாவல் தேடுகிறேன். உனக்கு முழுமையாகப் புகழ்மாலை சூட என்னால் இயலாது. உனக்கு நீயே புகழ்மாலை சூட்டிக் கொண்டது போல் இருக்கிறாய்!

நூல்: அபூதாவூத், திர்மிதி, நஸாஈ, இப்னுமாஜா, அஹ்மத், ஸஹீஹுத் திர்மிதி பாகம் 3 பக்கம் 180. ஸஹீஹ் இப்னுமாஜா பாகம் 1 பக்கம் 194. இர்வாவுல் ஃகலீல் பாகம் 2 பக்கம் 175.

اَللّٰهُمَّ إِيَّاكَ نَعْبُدُ ، وَلَكَ نُصَلِّيْ وَنَسْجُدُ ، وَإِلَيْكَ نَسْعٰى وَنَحْفِدُ نَرْجُوْا رَحْمَتَكَ ، وَنَخْشٰى عَذَابَكَ ، إِنَّ عَذَابَكَ بِالْكَافِرِيْنَ مُلْحَقٌ. اَللّٰهُمَّ إِنَّا نَسْتَعِيْنُكَ ، وَنَسْتَغْفِرُكَ ، وَنُثْنِيْ عَلَيْكَ الْخَيْرَ ، وَلَا نَكْفُرُكَ ، وَنُؤْمِنُ بِكَ ، وَنَخْضَعُ لَكَ ، وَنَخْلَعُ مَنْ يَكْفُرُكَ .

*114.* பொருள்: *யா அல்லாஹ்! நாங்கள் உன்னையே வணங்கு கிறோம். மேலும் உனக்கே தொழுகையும் ஸுஜூதும் செலுத்துகிறோம். உன் பக்கமே முயல்கிறோம்; விரைகி றோம். மேலும் உனது அருளை எதிர்பார்க்கிறோம், உனது தண்டனைக்கு அஞ்சுகிறோம். திண்ணமாக உனது தண் டனை நிராகரிப்பாளர்களைச் சென்றடையக் கூடியதாகும். யா அல்லாஹ்! நாங்கள் உன்னிடம் உதவி கோருகிறோம். மேலும் உன்னிடம் பாவமன்னிப்பு கோருகிறோம். உனக்கு நாங்கள் நன்றி செய்யாமலில்லை. மேலும் உன் மீது விசுவாசம் கொள்கிறோம். உன் முன்னால் பணிவை மேற் கொள்கிறோம். உன்னை நிராகரிப்பவர்களை விட்டுத் தொடர்பைத் துண்டித்துக் கொள்கிறோம்.*

நூல்: *ஸுனனுல் குப்றா, பைஹகி, இமாம் பைஹகி இதன் அறிவிப்புத் தொடரை நம்பகமானது என்று சொல்லியுள்ளார்கள். பாகம் 2 பக்கம் 211. இர்வாவுல் ஃகலீல் எனும் நூலில் ஷைகு அல்பானியும் இவ் வாறே கூறியுள்ளார். பாகம் 2 பக்கம் 170. இது உமர் (ரலி) அவர்களின் வார்த்தைகளில் இருந்து நிரூபண மானது. (நபி (ஸல்) அவர்களிடம் இருந்தல்ல)*

### வித்ர் தொழுகையில் -
### ஸலாம் கொடுத்தபின் ஓத வேண்டியது

*115.* அண்ணல் *நபி (ஸல்)* அவர்கள் *வித்ர்* தொழுகையில் *'ஸப்பி ஹிஸ்ம ரப்பிகல் அஃலா' சூராவும் குல்யா அய்யுஹல் காஃபிரூன் மற்றும் குல்ஹுவல்லாஹு அஹத் சூராவும் ஓதுவார்கள். ஸலாம் கொடுத்ததும் 3 தடவை இதை ஓதுவார்கள்.*

سُبْحَانَ الْمَلِكِ الْقُدُّوسِ [رَبِّ الْمَلَائِكَةِ وَالرُّوحِ]

பொருள்: தூய்மையானவன், புனிதமான அந்த அரசன்! அவன் வானவர்களுடையவும் ரூஹ் எனும் ஜிப்ரீலுடைய வும் அதிபதி ஆவான்.

*3*-ஆவது தடவை இந்த வார்த்தைகளை உரத்த குரலில் சொல்வார்கள். குரலை நீட்டவும் செய்வார்கள்.

நூல்: நஸாஈ. பாகம் *3* பக்கம் *244* தாரகுத்னீ; பிறை வளைவினுள் இருப்பது தாரகுத்னீயின் வாசகமாகும். அது நம்பகமானது என்றும் சொல்லியுள்ளார்கள். பார்க்க: ஜாதுல் மஆத். மேலாய்வு ஷுஐபு - அல்-அர்நூத் - அப்துல் காதிர் அல்-அர்நூத் பாகம் *1* பக்கம் *337*.

துயரம் மற்றும் கவலையின்போது ஓதும் துஆ

اَللّهمَّ إِنِّي عَبْدُكَ ابنُ عَبدِكَ ابْنُ أَمَتِكَ نَاصِيَتِي بِيَدِكَ ، مَاضٍ فِيَّ حُكْمُكَ ، عَدْلٌ فِيَّ قَضَاؤُكَ أَسْأَلُكَ بِكُلِّ اسْمٍ هُوَ لَكَ سَمَّيْتَ بِهِ نَفْسَكَ أَوْ أَنْزَلْتَهُ فِي كِتَابِكَ ، أَوْ عَلَّمْتَهُ أَحَداً مِنْ خَلْقِكَ أَوِ اسْتَأْثَرْتَ بِهِ فِي عِلْمِ الْغَيْبِ عِنْدَكَ أَنْ تَجْعَلَ الْقُرآنَ رَبِيعَ قَلْبِي ، وَنُورَ صَدْرِي وَجَلاءَ حُزْنِي وَذَهَابَ هَمِّي

116. பொருள்: யா அல்லாஹ்! நான் உன் அடிமை. உன் அடிமைகளான ஓர் ஆண் - ஒரு பெண்ணின் மகனாவேன். என்னில் உனது கட்டளையே செல்லுபடியாகிறது. என் விஷயத்தில் உனது தீர்ப்பு நீதமானது. உனக்குச் சொந்தமான

ஒவ்வொரு திருப்பெயர் கொண்டும் நான் உன்னிடம் யாசிக் கிறேன். அந்தப் பெயரை நீயே உனக்குச் சூட்டியிருப்பாய். அல்லது உனது வேதத்தில் அதை நீ அருளியிருப்பாய். அல்லது உனது படைப்புகளில் எவருக்கேனும் அதைக் கற்றுக் கொடுத்திருப்பாய். அல்லது மறைவானவை பற்றிய ஞானத்தில் உன்னிடத்தில் அதை வைத்திருக்க முன்னுரிமை அளித்திருப்பாய் - நான் உன்னிடம் யாசிக்கிறேன்; குர் ஆனை என் இதயத்தின் வசந்தமாக்குவாயாக! என் நெஞ்சத் தின் ஒளியாக்குவாயாக, எனது துயரத்தை நீக்கக் கூடியதாக வும் எனது கவலையை மாற்றக்கூடியதாகவும் ஆக்குவாயாக!

*நூல்: அஹ்மத் பாகம் 1 பக்கம் 391. அல்பானி அவர்கள் இதனைச் சரி கண்டுள்ளார்கள்.*

اَللّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنَ الْهَمِّ وَالْحَزَنِ ، وَالْعَجْزِ وَالْكَسَلِ
وَالْبُخْلِ وَالْجُبْنِ ، وَضَلَعِ الدَّيْنِ وَغَلَبَةِ الرِّجَالِ

*117.* பொருள்: *யா அல்லாஹ்! திண்ணமாக நான் கவலை, துயரம் ஆகியவற்றை விட்டும் உன்னிடம் பாதுகாப்பு தேடுகிறேன். இயலாமை, சோம்பல், கருமித்தனம், கோழைத்தனம் ஆகியவற்றை விட்டும் உன்னிடம் பாதுகாப் புத் தேடுகிறேன். கடனின் பெருக்கத்தைவிட்டும் மனிதர்க ளின் ஆதிக்கத்தை விட்டும் உன்னிடம் பாதுகாப்பு தேடுகி றேன்.*

*நூல்: புகாரி பாகம் 7 பக்கம் 158. நபி (ஸல்) அவர்கள் இந்த துஆவை அதிகம் அதிகம் ஓதுவார்கள். பார்க்க புகாரியின் விரிவுரை பாகம் 11 பக்கம் 173.*

## நிலைகுலைந்த வேளையில் ஓதும் துஆ

لَآ إِلٰهَ إِلَّا اللهُ الْعَظِيْمُ الْحَلِيْمُ ، لَا إِلٰهَ إِلَّا اللهُ رَبُّ الْعَرْشِ الْعَظِيْمِ ، لَا إِلٰهَ إِلَّا اللهُ رَبُّ السَّمٰوٰتِ وَرَبُّ الْأَرْضِ وَرَبُّ الْعَرْشِ الْكَرِيْمِ

118. பொருள்: "அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறு யாரும் இல்லை; அவன் மகத்தானவன்; மிகவும் சாந்தம் உடையவன்! அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறில்லை; அவன் மகத்தான அர்ஷின் அதிபதி ஆவான்! அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறில்லை; அவனே வானங்களுக்கும் அதிபதி, பூமிக்கும் அதிபதி, சங்கைமிகு அர்ஷின் அதிபதி.

நூல்: புகாரி பாகம் 7 பக்கம் 154. முஸ்லிம் பாகம் 4 பக்கம் 2092.

اَللّٰهُمَّ رَحْمَتَكَ أَرْجُوْ فَلَا تَكِلْنِيْ إِلَى نَفْسِي طَرْفَةَ عَيْنٍ وَأَصْلِحْ لِيْ شَأْنِيْ كُلَّهُ ، لَا إِلٰهَ إِلَّا أَنْتَ

119. பொருள்: யா அல்லாஹ்! நான் உனது கருணையை எதிர்பார்க்கிறேன். கண் இமைக்கும் நேரத்திற்குக் கூட நீ என்னை (உன் பொறுப்பிலிருந்து) என் பொறுப்பில் விட்டு விடாதே! என் விவகாரங்கள் அனைத்தையும் எனக்காக நீ சீர்படுத்துவாயாக! வணக்கத்திற்குரிய இறைவன் உன்னைத் தவிர வேறில்லை.

நூல்: அபூ தாவூத் பாகம் 4 பக்கம் 324.
அஹ்மத் பாகம் 5, பக்கம் 42.

ஷைக் அல்பானி, அப்துல் காதிர் அர்நாவூத் இருவரும் இதன் அறிவிப்புத் தொடரை 'அழகானது' எனக்குறிப்பிட் டுள்ளனர்.

لَآإِلٰهَ إِلَّآ أَنْتَ سُبْحَانَكَ إِنِّي كُنْتُ مِنَ الظَّالِمِيْنَ

120. பொருள்: வணக்கத்திற்குரிய இறைவன் உன்னைத் தவிர வேறு யாருமில்லை. நீ தூய்மையானவன்! நிச்சயமாக நான் அநியாயக்காரர்களில் ஒருவனாக ஆகிவிட்டேன்.

நூல்: திர்மிதி பாகம் 5 பக்கம் 529. இமாம் ஹாகிம் அவர்கள் இதன் அறிவிப்புத் தொடரை நம்பகமானது என்றார் கள். அதற்கு இமாம் தஹபி உடன்பட்டுள்ளார்கள். பார்க்க: ஸஹீஹ த் திர்மிதி பாகம் 3 பக்கம் 168.

اَللّٰهُ اَللّٰهُ رَبِّ لَا اُشْرِكُ بِهٖ شَيْئًا

121. பொருள்: ''அல்லாஹ்! அல்லாஹ் என் இரட்சகன். அவனுக்கு எதனையும் நான் இணையாக்க மாட்டேன்.''

நூல்: அபூதாவூத் பாகம் 2 பக்கம் 87. ஸஹீஹ் இப்னு மாஜா பாகம் 2 பக்கம் 335.

### எதிரிகளையும் ஆட்சியாளர்களையும் சந்திக்கும்போது ஓதும் துஆ

اَللّٰهُمَّ إِنَّا نَجْعَلُكَ فِيْ نُحُوْرِهِمْ وَنَعُوْذُ بِكَ مِنْ شُرُوْرِهِمْ

*122*. பொருள்: *யா* அல்லாஹ்! அவர்களுக்கு எதிரில் உன்னை ஆக்குகிறோம். அவர்களின் தீமைகளை விட்டு உன்னைக் கொண்டு பாதுகாப்பு தேடுகிறோம்.

நூல்: அபூ தாவூத், பாகம் 2 பக்கம் 89. இமாம் ஹாகிம் இதனைச் சரிகண்டுள்ளார்கள். இமாம் தஹபி அவர்கள் அதற்கு உடன்பட்டுள்ளார்கள். பாகம் 2 பக்கம் *142*.

اَللّٰهُمَّ أَنْتَ عَضُدِيْ ، وَأَنْتَ نَصِيْرِيْ ، بِكَ أَجُوْلُ وَبِكَ
أَصُوْلُ وَبِكَ أُقَاتِلُ

*123*. பொருள்: ''*யா* அல்லாஹ்! நீயே எனக்கு பக்கபலம். நீயே எனக்கு உதவி செய்பவன். உனது உதவி கொண்டே நான் சுற்றிச் சுழல்கிறேன். மேலும் உன் உதவி கொண்டே தாக்குதல் தொடுக்கிறேன். உனது உதவி கொண்டே (எதிரிகளுடன்) போரிடுகிறேன்.''

நூல்: அபூ தாவூத் பாகம் 2 பக்கம் 42. திர்மிதி பாகம் 5 பக்கம் 572. ஸஹீஹுத் திர்மிதி பாகம் 3 பக்கம் 183.

حَسْبُنَا اللّٰهُ وَنِعْمَ الْوَكِيْلُ

*124*. பொருள்: நமக்கு அல்லாஹ்வே போதுமானவன்; மேலும் பொறுப்பேற்பவர்களில் அவன் சிறந்தவன்.

நூல்: புகாரி பாகம் 5 பக்கம் 172.

## இறைவிசுவாசத்தில் சந்தேகம் ஏற்படும்போது ஓதும் துஆ

*125*. *1*. அல்லாஹ்விடம் பாதுகாவல் தேடவேண்டும்.

நூல்: புகாரியின் விரிவுரை பாகம் 6 பக்கம் 336. முஸ்லிம் பாகம் *1* பக்கம் *120*

2. எது விஷயத்தில் சந்தேகம் வருகிறதோ அதுபற்றி மேலும் மேலும் சிந்தித்துக் குழம்புவதை விட்டுவிட வேண்டும்.

*புகாரியின் விரிவுரை பாகம் 6 பக்கம் 336. முஸ்லிம் பாகம் 1 பக்கம் 120.*

*126. 3.* இந்த வார்த்தைகளைச் சொல்லவும்.

آمَنْتُ بِا للهِ وَرُسُلِهِ

பொருள்: அல்லாஹ்வின் மீதும் அவனுடைய தூதர்களின் மீதும் விசுவாசம் கொண்டேன்.

*நூல்: முஸ்லிம் பாகம் 1 பக்கம் 119-120.*

*127. 4.* அல்லாஹ்வின் இந்த வசனத்தை ஓதவும்

هُوَ الْأَوَّلُ ، وَالآخِرُ ، وَالظَّاهِرُ وَالْبَاطِنُ وَهُوَ بِكُلِّ شَيْءٍ عَلِيمٌ

பொருள்: அவனே முதலாமவன், இறுதியானவன். வெளிப் படையானவன்; அந்தரங்கமானவன். மேலும் அவன் ஒவ் வொன்றையும் நன்கு அறிந்தவன்.

*நூல்: அபூதாவூத் பாகம் 4 பக்கம் 329 அல்பானி, அர்நாவூத் இருவரும் இதனைச் சரி கண்டுள்ளார்கள்.*

**கடனை அடைப்பதற்காக ஓதும் துஆ**

اَللّٰهُمَّ اكْفِنِيْ بِحَلَالِكَ عَنْ حَرَامِكَ وَأَغْنِنِيْ بِفَضْلِكَ عَمَّنْ سِوَاكَ

*128.* பொருள்: யா அல்லாஹ்! நீ விலக்கியதை விட்டும் - நீ ஆகுமாக்கியதைக் கொண்டு எனக்குப் போதுமாக்குவாயாக! மேலும் உனது கிருபை கொண்டு உன்னைத் தவிர உள்ள அனைத்தைவிட்டும் என்னைத் தேவையில்லாதாக்குவாயாக!

நூல்: திர்மிதி பாகம் 5 பக்கம் 560. ஸஹீஹுத் திர்மிதி பாகம் 3 பக்கம் 180.

اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنَ الْهَمِّ، وَالْحُزْنِ، وَالْعَجْزِ وَالْكَسَلِ وَالْبُخْلِ وَالْجُبْنِ، وَضَلَعِ الدَّيْنِ وَغَلَبَةِ الرِّجَالِ

129. பொருள்: யா அல்லாஹ்! திண்ணமாக நான் கவலை, துயரம் ஆகியவற்றை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன். இயலாமை, சோம்பல், கருமித்தனம், கோழைத்தனம் ஆகியவற்றை விட்டும் உன்னிடம் பாது காப்பு தேடுகிறேன். கடனின் பெருக்கத்தை விட்டும் மனிதர் களின் ஆதிக்கத்தை விட்டும் உன்னிடம் பாதுகாப்பு தேடுகி றேன்.''

நூல்: புகாரி பாகம்: 7 பக்கம்: 158.

## தொழுகையிலே குர்ஆன் ஓதும் போதோ ஊசலாட்டம் ஏற்படும்போதோ ஓதும் துஆ

130. உஸ்மான் பின்ஆஸ்(ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். நான் கேட்டேன்: ''அல்லாஹ்வின் தூதரே! ஷைத்தான் எனது தொழுகையில் குர்ஆன் ஓதலில் குறுக்கிட்டுத் தடை ஏற்ப டுத்துகிறான். அந்தத் தொழுகையையும் குர்ஆன் ஓதலையும் குழப்புகிறான்'' அதற்கு நபியவர்கள் சொன்னார்கள். ''இது ஷைத்தானின் வேலை; இவனது பெயர் கின்ஸப்! நீங்கள் இவனது ஊசலாட்டத்தை உணர்ந்தால் 3 தடவை அல்லாஹ் விடத்தில் அவனைவிட்டுப் பாதுகாவல் தேடுங்கள். மேலும் இடது பக்கம் 3 தடவை எச்சில் துப்புங்கள்.''

நூல்: முஸ்லிம் பாகம் 4 பக்கம் 1729. இந்த அறிவிப்பில் உஸ்மான் (ரலி) அவர்கள் மேலும் கூறுகிறார்கள். ''நான் இவ்வாறே செய்தபோது அல்லாஹ் அந்த ஷைத்தானை என்னைவிட்டு தூரமாக்கிவிட்டான்.''

**ஏதேனும் காரியம் சிரமமாகிவிடும் போது ஓதும் துஆ**

اَللّٰهُمَّ لَا سَهْلَ إِلَّا مَا جَعَلْتَهُ سَهْلاً وَأَنْتَ تَجْعَلُ الْحَزْنَ إِذَا شِئْتَ سَهْلاً

*131.* பொருள்: *''யா அல்லாஹ்! நீ இலகுவாக்கிய காரியத்தைத் தவிர வேறெதுவும் இலகுவானது அல்ல! மேலும் நீ நாடிவிட்டால் துயரத்தை இலகுவாக்கி விடுகிறாய்!*

*நூல்: ஸஹீஹ் இப்னு ஹிப்பான் ஹதீஸ் எண் 427 (மவாஹித்). இப்னு ஸுன்னி ஹதீஸ் எண் 351. ஹாபிழ் சொல்கிறார், ''இது நம்பகமான நபிமொழி''. பார்க்க, இமாம் நவவியின் அல்அத்கார் பக்கம் 106. அமலுல் யவ்ம் வல் லைலா (இப்னு ஸுன்னி உடையது) ஆய்வு: பிஷ்ர் முஹம்மத் உயூன். பக்கம் 171 ஹதீஸ் எண் 351.*

**பாவம் செய்துவிட்டால் என்ன சொல்ல வேண்டும்? என்ன செய்ய வேண்டும்?**

*132. ''அடியான் ஏதேனும் பாவம் செய்துவிட்டால் பிறகு நல்ல முறையில் உளூ செய்து கொண்டு எழுந்து இரண்டு ரக்அத் தொழுது, அல்லாஹ்விடம் பாவமன்னிப்பு கோரினால் அல்லாஹ் அந்த அடியானை மன்னித்து விடுகிறான்.''*

*நூல்: அபூ தாவூத் பாகம் 2 பக்கம் 86. திர்மிதி பாகம் 2 பக்கம் 257. பார்க்க: ஸஹீஹுல் ஜாமிவு பாகம் 5 பக்கம் 173.*

**ஷைத்தானையும் அவனுடைய ஊசாட்டங்களையும் தூரமாக்கக் கூடிய துஆ**

*133. 1. ஷைத்தானை விட்டு அல்லாஹ்விடம் பாதுகாப்பு தேட வேண்டும்.*

*நூல்: அபூதாவூத் பாகம் 1 பக்கம் 206. ஸஹீஹுத் திர்மிதி பாகம் 1 பக்கம் 77. பார்க்க: திருக்குர்ஆன் 23:98-99.*

*134. 2.* பாங்கு

நூல்: முஸ்லிம் பாகம் 1 பக்கம் 291. புகாரி பாகம் 1 பக்கம் 151.

*135. 3.* ஹதீஸ்களில் வந்துள்ள திக்ர்களையும் குர்ஆனையும் ஓத வேண்டும்.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: உங்களின் இல்லங்களை மண்ணறைகளாக ஆக்கிவிடாதீர்கள். எந்த வீட்டில் அல்பகறா அத்தியாயம் ஓதப்படுகிறதோ, அந்த வீட்டில் இருந்து ஷைத்தான் வெருண்டோடுகிறான்.

முஸ்லிம் பாகம் 1 பக்கம் 539.

மேலும் காலை - மாலை நேரங்களில் தூங்கும் போது ஓதும் திக்ர்கள், வீட்டில் புகும்போது, வெளியேறும் போது ஓதும் திக்ர்கள், பள்ளிவாசலில் புகும்போது வெளியேறும் போது ஓதும் திக்ர்கள் ஆகியவற்றினாலும் ஷைத்தான் வெருண்டோடுகிறான். இதுபோலவே தூங்கும்போது ஆயதுல் குர்ஸி ஓதுவது, அல்பகறா அத்தியாயத்தின் இறுதி இரண்டு வசனங்களை ஓதுவது. மேலும் ஒருவர் - "லா இலாஹ இல்லல்லாஹு வஹ்தஹு லா ஷரீகலஹு லஹுல் முல்கு வலஹுல் ஹம்து வஹுவ அலா குல்லி ஷையின் கதீர்" எனும் திக்ரை 100 தடவை ஓதுகிறாரோ அவர் ஷைத்தானை விட்டுப் பாதுகாக்கப்படுவார். இதே போன்று பாங்கும் ஷைத்தானை வெருண்டோடச் செய்கிறது.

**விருப்பத்திற்கு மாறாக ஒரு நிகழ்ச்சி நிகழ்ந்திடும்போதும் அல்லது ஏதேனும் பணி தனது ஆற்றல் அதிகாரத்திற்கு உட்படாது போகும்போதும் ஓத வேண்டிய திக்ர்கள்:**

*136. 1.* அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "பலமிக்க இறைநம்பிக்கையாளன் பலம் குன்றிய இறை நம்பிக்கையாளனைவிடச் சிறந்தவன். அல்லாஹ்வுக்கு மிக

வும் நேசமானவனும் ஆவான். ஆனால் இருவரிலும் நன்மை இருக்கிறது. உங்களுக்குப் பயனுள்ள பணியில் ஆர்வம் கொள்ளுங்கள். மேலும் உங்களுக்கு ஏதேனும் இழப்பு ஏற்பட்டு விட்டால் ''நான் இவ்வாறு செய்திருந்தால் இப் படி ஆகியிருக்காது'' என்று கூறாதீர்கள். மாறாக

(கத்தரல்லாஹ் வமா ஷாஅ ஃபஅல) அல்லாஹ் ஏற்படுத் திய விதி; அவன் நாடியதைச் செய்தான் என்று கூறுங்கள். ஏனெனில் (லவ்) 'ஆல்' எனும் நிபந்தனைச் சொல் ஷைத்தா னின் செயலை ஆரம்பமாக்கி விடுகிறது.''

நூல்: முஸ்லிம் பாகம் 4 பக்கம் 2052.

137. 2. இயலாமலிருப்பதை (ஊக்கம் குன்றி விடுவதை) அல்லாஹ் பழிக்கின்றான். ஆயினும் நீங்கள் ஆற்றலின் முன்றானையைப் பற்றிப் பிடியுங்கள். ஏதேனும் பணி உங்களின் சக்தியை மீறிப் போகும் போது 'ஹஸ்பியல் லாஹு வ நிஃமல் வகீல்! (அல்லாஹ் எனக்குப் போதுமானவன்; பொறுப்பேற்பவர்களில் அவன் சிறந் தவன்) என்று சொல்லுங்கள்.'

நூல்: அபூதாவூத், தக்ரீஜுல் அத்கார். பக்கம் 106.

## குழந்தைகளுக்காக எந்த வார்த்தைகள் கொண்டு பாதுகாவல் தேடுவது?

இப்னு அப்பாஸ் (ரலி) அறிவிக்கிறார்கள். ''அண் ணல் நபி (ஸல்) அவர்கள் பின்வரும் வார்த்தைகளைக் கொண்டு ஹஸன் - ஹுஸைன் இருவருக்காகவும் பாதுகா வல் தேடக்கூடியவர்களாய் இருந்தார்கள்.

أُعِيذُكُمَا بِكَلِمَاتِ اللهِ التَّامَّةِ مِنْ كُلِّ شَيْطَانٍ وَهَامَّةٍ ،
وَمِنْ كُلِّ عَيْنٍ لَامَّةٍ

*138.* பொருள்: ஒவ்வொரு ஷைத்தானை விட்டும், நஞ்சுள்ள ஒவ்வொரு பிராணியை விட்டும் தீண்டக்கூடிய ஒவ்வொரு பார்வையை விட்டும் உங்கள் இருவருக்காக அல்லாஹ்வு டைய பூரண வார்த்தைகளைக் கொண்டு பாதுகாவல் தேடுகி றேன்.''

*நூல்: புகாரி பாகம் 4 பக்கம் 119.*

## நோயாளியை நலம் விசாரிக்கும்போது அவருக்காக ஓதும் துஆ

*நபி (ஸல்) அவர்கள் நோயாளியிடம் நலம் விசாரிப் பதற்காகச் சென்றால் இவ்வாறு சொல்வார்கள்:*

لَابَأْسَ طَهُوْرٌ اِنْ شَاءَ اللهُ

*139.* பொருள்: *பரவாயில்லை; அல்லாஹ் நாடினால் இந் நோயாளி குணமாகிவிடுவார்.*

*நூல்: புகாரி ஃபத்ஹுல் பாரி, பாகம் 10 பக்கம் 118.*

*மரண நேரம் நெருங்காத நோயாளியை நலம் விசாரிக் கச் செல்லும் ஒரு முஸ்லிம் 7 தடவை இவ்வாறு கூறினால் அந்நோயாளிக்கு நிவாரணம் அளிக்கப்படுகிறது.*

أَسْأَلُ اللهَ الْعَظِيْمَ رَبَّ الْعَرْشِ الْعَظِيْمِ اَنْ يَشْفِيَكَ

*140.* பொருள்: *மகத்துவம் உடைய அல்லாஹ்விடம் மகத் தான அர்ஷின் அதிபதியிடம் நான் இறைஞ்சுகிறேன், அவன் உனக்கு நிவாரணம் அளித்திட வேண்டும்!*

*நூல்: திர்மிதி, அபூதாவூத், பார்க்க: ஸஹீஹுத் திர்மிதி பாகம் 2 பக்கம் 210. ஸஹீஹுல்ஜாமிவு பாகம் 5 பக்கம் 180.*

## நலம் விசாரிப்பதன் சிறப்பு

*141. அலீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: "அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறிட நான் கேட்டேன். ஒரு மனிதர் தன் முஸ்லிம் சகோதரரை நலம் விசாரிப்பதற்காகச் செல்வாராயின் அவர் சுவனத்தின் கனிகளிடையே செல்பவராகிறார். எந்த அளவுக்கெனில், அவர் உட்கார்ந்தால் அவரை இறையருள் மூடிக் கொள்கிறது. அவர் நலம் விசாரிப்பதற்காகச் செல்லும் நேரம் காலை நேரமாயின் மாலை நேரம் வரை 70 ஆயிரம் மலக்குகள் அவருக்காக துஆ செய்துகொண்டிருக்கிறார்கள். மாலை நேரமாயின் 70 ஆயிரம் மலக்குகள் காலை நேரம் வரை அவருக்காக துஆ செய்துகொண்டிருக்கிறார்கள்."*

*நூல்: திர்மிதி, இப்னுமாஜா, அஹ்மத் பார்க்க: ஸஹீஹ் இப்னு மாஜா பாகம் 1 பக்கம் 244. ஸஹீஹ் திர்மிதி பாகம் 1 பக்கம் 286. அஹ்மத்ஷாகிர் அவர்கள் இதனை நம்பகமான ஹதீஸ் எனக் கூறியுள்ளார்கள்.*

## தம் உயிர்பிரிவது குறித்து நிராதரவு அடைந்த நோயாளி ஓத வேண்டிய துஆ

اَللّٰهُمَّ اغْفِرْلِيْ وَارْحَمْنِيْ وَاَلْحِقْنِيْ بِالرَّفِيْقِ الْاَعْلٰى

*142. பொருள்: 'யா அல்லாஹ்! என்னை மன்னித்தருள்வாயாக! என் மீது கருணை பொழிவாயாக! மிக உன்னதமான தோழனோடு என்னைச் சேர்த்து வைப்பாயாக!"*

*நூல்: புகாரி பாகம் 7, பக்கம் 10. முஸ்லிம் பாகம் 4 பக்கம் 1893.*

*143. ஆயிஷா (ரலி) அறிவிக்கிறார்கள். நபி(ஸல்) அவர்கள் (மரணம் நெருங்கிய நேரத்தில்) தங்களின் இரு கரங்களை*

யும் தண்ணீரில் போட்டு முகத்தில் தடவலானார்கள். மேலும் கூறினார்கள்:

لَا إِلٰهَ إِلَّا اللهُ إِنَّ لِلْمَوْتِ لَسَكَرَاتٍ

பொருள்: வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறில்லை. திண்ணமாக மரணத்திற்கு கஷ்டமான பலநிலைகள் (ஸகராத்) உள்ளன!

நூல்: புகாரி பாகம் 8 பக்கம் 144. இந்த ஹதீஸில் 'மிஸ்வாக்' பற்றியும் கூறப்பட்டுள்ளது.

لَا إِلٰهَ إِلَّا اللهُ وَاللهُ أَكْبَرُ، لَا إِلٰهَ إِلَّا اللهُ وَحْدَهُ، لَا إِلٰهَ إِلَّا اللهُ وَحْدَهُ لَا شَرِيكَ لَهُ، لَا إِلٰهَ إِلَّا اللهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ، لَا إِلٰهَ إِلَّا اللهُ وَلَا حَوْلَ وَلَا قُوَّةَ إِلَّا بِاللهِ

144. அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவர் யாருமில்லை. அல்லாஹ் பெரியவன். அல்லாஹ் ஒருவனைத் தவிர வணக்கத்திற்குரியவர் யாருமில்லை. வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை; அவன் தனித்தவன்; அவனுக்கு யாதொரு இணையுமில்லை. வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை; ஆட்சியதிகாரமும் அனைத்துப் புகழும் அவனுக்குரியதே. அவனைத் தவிர வணக்கத்திற்குரியவன் யாருமில்லை. தப்பிப்பதற்கான ஆற்றலும், எதுவும் செய்யும் சக்தியும் அல்லாஹ்வைக் கொண்டே தவிர வேறில்லை.

நூல்: திர்மிதி, இப்னுமாஜா - அல்பானி அவர்கள் இதனை நம்பகமான ஹதீஸ் எனக் கூறியுள்ளார்கள். பார்க்க: ஸஹீஹுத் திர்மிதி பாகம் 3 பக்கம் 152. ஸஹீஹ் இப்னுமாஜா பாகம் 2 பக்கம் 317.

## மரணநேரம் நெருங்கியவருக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டிய திக்ர்

لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ

*145.* அண்ணல்நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ''எவரது கடைசி வார்த்தை லாஇலாஹ இல்லல்லாஹ" என்றாகுமோ அவர் சுவனத்தில் பிரவேசிப்பார்.''

நூல்: அபூ தாவூத் பாகம் 3 பக்கம் 190. ஸஹீஹுல் ஜாமிவு பாகம் 5 பக்கம் 342.

## துன்பம் நேர்ந்தவர் ஓதும் திக்ர்

إِنَّا لِلّٰهِ وَإِنَّا إِلَيْهِ رَاجِعُوْنَ اَللّٰهُمَّ أْجُرْنِيْ فِيْ مُصِيْبَتِيْ وَاَخْلِفْ لِيْ خَيْرًا مِنْهَا

*146.* பொருள்: ''திண்ணமாக நாம் அல்லாஹ்வுக்குரியவர்கள். திண்ணமாக நாம் அவன் பக்கமே திரும்பிச் செல்லக் கூடியவர்கள் ஆவோம். யா அல்லாஹ்! எனது துன்பத்தில் எனக்குக் கூலி வழங்குவாயாக! மேலும் இதற்குப் பகரமாக இதனினும் சிறந்த இலகுவை வழங்குவாயாக!

நூல்: முஸ்லிம் பாகம் 2 பக்கம் 632.

## மரணம் அடைந்தவரின் கண்களை மூடும்போது ஓதும் துஆ

اَللّٰهُمَّ اغْفِرْ لِفُلَانٍ وَارْفَعْ دَرَجَتَهُ فِي الْمَهْدِيِّيْنَ وَاخْلُفْهُ فِيْ عَقِبِهِ فِي الْغَابِرِيْنَ وَاغْفِرْ لَنَا وَلَـهُ يَـا رَبَّ الْعَالَمِيْنَ وَافْسَحْ لَهُ فِيْ قَبْرِهِ وَنَوِّرْ لَهُ فِيْهِ

*147.* பொருள்: *'யா அல்லாஹ்! இன்னாருக்கு (பெயர் குறிப் பிடவும்) நீ மன்னிப்பு வழங்குவாயாக! நேர்வழி பெற்றவர்க ளில் அவரது அந்தஸ்தை உயர்த்துவாயாக! மேலும் அவருக் குப் பின்னால் வாழ்ந்துவருபவர்களில் அவரது பிரதிநிதியை ஆக்குவாயாக! அகிலம் அனைத்தையும் படைத்துப் பரிபா லிப்பவனே! எங்களுக்கும் அவருக்கும் மன்னிப்பு வழங்கு வாயாக! அவரது மண்ணறையில் விரிவை ஏற்படுத்துவா யாக! மேலும் அவருக்கு அங்கே ஒளி வழங்குவாயாக!*

*நூல்: முஸ்லிம் பாகம் 2 பக்கம் 634*

ஜனாஸாத் தொழுகையில் ஓதும் துஆ

اَللّٰهُمَّ اغْفِرْ لَهُ وَارْحَمْهُ، وَعَافِهِ ، وَاعْفُ عَنْهُ وَأَكْرِمْ نُزُلَهُ، وَوَسِّعْ مُدْخَلَهُ، وَاغْسِلْهُ بِالْمَاءِ وَالثَّلْجِ وَالْبَرْدِ ، وَنَقِّهِ مِنَ الْخَطَايَا كَمَا نَقَّيْتَ الثَّوْبَ الْأَبْيَضَ مِنَ الدَّنَسِ ، وَأَبْدِلْهُ دَارًا خَيْرًا مِنْ دَارِهِ، وَأَهْلاً خَيْرًا مِنْ أَهْلِهِ وَزَوْجًا خَيْرًا مِنْ زَوْجِهِ ، وَأَدْخِلْهُ الْجَنَّةَ ، وَأَعِذْهُ مِنْ عَذَابِ الْقَبْرِ [وَعَذَابِ النَّارِ]

*148.* பொருள்: *யா அல்லாஹ்! (மரணம் அடைந்த) இவரை மன்னிப்பாயாக! இவருக்கு அருள் பாலிப்பாயாக! இவ ருக்கு நற்சுகம் அளிப்பாயாக! மேலும் இவரைப் பொறுத்த ருள்வாயாக! மேலும் இவரது விருந்துபசாரத்தைக் கண்ணிய மாக்குவாயாக! இவர் புகும் இடத்தை (மண்ணறையை) விரிவாக்குவாயாக! மேலும் இவரைத் தண்ணீர், பனி, பனிக்கட்டி கொண்டு கழுவுவாயாக! மேலும் பாவங்களில் இருந்து இவரைத் தூய்மையாக்குவாயாக, எவ்வாறு வெண்*

**ணிற ஆடையை அழுக்குகளில் இருந்து தூய்மையாக்கி னாயோ அவ்வாறு! இவரது வீட்டுக்குப் பகரமாகச் சிறந்த வீட்டையும் இவருடைய குடும்பத்தாருக்குப் பகரமாக சிறந்த குடும்பத்தார்களையும் இவரது மனைவிக்குப் பகர மாகச் சிறந்த மனைவியையும் இவருக்கு வழங்கிடுவாயாக! மேலும் இவரைச் சுவனத்தில் பிரவேசிக்கச் செய்! மேலும் மண்ணறையின் வேதனையில் இருந்தும் நரகத்தின் தண்ட னையை விட்டும் இவரைக் காப்பாற்றுவாயாக!**

اَللّٰهُمَّ اغْفِرْ لِحَيِّنَا ، وَمَيِّتِنَا ، وَشَاهِدِنَا ، وَغَائِبِنَا ، وَصَغِيْرِنَا وَكَبِيْرِنَا ، وَذَكَرِنَا وَأُنْثَانَا . اَللّٰهُمَّ مَنْ أَحْيَيْتَهُ مِنَّا فَأَحْيِهِ عَلَى الْإِسْلَامِ وَمَنْ تَوَفَّيْتَهُ مِنَّا فَتَوَفَّهُ عَلَى الْإِيْمَانِ ، اَللّٰهُمَّ لَا تَحْرِمْنَا أَجْرَهُ وَلَا تُضِلَّنَا بَعْدَهُ

*149.* **பொருள்:** யா அல்லாஹ்! எங்களில் உயிருடன் இருப்ப வர்களுக்கும் இறந்து விட்டவர்களுக்கும், இங்கு வந்திருப்பவ ருக்கும் வராதவர்களுக்கும், எங்களில் சிறியவர்களுக்கும் பெரி யவர்க்கும், ஆணுக்கும் பெண்ணுக்கும் மன்னிப்பு வழங்கு வாயாக! யா அல்லாஹ்! எங்களில் எவரை நீ உயிர்வாழச் செய்கிறாயோ அவரை இஸ்லாமிய அடிப்படையில் வாழச் செய்வாயாக! மேலும் எங்களில் எவரை மரணிக்கச் செய்கி றாயோ அவரை ஈமானுடன் மரணிக்கச் செய்வாயாக! யா அல்லாஹ்! இவரது கூலியை விட்டும் எங்களைத் தடுத்து விடாதே! மேலும் இவருக்குப் பிறகு எங்களை வழிதவறச் செய்துவிடாதே!

நூல்: இப்னு மாஜா பாகம் *1* பக்கம் **480.** அஹ்மத் பாகம் *2* பக்கம் ***368.*** பார்க்க: ஸஹீஹ் இப்னுமாஜா பாகம் *1* பக்கம் ***251.***

اَللّٰهُمَّ إِنَّ فُلَانَ بْنَ فُلَانٍ فِيْ ذِمَّتِكَ ، وَحَبْلِ جِوَارِكَ ، فَقِهِ مِنْ فِتْنَةِ الْقَبْرِ وَعَذَابِ النَّارِ وَأَنْتَ أَهْلُ الْوَفَاءِ وَالْحَقِّ . فَاغْفِرْ لَهُ وَارْحَمْهُ إِنَّكَ أَنْتَ الْغَفُوْرُ الرَّحِيْمُ

150. பொருள்: *யா அல்லாஹ்! இன்னாரின் மகன் இன்னார் உனது பாதுகாப்பிலும் உனது அரவணைப்பிலும் உள்ளார். எனவே மண்ணறையின் குழப்பத்தை விட்டும் நரகத்தின் வேதனையை விட்டும் இவரை நீ காப்பாற்றுவாயாக! நீ வாக்கு நிறைவேற்றுபவனும் உண்மை உடையவனும் ஆவாய். நீ இவரை மன்னிப்பாயாக! இவருக்கு அருள்புரிவாயாக! திண்ணமாக நீ அதிகம் மன்னிப்பவனும் கருணைபுரிபவனும் ஆவாய்!*

*நூல்: இப்னுமாஜா. பார்க்க: ஸஹீஹ் இப்னுமாஜா பாகம் 1 பக்கம் 251. அஹ்காமுல் ஜனாயிஸ் பாகம்·3 பக்கம் 211.*

اَللّٰهُمَّ عَبْدُكَ وَابْنُ أَمَتِكَ احْتَاجَ إِلَى رَحْمَتِكَ ، وَأَنْتَ غَنِيٌّ عَنْ عَذَابِهِ إِنْ كَانَ مُحْسِنًا فَزِدْ فِيْ حَسَنَاتِهِ وَإِنْ كَانَ مُسِيْئًا فَتَجَاوَزْ عَنْهُ

151. பொருள்: *"யா அல்லாஹ்! உனது அடிமை, உனது அடிமைப் பெண்ணின் மகன் இப்போது உனது அருளின் பக்கம் தேவையாகிவிட்டான். நீ இவனை வேதனைப் படுத்த வேண்டுமென்பது உனக்கு தேவை இல்லை. இவன் நன்மை புரிந்தவனாக இருந்தால் இவனது நன்மைகளில்*

நீ அதிகப்படுத்துவாயாக! இவன் தீமை செய்தவனாக இருந்தால் இவனுக்கு நீ மன்னிப்பு வழங்குவாயாக!

இமாம் ஹாகிம் இந்த அறிவிப்பை நம்பகமானது எனக்கூறியுள்ளார்கள். அதற்கு தஹபி அவர்களும் உடன்பட்டுள்ளார்கள். பாகம் 1 பக்கம் 359 பார்க்க. அல்பானியின் அஹ்காமுல் ஜனாயிஸ், பக்கம் 125.

## குழந்தைக்கான ஜனாஸா தொழுகையில் ஓதும் துஆ

*152. 149-ஆம் எண்ணில் உள்ள பாவமன்னிப்புக்கான துஆவுக்குப் பிறகு இந்த துஆவை ஓதவும்*

اَللّٰهُمَّ اجْعَلْهُ فَرَطاً وَذُخْراً لِّوَالِدَيْهِ ، وَشَفِيْعاً مُجَاباً . اَللّٰهُمَّ ثَقِّلْ بِهِ مَوَازِيْنَهُمَا وَأَعْظِمْ بِهِ أُجُوْرَهُمَا ، وَأَلْحِقْهُ بِصَالِحِ الْمُؤْمِنِيْنَ وَقِهِ بِرَحْمَتِكَ عَذَابَ الْجَحِيْمِ

பொருள்: 'யா அல்லாஹ்! இக்குழந்தையை, முன்னரே சென்று தன் பெற்றோருக்காக விருந்துபசாரம் தயார் செய்யக் கூடியதாகவும் பொக்கிஷமாகவும் ஆக்கியருள்வாயாக! மேலும் ஏற்றுக் கொள்ளப்படக் கூடிய வகையில் சிபாரிஷ் செய்யக் கூடியதாகவும் ஆக்குவாயாக! யா அல்லாஹ்! இக்குழந்தையின் மூலம் பெற்றோரின் தராசைக் கனப்படுத்துவாயாக! மேலும் அவர்களின் நற்கூலியை அதிகப்படுத்துவாயாக! இறை விசுவாசம் கொண்ட நல்லோர் குழுவில் இக்குழந்தையைச் சேர்ப்பாயாக! உனது அருளின் மூலம் நரகத்தின் நெருப்பிலிருந்து இக்குழந்தையைக் காப்பாற்றுவாயாக!

*நூல்: ஷைகு அப்துல் அஜீஸ் பின் அப்துல்லாஹ்பின்பாஸ் அவர்களின் ''அத் துரூஸுல் முஹிம்மாலி ஆம்மத்தில் உம்மா'' பக்கம் 15.*

153. ஹஸன் பஸரி (ரஹ்) அவர்கள் குழந்தையின் மீது அல்ஃபாத்திஹா அத்தியாயம் ஓதி இந்த துஆவையும் ஓதுவார்கள்.

اَللّٰهُمَّ اجْعَلْهُ لَنَا فَرَطاً ، وَسَلَفاً ، وَأَجْراً

பொருள்: "யா அல்லாஹ்! இக்குழந்தையை எங்களுக்காக முன்னரே சென்று விருந்துபசாரம் தயார் செய்யக்கூடியதாகவும் முன்னோடியாகவும் நற்கூலியாகவும் ஆக்குவாயாக!"

நூல்: இமாம் பகவியின் ஷரஹுஸ் ஸுன்னா. பாகம் 5 பக்கம் 357. மேலும் இமாம் பகவி கூறினார்கள்: "இமாம் புகாரி அவர்கள் இது தொடர்பாக விளக்கம் அளித்துள்ளார்கள்."

### இறப்புக்கு ஆறுதல் சொல்வதற்கான துஆ

إِنَّ لِلّٰهِ مَا أَخَذَ ، وَلَهُ مَا أَعْطَى وَكُلُّ شَيْءٍ عِنْدَهُ بِأَجَلٍ مُسَمًّى .... فَلْتَصْبِرْ وَلْتَحْتَسِبْ

154. பொருள்: அல்லாஹ்வுக்கே சொந்தம்; எதை அவன் எடுத்தானோ அதுவும் எதை அவன் கொடுத்தானோ அதுவும்! ஒவ்வொரு பொருளும் அவனிடத்தில் ஒரு குறிப்பிட்ட தவணையுடன் உள்ளது! எனவே நீ பொறுமையை மேற்கொள்! அதற்கான (மறுமைக்) கூலியை எதிர்பார்த்திரு!

நூல்: புகாரி பாகம் 2 பக்கம் 80. முஸ்லிம் பாகம் 2 பக்கம் 636

மேலும் பின்வருமாறு கூறினாலும் அது சிறந்ததே!

أَعْظَمَ اللّٰهُ أَجْرَكَ ، وَأَحْسَنَ عَزَاءَكَ وَغَفَرَ لِمَيِّتِكَ

**பொருள்:** அல்லாஹ் உமக்கு மகத்தான கூலி வழங்கட்டு மாக! அழகிய ஆறுதலை அளிக்கட்டுமாக! மரணித்தவ ளுக்கு மன்னிப்பை வழங்குவானாக!

*நூல்: இமாம் நவவியின் 'அல்அத்கார்'' பக்கம் 126.*

## மரணம் அடைந்தவரை மண்ணறையில் வைக்கும்போது ஓதும் துஆ

بِسْمِ اللهِ وَعَلَى سُنَّةِ رَسُوْلِ اللهِ

*155.* **பொருள்:** அல்லாஹ்வின் திருப்பெயர் கொண்டு! அல் லாஹ்வுடைய தூதரின் வழிமுறையின்படி! (உங்களை மண் ணறையில் வைக்கிறேன்)

*நூல்: அபூ தாவூத் பாகம் 3 பக்கம் 314 அறிவிப்புத் தொடர் ஆதாரப் பூர்வமானது.*

இமாம் அஹ்மத் (ரஹ்) அவர்கள் அறிவித்துள்ள வார்த்தை இதுவாகும்:

بِسْمِ اللهِ وَعَلَى مِلَّةِ رَسُوْلِ اللهِ

அதாவது, அல்லாஹ்வின் திருப்பெயர் கொண்டு! அவ னுடைய தூதரின் மார்க்கத்தின்படி!'' (உம்மை மண்ணறை யில் வைக்கிறேன்) இதன் அறிவிப்புத் தொடரும் ஆதாரப் பூர்வமானதே!

## அடக்கம் செய்தபின் ஓதும் துஆ

*156.* அண்ணல் நபி (ஸல்) அவர்கள், மரணம் அடைந்த வரை அடக்கம் செய்து முடிந்ததும் அங்கு நின்றவாறு கூறினார்கள்: ''உங்கள் சகோதரருக்காக பாவ மன்னிப்பு கோருங்கள். அவர் உறுதியாய் நிலைத்திருப்பதற்காக துஆ இறைஞ்சுங்கள். ஏனெனில் இப்போது அவரிடம் விசா ரணை செய்யப்படுகிறது.''

நூல்: அபூ தாவூத், பாகம் 3 பக்கம் 315. இமாம் ஹாகிம் இந்த அறிவிப்பை நம்பகமானது என்று கூறியுள்ளார் கள். இமாம் தஹபி அவர்கள் அதற்கு உடன்பட்டுள் ளார்கள்.

### மண்ணறைகளைத் தரிசிக்கும் போது துஆ

اَلسَّلاَمُ عَلَيْكُمْ اَهْلَ الدِّيَارِ مِنَ الْمُؤْمِنِيْنَ وَالْمُسْلِمِيْنَ وَإِنَّا إِنْ شَاءَ اللّٰهُ بِكُمْ لاَحِقُوْنَ نَسْأَلُ اللّٰهَ لَنَا وَلَكُمُ الْعَافِيَةَ

157. பொருள்: "ஓ! இந்த இல்லங்களையுடைய இறைவிசு வாசிகளே! முஸ்லிம்களே! உங்கள் மீது சாந்தி நிலவட்டும்! அல்லாஹ் நாடும்போது நாங்களும் உங்களிடம் வந்து சேரக் கூடியவர்களாய் இருக்கிறோம். எங்களுக்காகவும் உங்களுக் காகவும் அல்லாஹ்விடம் நலம் வேண்டிப் பிரார்த்தனை செய்கிறோம்!

நூல்: முஸ்லிம் பாகம் 2 பக்கம் 671.

### பலமாகக் காற்றடிக்கும்போது ஓதும் துஆ

اَللّٰهُمَّ إِنِّي اَسْأَلُكَ خَيْرَهَا ، وَأَعُوْذُ بِكَ مِنْ شَرِّهَا

158. பொருள்: "யா அல்லாஹ்! இந்தக் காற்றின் நன்மையை நான் உன்னிடம் இறைஞ்சுகிறேன். மேலும் இதன் தீமையை விட்டு உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.

நூல்: அபூ தாவூத் பாகம் 4 பக்கம் 326. இப்னு மாஜா பாகம் 2 பக்கம் 1228. பார்க்க: ஸஹீஹ் இப்னுமாஜா பாகம் 2 பக்கம் 305.

اَللّٰهُمَّ إِنِّي أَسْأَلُكَ خَيْرَهَا ، وَخَيْرَ مَا فِيهَا ، وَخَيْرَ مَا أُرْسِلَتْ بِهِ
وَأَعُوذُ بِكَ مِنْ شَرِّهَا ، وَشَرِّ مَا فِيهَا ، وَشَرِّ مَا أُرْسِلَتْ بِهِ

*159.* பொருள்: *யா அல்லாஹ்!* இந்தக் காற்றின் நன்மையை யும் இதிலுள்ளதின் நன்மையையும் எதனைக் கொண்டு இந்தக் காற்று அனுப்பப்பட்டதோ அதன் நன்மையையும் நான் உன்னிடம் இறைஞ்சுகிறேன். மேலும் இந்தக் காற்றின் தீமையை விட்டும் இதிலுள்ளதின் தீமையை விட்டும் எதனைக் கொண்டு இது அனுப்பப்பட்டுள்ளதோ அதன் தீமையைவிட்டும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகி றேன்.

நூல்: *முஸ்லிம் பாகம் 2 பக்கம் 616. புகாரி பாகம் 4 பக்கம் 76.*

## இடி இடிக்கும்போது ஓதும் துஆ

*160. அப்துல்லாஹ்பின் ஸுபைர் (ரலி) அவர்கள், இடி சப்தத்தைக் கேட்டால் பேசுவதை நிறுத்தி விடுவார்கள்.* பிறகு இவ்வாறு ஓதுவார்கள்.

سُبْحَانَ الَّذِي يُسَبِّحُ الرَّعْدُ بِحَمْدِهِ وَالْمَلَائِكَةُ مِنْ خِيفَتِهِ

பொருள்: "அந்த இறைவன் மிகவும் தூய்மையானவன்; இடி முழக்கம் அவனைப் புகழ்வதோடு அவனது தூய்மை யையும் பறை சாற்றுகிறது. வானவர்களும் அவனுக்குப் பயந்து நடுங்கிய வண்ணம் அவனைப் புகழ்கிறார்கள்."

நூல்: *முஅத்தா பாகம் 2 பக்கம் 992. அல்பானி அவர்கள் கூறுகிறார்கள். "நபித் தோழர் செய்ததாக வந்துள்ள இந்த அமலின் அறிவிப்புத் தொடர் நம்பகமானதாகும்."*

## மழை வேண்டி ஓதும் துஆ

اَللّٰهُمَّ اسْقِنَا غَيْثًا مُغِيْثًا مَرِيْئًا مَرِيْعًا ، نَافِعًا غَيْرَ ضَارٍّ ، عَاجِلًا غَيْرَ آجِلٍ

*161.* பொருள்: *''யா அல்லாஹ்! எங்களுக்கு மழை பொழிந்தருள்வாயாக! உதவிகரமான, மகிழ்ச்சிகரமான, பசுமை ஏற்படுத்தக் கூடிய மழையை! நன்மை தரக்கூடிய, நட்டம் ஏற்படுத்தாத மழையை! விரைவான, தாமதமாகாத மழையை (பொழிந்தருள்வாயாக!)*

நூல்: *அபூதாவூத் பாகம் 1 பக்கம் 303. அறிவிப்புத் தொடர் நம்பகமானது.*

اَللّٰهُمَّ اَغِثْنَا ، اَللّٰهُمَّ اَغِثْنَا ، اَللّٰهُمَّ اَغِثْنَا

*162.* பொருள்: *''யா அல்லாஹ்! மழை பொழியச் செய்வாயாக! யா அல்லாஹ் மழை பொழியச் செய்வாயாக! யா அல்லாஹ்! மழை பொழியச் செய்வாயாக!''*

நூல்: *புகாரி பாகம் 1 பக்கம் 224. முஸ்லிம் பாகம் 2 பக்கம் 613.*

اَللّٰهُمَّ اسْقِ عِبَادَكَ ، وَبَهَائِمَكَ ، وَانْشُرْ رَحْمَتَكَ وَاَحْيِ بَلَدَكَ الْمَيِّتَ

*163.* பொருள்: *''யா அல்லாஹ்! உன் அடியார்களுக்கும் விலங்குகளுக்கும் தண்ணீர் புகட்டுவாயாக! மேலும் உனது அருளைப் பரப்புவாயாக! இறந்து கிடக்கும் இந்த உனது ஊருக்கு உயிர் கொடுப்பாயாக!''*

நூல்: *அபூ தாவூத் பாகம் 1 பக்கம் 305. இமாம் நவவியின் அல் அத்கார் பார்க்க: பக்கம் 150.*

### மழை பொழியும் போது ஓதும் துஆ

اَللّٰهُمَّ صَيِّبًا نَافِعًا

164. பொருள்: *யா அல்லாஹ்! பயன்தரும் மழை பொழியச் செய்வாயாக!*

நூல்: *புகாரியின் விரிவுரை ஃபத்ஹ் பாகம் 2 பக்கம் 518.*

### மழை பெய்த பின் ஓதும் துஆ

مُطِرْنَا بِفَضْلِ اللهِ وَرَحْمَتِهِ

165. பொருள்: *''அல்லாஹ்வின் அருளினாலும் அவனது கிருபையினாலும் நம் மீது மழை பொழிந்தது!''*

நூல்: *புகாரி பாகம் 1 பக்கம் 206. முஸ்லிம் பாகம் 1 பக்கம் 83.*

### மேகம் கலைவதற்கான துஆ

اَللّٰهُمَّ حَوَالَيْنَا وَلَا عَلَيْنَا . اَللّٰهُمَّ عَلَى الْآكَامِ وَالظِّرَابِ ، وَبُطُوْنِ الْأَوْدِيَةِ ، وَمَنَابِتِ الشَّجَرِ

166. பொருள்: *''யா அல்லாஹ்! எங்கள் சுற்றுப் புறங்களில் மழை பொழியச் செய்! எங்கள் மீதல்ல! யா அல்லாஹ்! குன்றுகளின் மீதும் மலையின் மீதும் ஓடைகளின் உட்புறங்களிலும் தாவரங்கள் முளைக்கும் இடங்களிலும் மழை பொழிந்திடச் செய்வாயாக!''*

நூல்: *புகாரி பாகம் 1 பக்கம் 224. முஸ்லிம் பாகம் 2 பக்கம் 164.*

### பிறை பார்க்கும் போது ஓதும் துஆ

اَللهُ أَكْبَرُ ، اَللّٰهُمَّ أَهِلَّهُ عَلَيْنَا بِالْأَمْنِ ، وَالْإِيْمَانِ وَالسَّلَامَةِ ،

وَالْإِسْلَامِ ، وَالتَّوْفِيقِ لِمَا تُحِبُّ وَتَرْضَى رَبُّنَا وَرَبُّكَ اللّٰهُ

*167.* பொருள்: அல்லாஹ் பெரியவன்! இறை விசுவாசம், ஈடேற்றம், இஸ்லாம் ஆகியவற்றைக் கொண்டும் நீ நேசிக் கின்ற - விரும்புகின்றவற்றின்பால் நல்லுதவி அளிப்பதோ டும் இந்தப் பிறையை எங்களின் மீது உதிக்கச் செய்வாயாக!''

நூல்: *திர்மிதி பாகம் 5 பக்கம் 504. தாரமி (இங்கு கொடுக்கப் பட்டுள்ள வார்த்தைகள் தாரமியில் உள்ளவையாகும்) பாகம் 1 பக்கம் 336. பார்க்க: ஸஹீஹ் திர்மிதி பாகம் 3 பக்கம் 157.*

## நோன்பு திறக்கும் போது ஓதும் துஆ

ذَهَبَ الظَّمَأُ ، وَابْتَلَّتِ الْعُرُوقُ ، وَثَبَتَ الْأَجْرُ إِنْ شَاءَ اللّٰهُ

*168.* பொருள்: *''தாகம் தீர்ந்தது! நரம்புகள் நனைந்தன! கூலி உறுதியாகிவிட்டது; இன்ஷா அல்லாஹ்!''*

நூல்: *அபூதாவூத், பாகம் 2 பக்கம் 306. பார்க்க: ஸஹீஹுல் ஜாமிவு பாகம் 4 பக்கம் 209.*

அப்துல்லாஹ் பின் அம்ருப்னு ஆஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார் கள். ''நோன்பாளிக்கு நோன்பு திறக்கும் போது ஓர் பிரார்த் தனை உள்ளது; அது மறுக்கப்படுவதில்லை!''

இப்னு அபீ மலீகா கூறுகிறார்கள். அப்துல்லாஹ் இப்னு அம்ர் (ரலி) அவர்கள் நோன்பு திறக்கும் போது இந்த துஆ ஓதுவார்கள்:

اَللّٰهُمَّ إِنِّيْ أَسْأَلُكَ بِرَحْمَتِكَ الَّتِيْ وَسِعَتْ كُلَّ شَيْءٍ أَنْ تَغْفِرَلِيْ

*169.* பொருள்: யா அல்லாஹ்! எல்லாப் பொருள்களையும் வியாபித்துள்ள உன் அருளைக் கொண்டு நான் உன்னிடம் யாசிக்கிறேன். நீ என்னை மன்னித்தருள வேண்டும்!''

நூல்: இப்னு மாஜா பாகம் *1* பக்கம் *557*. ஹாபிழ் இப்னு ஹஜர் அவர்கள் 'அல்அத்கார்' நூலின் அடிக்குறிப்பில் இந்த அறிவிப்பை நம்பகமானது எனக்கூறியுள்ளார் கள். பார்க்க: ஷரஹுல் அத்கார் பாகம் *4* பக்கம் *342*.

சாப்பிடுவதற்கு முன் ஓதும் திக்ர்.

உங்களில் ஒருவர் உணவு உண்ணும்போது

بِسْمِ اللّٰهِ

என்று சொல்லவும்.

*170.* பொருள்: அல்லாஹ்வின் திருப்பெயர் கொண்டு (உண்கிறேன்)

ஆரம்பத்தில் இவ்வாறு சொல்ல மறந்துவிட்டால்

بِسْمِ اللّٰهِ فِيْ أَوَّلِهِ وَآخِرِهِ

என்று சொல்லலாம்.

*170.A.* பொருள்: இதன் ஆரம்பத்திலும் இறுதியிலும் அல் லாஹ்வின் திருப்பெயர் கொண்டு (நான் உண்கிறேன்)

நூல்: அபூ தாவூத், பாகம் *3* பக்கம் *347*. திர்மிதி பாகம் *4* பக்கம் *288*. பார்க்க: ஸஹீஹுத்திர்மிதி பாகம் *2* பக்கம் *167*.

யாருக்கு அல்லாஹ் உணவு அளித்தானோ அவர் இவ் வாறு கூறவும்:

اَللّٰهُمَّ بَارِكْ لَنَا فِيْهِ وَاَطْعِمْنَا خَيْرًا مِنْهُ

171. பொருள்: "யா அல்லாஹ்! எங்களுக்கு இதில் அபிவி ருத்தி தருவாயாக! மேலும் எங்களுக்கு இதனை விடவும் சிறந்த உணவைத் தருவாயாக!"

மேலும் யாருக்கு அல்லாஹ் பால் வழங்கினானோ அவர் இவ்வாறு சொல்லட்டும்.

اَللّٰهُمَّ بَارِكْ لَنَا فِيْهِ وَزِدْنَا مِنْهُ

171-A.பொருள்: யா அல்லாஹ்! எங்களுக்கு இதில் அபிவி ருத்தி தந்தருள்வாயாக! மேலும் எங்களுக்கு இதிலிருந்து அதிகப்படுத்தித் தருவாயாக!

நூல்: திர்மிதி பாகம் 5 பக்கம் 506.

பார்க்க: ஸஹீஹுத் திர்மிதி பாகம் 3 பக்கம் 158.

**சாப்பிட்டு முடித்ததும் ஓதும் துஆ**

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ اَطْعَمَنِيْ هٰذَا ، وَرَزَقَنِيْهِ مِنْ غَيْرِ حَوْلٍ مِنِّي وَلَا قُوَّةٍ

172. பொருள்: எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவனே எனக்கு இந்த உணவை அளித்தான். என்னிடமிருந்து எவ் வித முயற்சியும் சக்தியுமின்றியே இதனை எனக்கு அருளி னான்.

நூல்: அபூ தாவூத், திர்மிதி இப்னுமாஜா, பார்க்க: ஸஹீ ஹுத் திர்மிதி பாகம் 3 பக்கம் 159.

اَلْحَمْدُ لِلّٰهِ حَمْدًا كَثِيْرًا طَيِّبًا مُبَارَكًا فِيْهِ غَيْرَ [مَكْفِيٍّ وَلَا ] مُوَدَّعٍ ، وَلَا مُسْتَغْنًى عَنْهُ رَبَّنَا

173. பொருள்: எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே; அருட் பேறும் அழகும் மிக்க அதிகமான புகழ்! (இதற்குமேல் தேவையில்லையென) போதுமெனக் கருதப்படாத புகழ்; விடப்படாத புகழ்; மேலும் அதை விட்டும் தேவையற்றி ருக்க முடியாத புகழ், எங்கள் இரட்சகனே!

நூல்: புகாரி பாகம் 6 பக்கம் 214.
திர்மிதி பாகம் 5 பக்கம் 507.

**உணவளித்தவருக்காக விருந்தினர் செய்யும் துஆ**

اَللّٰهُمَّ بَارِكْ لَهُمْ فِيمَا رَزَقْتَهُمْ ، وَاغْفِرْ لَهُمْ وَارْحَمْهُمْ

174. பொருள்: "யா அல்லாஹ்! நீ இவர்களுக்கு அளித்தவற் றில் அபிவிருத்தியை அருள்வாயாக! மேலும் இவர்களுக்கு மன்னிப்பு வழங்குவாயாக! கருணை புரிவாயாக!

நூல்: முஸ்லிம் பாகம் 3 பக்கம் 1915.

**பானம் வழங்கியவருக்காக அல்லது வழங்கிட நாடியவருக்காக ஓதும் துஆ**

اَللّٰهُمَّ اَطْعِمْ مَنْ اَطْعَمَنِيْ وَاسْقِ مَنْ سَقَانِي

175. பொருள்: "யா அல்லாஹ்! யார் எனக்கு உணவளித் தாரோ அவருக்கு நீ உணவளித்திடு! யார் எனக்கு பானம் புகட்டினாரோ அவருக்கு நீ பானம் புகட்டிடு!

நூல்: முஸ்லிம் பாகம் பக்கம் 126.

**எவர்களின் இல்லத்திற்குச் சென்று நோன்பு திறக்கிறாரோ அவர்களுக்காக ஓதும் துஆ**

اَفْطَرَ عِنْدَكُمُ الصَّائِمُوْنَ ، وَاَكَلَ طَعَامَكُمُ الْاَبْرَارُ ، وَصَلَّتْ عَلَيْكُمُ الْمَلَائِكَةُ

176. பொருள்: "நோன்பாளிகள் உங்களிடத்தில் நோன்பு திறக்கிறார்கள்; நல்ல மனிதர்கள் உங்கள் உணவை உண்கி றார்கள். மேலும் வானவர்கள் (மலக்குகள்) உங்களுக்கு துஆ செய்கிறார்கள்!"

நூல்: ஸுனன் அபிதாவூத், பாகம் 3 பக்கம் 367. அல்கலிமுத் தய்யிப் எனும் நூலின் அடிக் குறிப்பில் அல்பானி இந்த அறிவிப்பை நம்பகமானது எனக் குறிப்பிட்டுள் ளார்.

## உணவு எதிரில் இருந்து, நோன்பின் காரணத்தால் உண்ண முடியாதிருக்கும் போது துஆ செய்ய வேண்டும்

*177.* நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ''உங்க ளில் எவரும் உணவு உண்பதற்காக அழைக்கப்பட்டால் அவர் அந்த அழைப்பை ஏற்றிட வேண்டும். நோன்பாளி யாக இருந்தால் துஆ செய்ய வேண்டும். நோன்பு நோற்க வில்லையானால் உணவு உண்ண வேண்டும்!''

*நூல்: முஸ்லிம் பாகம் 2 பக்கம் 1054*

## முதல் கனியைப் பார்க்கும் போது ஓதும் துஆ

اَللّٰهُمَّ بَارِكْ لَنَا فِيْ ثَمَرِنَا، وَبَارِكْ لَنَا فِيْ مَدِيْنَتِنَا وَبَارِكْ لَنَا فِيْ صَاعِنَا ، وَبَارِكْ لَنَا فِيْ مُدِّنَا

178. பொருள்: 'யா அல்லாஹ்! எங்களுக்கு எங்களின் கனிக ளில் அபிவிருத்தி வழங்கு! எங்களுக்கு எங்களின் ஊரில் அபிவிருத்தி வழங்கு! எங்களுக்கு எங்களின் மரக்காலில் அபிவிருத்தி வழங்கு! எங்களுக்கு எங்களின் சிரங்கையில் அபிவிருத்தி வழங்கு!''

*நூல்: முஸ்லிம் பாகம் 2 பக்கம் 1000*

## தும்மலின் போது ஓதும் துஆ

உங்களில் ஒருவருக்குத் தும்மல் வந்தால் அவர் சொல் லட்டும்:

اَلْحَمْدُ لِلّٰهِ

*179.* ''எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே'' என்று. இதனைக் கேட்கும் அவரின் சகோதரர் சொல்லட்டும்:

يَرْحَمُكَ اللهُ

அல்லாஹ் உம்மீது அருள் பொழியட்டும்!

மேலும் அவரின் சகோதரர் 'யர்ஹமுகல்லாஹ்' சொன்னதும் அவர் சொல்லட்டும்:

يَهْدِيكُمُ اللهُ وَيُصْلِحُ بَالَكُم

பொருள்: அல்லாஹ் உங்களுக்கு வழிகாட்டட்டும், மேலும் உங்களின் நிலைமையைச் சீர்படுத்தட்டும்''.

நூல்: புகாரி பாகம் 7 பக்கம் 125.

**திருமணம் செய்பவருக்காகச் செய்யும் துஆ**

بَارَكَ اللهُ لَكَ ، وَبَارَكَ عَلَيْكَ ، وَجَمَعَ بَيْنَكُمَا فِي خَيْرٍ

180. பொருள்: அல்லாஹ் உமக்கு அருட்பாக்கியம் நல்கட்டும்; மேலும் உம்மீது அபிவிருத்தியைப் பொழியட்டும்; உங்கள் இருவரையும் நலனில் ஒன்றிணைத்து வைக்கட்டும்!

நூல்: அபூதாவூத், திர்மிதி, இப்னுமாஜா, பார்க்க: ஸஹீஹ்த் திர்மிதி பாகம் 1 பக்கம் 316.

**திருமணம் செய்து கொள்பவர் தனக்காக ஓதும் துஆ**
**வாகனம் வாங்கியதற்கான துஆ**

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்: ''உங்களில் ஒருவர் திருமணம் செய்தாலோ பணிப்பெண்ணை வாங்கினாலோ இந்த துஆவை ஓதவும்;

اَللّٰهُمَّ إِنِّي أَسْأَلُكَ خَيْرَهَا وَخَيْرَ مَا جَبَلْتَهَا عَلَيْهِ وَأَعُوذُ بِكَ مِنْ شَرِّهَا وَشَرِّ مَا جَبَلْتَهَا عَلَيْهِ

181. பொருள்: ''யா அல்லாஹ்! நான் உன்னிடம் — இதன் (இப்பெண்ணின்) நன்மையையும் யாசிக்கிறேன்! எதன் மீது

நீ இதனைப் படைத்துள்ளாயோ அதன் நன்மையையும் யாசிக்கிறேன்! மேலும் இதன் தீமையைவிட்டும் எதன் மீது நீ இதனைப் படைத்துள்ளாயோ அதன் தீமையை விட்டும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்!''

மேலும் ஒட்டகம் வாங்கினால் — அதன் மூக்கணங்க யிற்றைப் பிடித்துக் கொண்டு மேற்கண்டவாறு ஓதவும்!

நூல்: அபூதாவூத் பாகம் 2 பக்கம் 248
இப்னுமாஜா பாகம் 1 பக்கம் 617
பார்க்க: ஸஹீஹ் இப்னுமாஜா பாகம் 1 பக்கம் 321

### உடலுறவு கொள்வதற்கு முன்பு ஓதும் துஆ

بِسْمِ اللهِ . اَللّٰهُمَّ جَنِّبْنَا الشَّيْطَانَ ، وَجَنِّبِ الشَّيْطَانَ مَا رَزَقْتَنَا

182. பொருள்: அல்லாஹ்வின் திருப்பெயர் கொண்டு....! யா அல்லாஹ்! எங்களை ஷைத்தானிடமிருந்து பாதுகாப்பா யாக! மேலும் எந்தக் குழந்தைகளை எங்களுக்கு நீ வழங்கி னாயோ அவர்களையும் ஷைத்தானிடமிருந்து பாதுகாப்பா யாக!''

நூல்: புகாரி பாகம் 6. பக்கம் 141. முஸ்லிம் பாகம் 2 பக்கம் 1028.

### கோபத்தின் போது ஓத வேண்டியது

أَعُوذُ بِا للهِ مِنَ الشَّيْطَانِ الرَّجِيمِ

183. பொருள்: ''விரட்டப்பட்ட ஷைத்தானிடமிருந்து அல் லாஹ்வைக் கொண்டு பாதுகாவல் தேடுகிறேன்.''

நூல்: புகாரி பாகம் 7 பக்கம் 99. முஸ்லிம் பாகம் 4 பக்கம் 2015.

### துன்பத்திற்குள்ளானவரைப் பார்த்தால் ஓத வேண்டியது

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ عَافَانِي مِمَّا ابْتَلَاكَ بِهِ وَفَضَّلَنِيْ عَلَى كَثِيْرٍ مِمَّنْ خَلَقَ تَفْضِيْلًا

*184.* பொருள்: *எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! எத னைக் கொண்டு உன்னைச் சோதித்தானோ அதிலிருந்து அவனே எனக்கு ஆரோக்கியம் அளித்தான். மேலும் அவன் படைத்த பெரும்பாலான மக்களைவிட எனக்குச் சிறப்பு அளித்தான்!*

நூல்: *திர்மிதி பாகம் 5 பக்கம் 493 - 494 பார்க்க: ஸஹீஹுத் திர்மிதி பாகம் 3 பக்கம் 153.*

**அவையில் ஓதும் துஆ**

*185. இப்னு உமர் (ரலி) அறிவிக்கிறார்கள்: ''அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ஓர் அவையில் இருந்து எழுவதற்கு முன்னதாக 100 தடவை பின்வரும் இந்த துஆவை ஓதியதா கக் கணக்கிடப்பட்டுள்ளது.*

رَبِّ اغْفِرْلِي وَتُبْ عَلَيَّ إِنَّكَ أَنْتَ التَّوَّابُ الْغَفُوْرُ

பொருள்: *என் இரட்சகனே! என்னை மன்னித்தருள்வா யாக! மேலும் என்பக்கம் கருணையுடன் திரும்புவாயாக! திண்ணமாக நீ (அடியார்களின்) பாவமன்னிப்புக் கோரிக் கையை அதிகம் ஏற்பவனாகவும் பெரிதும் மன்னிப்பவனாக வும் இருக்கிறாய்!!*

நூல்: *திர்மிதி, பார்க்க: ஸஹீஹுத் திர்மிதி பாகம் 3 பக்கம் 153. இப்னு மாஜா பாகம் 2 பக்கம் 321. (இந்த அறிவிப்பின் வார்த்தைகள் திர்மிதியில் வந்தவை)*

**அவையின் பாவத்தை அகற்ற துஆ**

سُبْحَانَكَ اللّٰهُمَّ وَبِحَمْدِكَ ، أَشْهَدُ أَنْ لَا إِلٰهَ إِلَّا أَنْتَ أَسْتَغْفِرُكَ وَأَتُوْبُ إِلَيْكَ

186. பொருள்: *யா அல்லாஹ்! உன்னைப் புகழ்வதுடன் உனது தூய்மையையும் எடுத்துரைக்கிறேன். வணக்கத்திற்கு ரிய இறைவன் உன்னைத் தவிர வேறில்லை என்று நான் சாட்சியம் அளிக்கிறேன். மேலும் உன்னிடம் பாவமன் னிப்பு கோருகிறேன்.*

நூல்: திர்மிதி, அபூ தாவூத், நஸாஈ, இப்னு மாஜா, பார்க்க: ஸஹீஹுத் திர்மிதி பாகம் 3 பக்கம் 153

## எல்லா சபைகளையும் முடித்து வைப்பதற்கான வார்த்தைகள்

187. ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் எந்த ஓர் அவையில் அமர்ந்தாலும் எப்போது குர்ஆன் ஓதினாலும் எந்த ஒரு தொழுகை தொழுதாலும் இந்த வார்த்தைகளைக் கொண்டே முடிப்பார்கள். ஆயிஷா (ரலி) சொல்கிறார்கள்: நான் கேட்டேன்; ''அல்லாஹ்வின் தூதரே! நீங்கள் எந்த ஓர் அவையில் அமர்ந்தாலும் குர்ஆன் ஓதினாலும் தொழுதாலும் முடிவில் இந்த வார்த்தைகளையே ஓதுகிறீர்களே?'' அதற்கு நபியவர்கள் கூறினார்கள்: ஒரு சகோதரர் நன்மையான வார்த்தை பேசினால் அவரது நன்மையின் மீது இந்த வார்த்தைகள் கொண்டு முத்திரை வைக்கப்படும். எவரேனும் தீய வார்த்தை பேசினால் இந்த வார்த்தைகள் அதற்குப் பரிகாரமாக அமையும்.

அந்த வார்த்தைகள் இவைதாம்:

سُبْحَانَكَ ، وَبِحَمْدِكَ لاَ إِلٰهَ إِلاَّ أَنْتَ أَسْتَغْفِرُكَ وَأَتُوبُ إِلَيْكَ

பொருள்: உன்னைப் புகழ்வதுடன் துதிக்கவும் செய்கிறேன். உன்னைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் யாருமில்லை. உன்னிடம் பாவமன்னிப்பு கோருகிறேன். உன் பக்கமே மீளுகிறேன்.''

நூல்: இமாம் நஸாஈ அவர்களின் அமலுல் யவ்ம்வல் லைலா'' எனும் நூல். பக்கம் 273. முஸ்னத் அஹ்மத் பாகம் 6 பக்கம் 77. டாக்டர் ஃபாரூக் ஹம்மாத் அவர்கள் இதன் அறிவிப்புத் தொடர் நம்பகமானது எனக்கூறியுள்ளார்கள்.

### ஃகபரல்லாஹு லக (அல்லாஹ் உம்மை மன்னிப்பானாக) எனக் கூறியவருக்காக ஓதும் துஆ

அப்துல்லாஹ் இப்னு ஸர்ஜிஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். நபி (ஸல்) அவர்களின் சமூகத்திற்கு நான் வந்தேன். அவர்களின் உணவைக் கொஞ்சம் உண்டேன். பிறகு கூறினேன்:

غَفَرَ اللهُ لَكَ يَا رَسُوْلَ اللهِ

188. (அல்லாஹ் உங்களை மன்னித்தருளவானாக! அல்லாஹ்வின் தூதரே) என்று! அதற்கு நபி (ஸல்) அவர்கள் (வலக)

وَلَكَ

'உன்னையும் மன்னிப்பானாக' என்று கூறினார்கள்:

நூல்: அஹ்மத் பாகம் 5 பக்கம் 82. நஸாஈ அவர்களின் 'அமலுல் யவ்ம்வல் லைலா' பக்கம் 218. ஹதீஸ் எண் 421.

### உபகாரம் செய்தவருக்காக ஓதும் துஆ

எவருக்கு உபகாரம் செய்யப்பட்டதோ அவர் தன்னுடன் நல்லவிதமாக நடந்து கொண்டால் உபகாரம் செய்தவரை நோக்கி

جَزَاكَ اللهُ خَيْرًا

189. (ஜஸா கல்லாஹு கைரா) 'அல்லாஹ் உமக்கு நற்கூலி வழங்குவானாக' என்று கூறினால் அவரைப் போதியஅளவு புகழ்ந்தவர் ஆகிறார்.''

நூல்: திர்மிதி ஹதீஸ் எண்: 2035. பார்க்க: ஸஹீஹுல் ஜாமிவு ஹதீஸ் எண் 6244. ஸஹீஹுத் திர்மிதி பாகம் 2 பக்கம் 200.

## ஒரு மனிதன் தஜ்ஜாலின் குழப்பத்திலிருந்து பாதுகாப்பாக இருப்பதற்கான திக்ர்

*190.* *1.* ஒருவர் அல்கஹ்ஃபு அத்தியாயத்தின் ஆரம்ப *10* வசனங்களை மனப்பாடம் செய்து கொள்வாராயின் அவர் ஷைத்தானை விட்டுப் பாதுகாக்கப்படுவார்.

*2.* ஒவ்வொரு தொழுகையின் கடைசி அத்தஹிய்யாத்திற்குப் பின்பு தஜ்ஜாலின் குழப்பத்தில் இருந்து பாதுகாப்பு கோரிட வேண்டும்.

நூல்: முஸ்லிம் பாகம் *1* பக்கம் *555.* முஸ்லிமில் ஹதீஸ் எண் *55/56.*

## 'அல்லாஹ்வுக்காக உன்னை நான் நேசிக்கிறேன்' என்று சொன்னவருக்காக ஓதும் துஆ

أَحَبَّكَ الَّذِيْ أَحْبَبْتَنِيْ لَهُ

*191.* பொருள்: யாருக்காக நீர் என்னை நேசித்தீரோ அந்த இறைவன் உம்மை நேசிக்கட்டுமாக!

நூல்: அபூதாவூத் பாகம் *4* பக்கம் *333.* அறிவிப்புத் தொடர் ஆதாரப்பூர்வமானதாகும்.

## தனது செல்வத்தை உங்கள் முன் சமர்ப்பிப்பவருக்காக ஓதும் துஆ

بَارَكَ اللهُ لَكَ فِيْ أَهْلِكَ وَمَالِكَ

*192.* பொருள்: "அல்லாஹ், உமது குடும்பத்திலும் உமது செல்வத்திலும் அபிவிருத்தி செய்து உதவுவானாக!"

நூல்: புகாரி - ஃபத்ஹுல்பாரி பாகம் *4* பக்கம் *88.*

**கடனைத் திருப்பிக் கொடுக்கும்போது கடன் வழங்கியவருக்காகச் செய்யும் துஆ**

بَارَكَ اللهُ لَكَ فِيْ أَهْلِكَ وَمَالِكَ ، إِنَّمَا جَزَاءُ السَّلَفِ الْحَمْدُ وَالْأَدَاءُ

*193.* பொருள்: ''அல்லாஹ் உமது குடும்பத்திலும் செல்வத்திலும், அபிவிருத்தி செய்வானாக! கடன் கொடுத்ததற்கான பரிகாரம் புகழ்ந்துரைப்பதும் கடனைத் திருப்பிச் செலுத்துவதுமாகும்.''

நூல்: *நஸாஈ அவர்களின் அமலுல் யவ்ம்வல்லைலா. பக்கம் 300. இப்னு மாஜா பாகம் 2 பக்கம் 809. பார்க்க: ஸஹீஹ் இப்னுமாஜா பாகம் 2 பக்கம் 55*

**ஷிர்க் - இணைவைப்பை அஞ்சும் போது ஓதும் துஆ**

اَللّٰهُمَّ إِنِّي أَعُوْذُ بِكَ أَنْ أُشْرِكَ بِكَ وَأَنَا أَعْلَمُ، وَأَسْتَغْفِرُكَ لِمَا لَا أَعْلَمُ

*194.* பொருள்: *யா அல்லாஹ்! நான் அறிந்து* கொண்டே உன்னோடு பிறிதொன்றை இணையாக்குவதிலிருந்து உன்னிடம் நான் பாதுகாவல் தேடுகிறேன். மேலும் நான் அறியாத இணை வைப்புச் செயலிலிருந்தும் உன்னிடம் மன்னிப்பு கோருகிறேன்.''

நூல்: *அஹ்மத் பாகம் 4 பக்கம் 403. பார்க்க ஸஹீஹுல் ஜாமிவு பாகம் 3. பக்கம் 233. ஸஹீஹுத் தர்ஃகீப் வத் தர்ஹீப் (அல்பானி உடையது) பாகம் 1 பக்கம் 19.*

ஒருவர் பிறிதொருவருக்கு அன்பளிப்பு செய்கிறார். அல்லது தர்மம் செய்கிறார். அப்போது 'துஆ' செய்யப்பட்டதெனில் அதற்கு அவர் என்ன பதில் சொல்வார்?

ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு ஒரு தடவை ஓர் ஆடு அன்பளிப்பு செய்யப்பட்டது. இதனைப் பகிர்ந்தளித்து விடுங்கள்' என்று நபியவர்கள் சொன்னார்கள்! பணியாள் திரும்பி வந்ததும் ஆயிஷா (ரலி) அவர்கள் கேட்டார்கள். 'அவர்கள் (இறைச்சியைப் பெற்றுக் கொண்டு) என்ன சொன்னார்கள்?'' பணியாள் சொன்னார்: பாரகல்லாஹு ஃபீகும்

بَارَكَ اللهُ فِيْكُمْ

195. பொருள்: அல்லாஹ் உங்களில் அபிவிருத்தி அருள்வானாக!

ஆயிஷா (ரலி) அவர்கள் சொன்னார்கள்: வஃபீஹிம் பாரகல்லாஹு)

وَفِيْهِمْ بَارَكَ اللهُ

195-A. பொருள்: அவர்களிலும் அல்லாஹ் 'பரகத்' அருள்வானாக! மேலும் சொன்னார்கள். நமக்காக அவர்கள் என்ன பிரார்த்தனை செய்தார்களோ அதையே நாம் அவர்களுக்காகச் செய்தோம். எனவே நம்முடைய நற்கூலி நமக்காக எஞ்சியிருக்கும்.

நூல்: இப்னு ஸுன்னி பக்கம் 138. ஹதீஸ் எண்: 278 இப்னு கய்யிம் அவர்களின் 'அல்வாபிலுஸ் ஸைய்யிப்' பார்க்கவும். பக்கம் 304.

## சகுனத்தை வெறுத்தொதுக்கும் துஆ

اَللّٰهُمَّ لَا طَيْرَ اِلَّا طَيْرُكَ وَلَا خَيْرَ اِلَّا خَيْرُكَ وَلَا اِلٰهَ غَيْرُكَ

196. பொருள்: (இறைவா,) ''எது ஒன்றையும் நீ ஏற்படுத்துகிறாய் என்பதல்லாமல் சகுனம் என எதுவுமில்லை. உனது

நன்மையைத் தவிர வேறு நன்மை என்பதில்லை. வணக்கத்திற்குரிய இறைவன் உன்னைத் தவிர வேறில்லை.''

நூல்: அஹ்மத் பாகம் 2 பக்கம் 220. இப்னு ஸின்னி ஹதீஸ் எண்: 292. பார்க்க: அல் அஹாதீஸுஸ் ஸஹீஹா பக்கம் 1065.

**கால்நடை மீதோ வேறு ஏதேனும் வாகனத்திலோ பயணம் செய்யும்போது ஓதும் துஆ**

بِسْمِ اللهِ اَلْحَمْدُ لِلّٰهِ سُبْحَانَ الَّذِي سَخَّرَ لَنَا هٰذَا وَمَا كُنَّا لَهُ مُقْرِنِيْنَ وَإِنَّـا إِلَى رَبِّنَـا لَمُنْقَلِبُـوْنَ اَلْحَمْدُ لِلّٰهِ ، اَلْحَمْدُ لِلّٰهِ ، اَلْحَمْدُ لِلّٰهِ ، اَللهُ أَكْبَرُ ، اَللهُ أَكْبَرُ ، اَللهُ أَكْبَرُ ، سُبْحَانَكَ اللّٰهُمَّ إِنِّي ظَلَمْتُ نَفْسِيْ فَاغْفِرْلِي ، فَإِنَّهُ لَا يَغْفِرُ الذُّنُوْبَ إِلَّا أَنْتَ

197. பொருள்: அல்லாஹ்வின் திருப்பெயர் கொண்டு... எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவனே இந்த வாகனத்தை நமக்கு வசப்படுத்திக் கொடுத்தான்! உண்மையில் அதற்கான சக்தியை நாம் பெற்றிருக்கவில்லை! மேலும் திண்ணமாக நாம் நம் இரட்சகன் பக்கமே திரும்பிச் செல்பவர்கள் ஆவோம். அல்ஹம்துலில்லாஹ் (எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே - 3 தடவை) அல்லாஹு அக்பர் (அல்லாஹ் பெரியவன் - 3 தடவை) யா அல்லாஹ்! நீ தூயவன்! நான் என் ஆத்மாவுக்கு அநீதி இழைத்து விட்டேன்! நீ என்னை மன்னித்தருள்வாயாக! ஏனெனில் பாவங்களை மன்னிப்பவர் உன்னைத் தவிர வேறில்லை.

*நூல்: அபூதாவூத் பாகம் 3 பக்கம் 34. திர்மிதி பாகம் 5 பக்கம் 501. பார்க்க: ஸஹீஹுத் திர்மிதி பாகம் 3 பக்கம் 156.*

பயணத்தின் துஆ

اَللهُ اَكْبَرُ ، اَللهُ أَكْبَرُ ، اَللهُ أَكْبَرُ ، سُبْحَانَ الَّذِيْ سَخَّرَ لَنَا هٰذَا وَمَا كُنَّا لَهُ مُقْرِنِيْنَ وَإِنَّـا إِلَى رَبِّنَا لَمُنْقَلِبُوْنَ اَللّٰهُمَّ إِنَّا نَسْأَلُكَ فِيْ سَفَرِنَا هٰذَا الْبِرَّ وَالتَّقْوٰى، وَمِنَ الْعَمَلِ مَا تَرْضٰـى، اَللّٰهُـمَّ هَوِّنْ عَلَيْنَا سَفَرَنَا هٰذَا وَاطْوِ عَنَّا بُعْدَهُ ، اَللّٰهُمَّ أَنْتَ الصَّاحِبُ فِي السَّفَرِ ، وَالْخَلِيْفَةُ فِي الْأَهْلِ ، اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنْ وَعْثَاءِ السَّفَرِ ، وَكَآبَةِ الْمَنْظَرِ وَسُوْءِ الْمُنْقَلَبِ فِيْ الْمَالِ وَالْأَهْلِ ،

*198.* பொருள்: அல்லாஹ் பெரியவன், அல்லாஹ் பெரிய வன், அல்லாஹ் பெரியவன்! இதனை வசப்படுத்தித் தந்த (இறை)வன் தூயவன்! உண்மையில் இதனை வசப்படுத்தும் ஆற்றலை நாம் பெற்றிருக்கவில்லை! திண்ணமாக நாம் நம் இரட்சகனின் பக்கமே திரும்பிச் செல்பவர்கள் ஆவோம்!

யா அல்லாஹ்! இந்தப் பயணத்தில் நன்மையையும் பயபக்தியையும் நாங்கள் உன்னிடம் கோருகிறோம். மேலும் உனக்குத் திருப்தியான அமல்களைச் செய்யும் பாக்கியத்தைக் கேட்கிறோம்.

யா அல்லாஹ்! இந்தப் பயணத்தை எங்கள் மீது இலகுவாக்குவாயாக! மேலும் இதனுடைய தொலைவினை எங்களைவிட்டு நீ சுருட்டி விடுவாயாக!

*யா அல்லாஹ்! நீயே பயணத்தின் தோழன்! குடும்பத்தாரின் பிரதிநிதி! யா அல்லாஹ்! பயணத்தின் சிரமத்தை விட்டும் கவலையான தோற்றத்தை விட்டும் உன்னிடம் பாதுகாப்பு தேடுகிறேன்! பொருளிலும் குடும்பத்திலும் நட்டத்தோடு திரும்பி வருவதை விட்டு உன்னிடம் பாதுகாப்பு தேடுகிறேன்!*

நபி (ஸல்) அவர்கள் பயணத்திலிருந்து திரும்பும்போதும் இதே வார்த்தைகளை ஓதுவார்கள். மேலும் இதை அதிகப் படியாக ஓதுவார்கள்.

آيِبُوْنَ ، تَائِبُوْنَ ، عَابِدُوْنَ ، لِرَبِّنَا حَامِدُوْنَ

**198-A.** திரும்பி வருகிறோம். பாவ மன்னிப்பு தேடுகிறோம்; வழிபாடு செய்பவர்களாய் இருக்கிறோம். நம் இரட்சகனைப் புகழக்கூடியவர்களாயும் இருக்கிறோம்.

*நூல்: முஸ்லிம் பாகம் 2 பக்கம் 998.*

### ஊரினுள் நுழையும்போது ஓதும் துஆ

اَللّٰهُمَّ رَبَّ السَّمٰوَاتِ السَّبْعِ وَمَا اَظْلَلْنَ ، وَرَبَّ الْاَرْضِيْنَ
السَّبْعِ وَمَا اَقْلَلْنَ ، وَرَبَّ الشَّيَاطِيْنِ وَمَا اَضْلَلْنَ وَرَبَّ
الرِّيَاحِ وَمَا ذَرَيْنَ . اَسْاَلُكَ خَيْرَ هٰذِهِ الْقَرْيَةِ وَخَيْرَ اَهْلِهَا ،
وَخَيْرَ مَا فِيْهَا ، وَاَعُوْذُبِكَ مِنْ شَرِّهَا ، وَشَرِّ اَهْلِهَا ،
وَشَرِّ مَا فِيْهَا

199. பொருள்: *''யா அல்லாஹ்! ஏழு வானங்களின் மற்றும் அவை நிழலிட்டுள்ள பொருட்களின் இரட்சகனே! ஏழு*

பூமிகளின் மற்றும் அவை சுமந்துள்ள பொருட்களின் இரட்ச கனே! ஷைத்தான்களுக்கும் அவை வழிகெடுத்தவற்றிற்கும் இரட்சகனாக இருப்பவனே! காற்றுகளின் மற்றும் அவை சுழற்றியடிக்கும் பொருட்களின் இரட்சகனே! நான் இந்த ஊரின் நன்மையையும் இதில் வசிப்பவர்களின் நன்மையை யும் இதிலுள்ள பொருட்களின் நன்மையையும் உன்னிடம் கோருகிறேன். மேலும் இந்த ஊரின் தீமையைவிட்டு இதில் வசிப்பவர்களின் தீமையை விட்டு இதிலுள்ள பொருட்க ளின் தீமையை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகி றேன்.

*நூல்: ஹாகிம் பாகம் 2 பக்கம் 100. ஹாகிம் அவர்கள் இந்த அறிவிப்பை நம்பகமானது என்று சொல்லியுள்ளார் கள். இமாம் தஹபி அதற்கு உடன்பட்டுள்ளார்கள். பார்க்க: இப்னு ஸுன்னி பக்கம் 524. ஹாபிழ் இப்னு ஹஜர் அல் அத்கார் நூலின் அடிக்குறிப்பில் இதனை 'நல்ல அறிவிப்பு' எனக் கூறியுள்ளார்கள். பாகம் 5 பக்கம் 154. இதனை நஸாஈ அவர்கள் நல்ல அறிவிப் புத் தொடருடன் அறிவித்திருப்பதாக ஷைகு இப்னு பாஸ் கூறியுள்ளார்கள். பார்க்க: துஹ்ஃபதுல் அக்யார் பக்கம் 37.*

**கடை வீதியில் நுழையும் போது ஓதும் துஆ**

لَا إِلَهَ إِلَّا اللهُ وَحْدَهُ لَا شَرِيْكَ لَهُ، لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ يُحْيِي وَيُمِيْتُ وَهُوَ حَيٌّ لَا يَمُوْتُ بِيَدِهِ الْخَيْرُ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ

200. பொருள்: வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ் வைத் தவிர வேறில்லை. அவன் தனித்தவன்; அவனுக்கு

**யாதொரு இணையுமில்லை. ஆட்சியதிகாரம் அவனுக்குரியது! அவனுக்கே எல்லாப் புகழும்! அவனே வாழ்வும் மரணமும் அளிக்கிறான்! அவனோ நித்திய ஜீவன். மரணம் அடைவதில்லை. நன்மைகள் யாவும் அவன் கையில்தான்! மேலும் அவன் அனைத்தின் மீதும் பேராற்றல் கொண்டவனாவான்!**

நூல்: *திர்மிதி பாகம் 5 பக்கம் 491. ஹாகிம் பாகம் 1 பக்கம் 538. பார்க்க: ஸஹீஹுத் திர்மிதி பாகம் 2 பக்கம் 152.*

**விலங்கோ வாகனமோ சறுக்கி விழுந்தால் ஓதும் துஆ**

201. அல்லாஹ்வின் திருப்பெயர் கொண்டு! بِسْمِ اللهِ

நூல்: *அபூதாவூத் பாகம் 4 பக்கம் 296. இதன் அறிவிப்புத் தொடர் நம்பகமானது.*

**பயணம் செல்பவர் மற்றவர்களுக்காகச் செய்யும் துஆ**

أَسْتَوْدِعُكُمُ اللهَ الَّذِيْ لَا تَضِيْعُ وَدَائِعُهُ

202. பொருள்: ''நான் உங்களை அல்லாஹ்விடம் ஒப்படைக்கிறேன்; அவனிடம் ஒப்படைக்கப்பட்ட பொருட்கள் வீணாகிப் போவதில்லை!

நூல்: *அஹ்மத் பாகம் 2 பக்கம் 943. பார்க்க: ஸஹீஹ் இப்னுமாஜா பாகம் 2 பக்கம் 133.*

**பயணம் செல்பவருக்காக மற்றவர்கள் ஓதும் துஆ**

أَسْتَوْدِعُ اللهَ دِيْنَكَ ، وَأَمَانَتَكَ ، وَخَوَاتِيْمَ عَمَلِكَ

203. பொருள்: ''உமது தீனையும் உமது அமானத் பொறுப்புகளையும் பொருட்களையும் உமது பணிகளின் முடிவுகளையும் அல்லாஹ்விடம் ஒப்படைக்கிறேன்.

நூல்: அஹ்மத் பாகம் 2 பக்கம் 7. திர்மிதி பாகம் 5 பக்கம் 499. பார்க்க: ஸஹீஹுத் திர்மிதி பாகம் 2 பக்கம் 155.

زَوَّدَكَ اللهُ التَّقْوٰى ، وَغَفَرَ ذَنْبَكَ ، وَيَسَّرَ لَكَ الْخَيْرَ حَيْثُ مَا كُنْتَ

204. பொருள்: "அல்லாஹ் பயபக்தியை உமக்குப் பயணச் சாதனமாக்குவானாக! மேலும் உமது பாவத்தை மன்னிப்பானாக! நீர் எங்கிருந்தாலும் நன்மையை உமக்கு எளிதாக்குவானாக!"

நூல்: திர்மிதி, பார்க்க: ஸஹீஹுத்திர்மிதி பாகம் 3 பக்கம் 155.

## உயரமான இடங்களில் தக்பீரும் கீழே இறங்கும் போது தஸ்பீஹும் சொல்ல வேண்டும்

205. ஜாபிர் (ரலி) அறிவிக்கிறார்கள்: நாங்கள் உயரத்தில் ஏறும்போது 'அல்லாஹு அக்பர்' என்று சொல்வோம். கீழே இறங்கும்போது 'ஸுப்ஹானல்லாஹ்' என்று சொல்வோம்.

நூல்: புகாரியின் விரிவுரை ஃபத்ஹுல் பாரி, பாகம் 6 பக்கம் 135.

## அதிகாலையில் பயணி ஓதும் துஆ

سَمَّعَ سَامِعٌ بِحَمْدِ اللهِ ، وَحُسْنِ بَلَائِهِ عَلَيْنَا . رَبَّنَا صَاحِبْنَا ، وَأَفْضِلْ عَلَيْنَا عَائِذاً بِاللهِ مِنَ النَّارِ

206. பொருள்: கேட்பவர் கேட்டுக் கொண்டார், நாம் அல்லாஹ்வைப் புகழ்ந்ததையும் அவன் நம்மீது பொழிந்த அழகிய அருட்கொடைகளுக்காகப் புகழ்ந்ததையும்! எங்கள் இரட்சகனே! எங்களுக்குத் துணைவனாய் ஆகு! மேலும் எங்கள் மீது அருள் பொழிந்திடு! நரகத்திலிருந்து அல்லாஹ்

*விடம் பாதுகாப்பு தேடியவனாக (இந்த துஆவைக் கேட்கி றேன்)*

*நூல்: முஸ்லிம் பாகம் 4 பக்கம் 2086.*

## பயணத்திலும் மற்ற நேரத்திலும் எங்காவது தங்கும்போது ஓதும் துஆ

أَعُوْذُ بِكَلِمَاتِ اللهِ التَّامَّاتِ مِنْ شَرِّ مَا خَلَقَ

207. பொருள்: *''அல்லாஹ்வின் பரிபூரணமான வார்த்தைக ளைக் கொண்டு பாதுகாவல் தேடுகிறேன், அவன் படைத்த பொருட்களின் தீங்கினை விட்டும்!''*

*நூல்: முஸ்லிம் பாகம் 4. பக்கம் 2080.*

## பயணத்திலிருந்து திரும்பும் போது ஓதும் துஆ

*208. இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: ''அண் ணல் நபி (ஸல்) அவர்கள் போரிலிருந்தோ ஹஜ்ஜில் இருந்தோ திரும்பி வரும்போது உயரமான இடத்தின் மீது 3 தடவை 'அல்லாஹு அக்பர்' என்று கூறுவார்கள். பிறகு இந்த துஆவை ஓதுவார்கள்.*

لَا إِلٰهَ إِلَّا اللهُ وَحْدَهُ لَا شَرِيْكَ لَهُ ، لَهُ الْمُلْكُ ، وَلَهُ الْحَمْدُ ، وَهُوَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ ، آيِبُوْنَ ، تَائِبُوْنَ ، عَابِدُوْنَ لِرَبِّنَا حَامِدُوْنَ ، صَدَقَ اللهُ وَعْدَهُ ، وَنَصَرَ عَبْدَهُ وَهَزَمَ الْأَحْزَابَ وَحْدَهُ

பொருள்: *''வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை. அவன் தனித்தவன். அவனுக்கு யாதொரு இணையுமில்லை. ஆட்சியதிகாரம் அவனுக்குரி யதே! அனைத்துப் புகழும் அவனுக்கே! அவன் அனைத்தின்*

மீதும் ஆற்றல் கொண்டவன்! நாங்கள் திரும்பி வரக் கூடியவர்கள்; பாவமன்னிப்பு தேடக்கூடியவர்கள்; வழி பாடு செய்பவர்கள்! எங்கள் இரட்சகனைப் புகழக்கூடியவர் கள்! அல்லாஹ் தனது வாக்குறுதியை உண்மைப் படுத்தி விட்டான். தன் அடியாருக்கு உதவி செய்து விட்டான். தன்னந்தனியாக எதிரிக் கூட்டத்தினைத் தோற்கடித்து விட் டான்!

நூல்: புகாரி பாகம் 7 பக்கம் 163. முஸ்லிம் பாகம் 2 பக்கம் 980.

## மகிழ்ச்சிக்குரிய பொருளோ வெறுப்புக்குரிய பொருளோ எதிர்படும் போது என்ன ஓதுவது

அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு ஏதேனும் மகிழ்ச்சிக்கு உரிய பொருள் வந்தால் இவ்வாறு கூறுவார்கள்.

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِي بِنِعْمَتِهِ تَتِمُّ الصَّالِحَاتُ

209. பொருள்: "எல்லாப் புகழும் அல்லாஹ் ஒருவனுக்கே! அவனது அருட்கொடைகளைக் கொண்டே எல்லா நற்பணி களும் பூரண மடைகின்றன!"

நபி(ஸல்) அவர்களின் விருப்பத்திற்கு எதிரான ஏதே னும் ஒன்று ஏற்பட்டால் இவ்வாறு கூறுவார்கள்:

اَلْحَمْدُ لِلّٰهِ عَلٰى كُلِّ حَالٍ

210. பொருள்: எல்லா நிலையிலும் அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே!

நூல்: இப்னு ஸுன்னி அவர்களின் 'அமலுல் யவ்ம் வல் லைலா'.! ஹாகிம் அவர்கள் இதன் அறிவிப்புத் தொடரை நம்பகமானது என்று சொல்லியுள்ளார்கள். 'ஸஹீஹுல் ஜாமிவு' எனும் நூலில் அல்பானி அவர்க

ளும் இதன் அறிவிப்பை நம்பகமானது எனக் கூறியுள்ளார்கள்.

**நபி (ஸல்) அவர்களின் மீது 'ஸலவாத்' சொல்வதன் சிறப்பு**

*211. அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்.* ''எவர் என்மீது ஒரு தடவை 'ஸலவாத்' ஓதினாரோ அவர் மீது இறைவன் 10 தடவை கருணை பொழிகிறான்''

*நூல்: முஸ்லிம் பாகம் 1 பக்கம் 288*

*212. மேலும் நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்:* எனது மண்ணறையைத் திருவிழாத் தலமாக ஆக்கிவிடாதீர்கள். நீங்கள் எங்கு இருந்தாலும் அங்கிருந்தே என் மீது 'ஸலவாத்' சொல்லுங்கள். ஏனெனில் நீங்கள் எங்கிருந்தாலும் உங்களது 'ஸலவாத்' என்னிடம் வந்து சேருகிறது.

*நூல்: அபூதாவூத் பாகம் 2 பக்கம் 218. அஹ்மத் பாகம் 2 பக்கம் 367. பார்க்க: இமாம் நவவி அவர்களின் அல்அத்கார் பக்கம் 97. மேலாய்வு: அப்துல் காதிர் அல் அர்னவூத்*

**ஸலாம்: பரவலாக்குவது**

*213. அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்.* ''நீங்கள் இறை விசுவாசிகளாய் ஆகாதவரை சுவனம் புக மாட்டீர்கள். நீங்கள் ஒருவருக்கொருவர் நேசம் கொள்ளாத வரை இறை விசுவாசிகளாய் ஆக மாட்டீர்கள். நான் உங்களுக்கு ஒன்றைக் காண்பித்துத் தரட்டுமா? அதன்படி அமல் செய்தீர்களானால் நீங்கள் ஒருவருக்கொருவர் நேசம் கொள்வீர்கள்! (அது) உங்களுக்கிடையே 'சலாம்' சொல்லும் வழக்கத்தைப் பரவலாக்குங்கள் என்பதே!

*நூல்: முஸ்லிம் பாகம் 1 பக்கம் 74.*

*214. அம்மார் பின் யாஸிர் (ரலி) அறிவிக்கிறார்கள்.* மூன்று விஷயங்கள் உள்ளன. அவற்றைப் பெற்றிருப்பவர் ஈமான் - இறை விசுவாசத்தை ஒன்று சேர்த்துக் கொண்டவராவார்.

தன் அளவில் நீதி செலுத்துதல்; அனைத்துலக மக்களுக்கும் ஸலாத்தைப் பரவலாக்குதல், நெருக்கடியான நேரத்திலும் செலவு செய்தல்''

நூல்: புகாரியின் விரிவுரை ஃபத்ஹுல்பாரி பாகம் 1 பக்கம் 82. (நபித்தோழரின் சொல்லாக அறிவிக்கப்பட்டது)

215. அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: ''ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வினவினார்: இஸ்லாத்தின் எந்தப் பணி எல்லாப் பணிகளிலும் சிறந்தது என்று! அதற்கு நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். உணவு அளிப்பது, அறிமுகமானவருக்கும் அறிமுகமாகாதவருக்கும் ஸலாம் உரைப்பது.''

நூல்: புகாரியின் விரிவுரை ஃபத்ஹுல் பாரி பாகம் 1 பக்கம் 55. முஸ்லிம் பாகம் பக்கம் 65.

**சேவல் கூவும் போதும் கழுதை கத்தும் போதும் ஓதும் துஆ**

சேவலின் கூவலை (பாங்கினைக்) கேட்டீர்களாயின் அல்லாஹ்விடம் அவனது அருளைக் கோருங்கள்! அதாவது இவ்வாறு துஆ செய்யுங்கள்:

اَللّٰهُمَّ إِنِّيٓ أَسْئَلُكَ مِنْ فَضْلِكَ

216. பொருள்: யா அல்லாஹ்! உனது அருளினை உன்னிடம் நான் கோருகிறேன்.

ஏனெனில், அது மலக்கைக் கண்டுள்ளது. மேலும் எப்போது கழுதையின் கத்தலைக் கேட்கிறீர்களோ அப்போது ஷைத்தானை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாவல் தேடுங்கள். ஏனெனில் அது ஷைத்தானைக் கண்டுவிட்டது. அதாவது அப்போது,

أَعُوْذُ بِاللّٰهِ مِنَ الشَّيْطَانِ الرَّجِيْمِ

விரட்டப்பட்ட ஷைத்தானை விட்டும் அல்லாஹ்வைக் கொண்டு பாதுகாவல் தேடுகிறேன் என்று ஓதுங்கள்.

நூல்: புகாரியின் விரிவுரை ஃபத்ஹுல் பாரி பாகம் 6 பக்கம் 350. முஸ்லிம் பாகம் 4 பக்கம் 2092

## இரவில் நாய் குரைப்பதைக் கேட்டால் ஓதும் துஆ

217. ''இரவில் நாய்கள் குரைப்பதையும், கழுதைகள் கத்துவதையும் நீங்கள் கேட்கும்போது அல்லாஹ்விடம் பாதுகாவல் தேடுங்கள். ஏனெனில் நீங்கள் பார்க்காதவற்றை அவை பார்க்கின்றன.''

நூல்: அபூதாவூத் பாகம் 4 பக்கம் 327. அஹ்மத் பாகம் 3 பக்கம் 306.

'அல்கலிமுத் தய்யிபின்' அடிக்குறிப்பில் அல்பானி அவர்கள் இதன் அறிவிப்பை நம்பகமானது என்று கூறியுள்ளார்கள்.

## எவரைத் திட்டி ஏசிப் பேசினீர்களோ, அவருக்காக ஓதும் துஆ

அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். அண்ணல்நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு துஆ ஓதியதை நான் கேட்டேன்.

اَللّٰهُمَّ فَاَيُّمَا مُؤْمِنٍ سَبَبْتُهُ فَاجْعَلْ ذٰلِكَ لَهُ قُرْبَةً إِلَيْكَ يَوْمَ الْقِيَامَةِ

218. பொருள்: ''யா அல்லாஹ்! எந்த முஸ்லிமை நான் திட்டிப் பேசிவிட்டேனோ அவருக்கு அந்த ஏச்சுப் பேச்சை மறுமைநாளில் உன் பக்கம் நெருங்கி வருவதற்கான சாதனமாக ஆக்குவாயாக!''

நூல்: புகாரியின் விரிவுரை ஃபத்ஹுல்பாரி பாகம் 11 பக்கம் 171. முஸ்லிம் பாகம் 4 பக்கம் 2007. முஸ்லிமில் இடம் பெற்றுள்ள வார்த்தை இதுவாகும்:

فَاجْعَلْهَا لَهُ زَكَاةً وَّرَحْمَةً

*அதனைத் தூய்மைக்கும் கிருபைக்கும் உரிய சாதனமாக ஆக்குவாயாக!*

## ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமைப் புகழும் போது என்ன சொல்ல வேண்டும்?

*219. அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள். உங்களில் எவரும் தேவையை முன்னிட்டே மற்றொருவரைப் புகழ்வதாக இருந்தால் இவ்வாறு கூறலாம். இன்னார் சம்பந்தமாக நான் இவ்வாறு நினைக்கிறேன். மேலும் அல்லாஹ் அவரிடம் கணக்கு வாங்குபவனாக இருக்கிறான். நான் எவரையும் அல்லாஹ்வின் முன்னிலையில் தூய்மையானவராக உறுதி கூறுவதில்லை! நான் இன்னாரை இப்படி, இப்படிப்பட்டவர் (நல்லவர், வாய்மையானவர்) எனக் கருதுகிறேன் - இந்த அளவுக்குப் புகழ்வதும் கூட அவரைப் பற்றி நல்ல முறையில் அவர் அறிந்திருந்தால் மட்டும்தான் அவ்வாறு செய்ய வேண்டும்!*

*நூல்: முஸ்லிம் பாகம் 4 பக்கம் 2296.*

## ருக்னுல் யமானிக்கும் ஹஜருல் அஸ்வத்துக்கும் மத்தியில் ஓதும் துஆ

*அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ருக்னுல் யமானிக்கும் ஹஜருல் அஸ்வத்துக்கும் மத்தியில் இவ்வாறு துஆ செய்வார்கள்.*

رَبَّنَا آتِنَا فِي الدُّنْيَا حَسَنَةً وَفِي الْآخِرَةِ حَسَنَةً وَقِنَا عَذَابَ النَّارِ

220. பொருள்: *எங்கள் இரட்சகனே! எங்களுக்கு இவ்வுலகிலும் மறுவுலகிலும் நன்மையை வழங்குவாயாக! மேலும்*

நரகத்தின் வேதனையிலிருந்தும் எங்களைக் காப்பாற்றுவா யாக!

நூல்: அபூதாவூத் பாகம் 2 டக்கம் 179. அஹ்மத் பாகம் 3 பக்கம் 411. இமாம் பகவியின் ஷரஹுஸ் ஸுன்னா பாகம் 7 பக்கம் 128.

## ஸஃபா - மர்வா இரு குன்றுகளின் மீது ஏறி நிற்கும்போது ஓதும் துஆ

ஜாபிர் (ரலி) அவர்கள், அண்ணல் நபி (ஸல்) அவர்கள் செய்ததை விவரித்துக் கொண்டு வரும்போது கூறுகிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் ஸஃபாவுக்கு அருகே வந்தபோது

إِنَّ الصَّفَا وَالْمَرْوَةَ مِنْ شَعَائِرِ اللهِ أَبْدَأُ بِمَا بَدَأَ اللهُ بِهِ

என்று ஓதினார்கள்.

221. பொருள்: ஸஃபா - மர்வா இரு குன்றுகளும் அல்லாஹ்வின் சின்னங்களில் உள்ளவையாகும. அல்லாஹ் எதைக் கொண்டு ஆரம்பம் செய்தானோ அதைக் கொண்டே நான் ஆரம்பம் செய்கிறேன்.

அவ்விதமே நபி (ஸல்) அவர்கள் ஸஃபா குன்றிலிருந்து ஆரம்பம் செய்தார்கள். அதன் மீது சிறிது ஏறினார்கள். கஅபாவை அங்கிருந்து காணும் அளவுக்கு! அங்கே கிப்லாவை முன்னோக்கி நின்றார்கள். மேலும் ஓதினார்கள்;

لَا إِلٰهَ إِلَّا اللهُ وَحْدَهُ لَا شَرِيكَ لَهُ ، لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ

عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ ، لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ وَحْدَهُ أَنْجَزَ وَعْدَهُ ،

وَنَصَرَ عَبْدَهُ وَهَزَمَ الْأَحْزَابَ وَحْدَهُ

*221*-**A.** பொருள்: வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ் வைத் தவிர வேறு யாருமில்லை. அவன் தனித்தவன்; அவனுக்கு யாதொரு இணையுமில்லை. ஆட்சியதிகாரம் அவனுக்குரியதே! புகழ் அனைத்தும் அவனுக்கே! மேலும் அவன் அனைத்தின் மீதும் ஆற்றல் நிறைந்தவன்! அல்லாஹ் ஒருவனைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறு யாருமில்லை. அவன் தன் வாக்குறுதியை நிறைவேற்றி னான்; தன் அடியாருக்கு உதவினான்; அவன் ஒருவனே எதிரிக்கூட்டத்தினரைத் தோல்வியுறச் செய்தான்!

பிறகு இதற்கிடையே துஆ ஓதினார்கள். இவ்வாறு மூன்று தடவை செய்தார்கள். இது நீளமான ஹதீஸ் ஆகும். மர்வா குன்றின் மீதும் இவ்வாறே செய்தார்கள் என்கிற வாசகங்களும் அதில் உள்ளன.

நூல்: முஸ்லிம் பாகம் 2. பக்கம் 888.

## அரஃபா நாள் - துல் ஹஜ் 9-இல் ஓதும் துஆ

மிகச் சிறந்த துஆ அரஃபா நாளின் துஆ ஆகும். மேலும் மிகச் சிறந்த வார்த்தை (கலிமா), நானும் எனக்கு முன்னர் சென்ற நபிமார்களும் கூறிய இந்த வார்த்தைதான்:

لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ وَحْدَهُ لَا شَرِيْكَ لَهُ ، لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ

عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ

222. பொருள்: வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ் வைத் தவிர வேறில்லை. அவன் தனித்தவன்; அவனுக்கு யாதொரு இணையுமில்லை. ஆட்சியதிகாரம் அவனுக்குரி யதே! புகழ் அனைத்தும் அவனுக்குரியதே! மேலும் அவன் அனைத்தின் மீதும் ஆற்றல் நிறைந்தவன்.

நூல்: திர்மிதி, பார்க்க: ஸஹீஹுத் திர்மிதி பாகம் 3, பக்கம் 184. அல்பானி அவர்கள் இதனைச் சிறந்த அறிவிப்புத் தொடர் எனக்கூறியுள்ளார்கள். அல்பானியின் அல்அஹாதீ ஸுஸ் ஸஹீஹா' எனும் நூலைப் பார்க்கவும். பாகம் 4 பக்கம் 6.

மஷ்அருல்ஹராம் - (முஸ்தலிஃபா)இல் ஓதும் திக்ர்

223. ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்; நபி (ஸல்) அவர்கள் ஒட்டகத்தின் மீது பயணமாகி (முஸ்தலிஃபா) மஷ்அருல்ஹராம் வந்தார்கள். கிப்லாவை முன்னோக்கினார் கள். அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்தார்கள். தக்பீர் சொன்னார்கள். லா இலாஹ இல்லல்லாஹு.... எனும் தொடர் ஓதினார்கள். அதிகம் வெளிச்சம் பரவும் வரை அங்கே நின்று கொண்டிருந்தார்கள். பிறகு சூரியன் உதயமா வதற்குச் சற்று முன்னதாக அங்கிருந்து கிளம்பினார்கள்.

நூல்: முஸ்லிம் பாகம் 2 பக்கம் 891.

## தூண்களில் கல் எறியும்போது ஒவ்வொரு கல்லுக்கும் தக்பீர் சொல்ல வேண்டும்

224. அண்ணல் நபி(ஸல்) அவர்கள் மூன்று தூண்களில் கல் எறியும் போதெல்லாம் 'அல்லாஹு அக்பர்' என்று சொன் னார்கள். பிறகு சற்று முன்னே சென்று கிப்லாவை முன் னோக்கி நின்று கொண்டு கைகளை உயர்த்தி துஆ செய்தார் கள். முதல் இரண்டு தூண்களிலும் கல் எறிந்த பிறகு

இவ்வாறு செய்தார்கள். ஆனால் 'ஜம்றதுல் அகபா'வில் கல் எறிந்தார்கள். ஒவ்வொருமுறை கல்லெறியும் போதும் 'அல் லாஹு அக்பர்' என்று சொன்னார்கள். அதன் பிறகு திரும்பி விட்டார்கள்; அதன் அருகில் நிற்கவில்லை!

நூல்: புகாரி, அதன் விரிவுரை ஃபத்ஹுல் பாரி பாகம் 3 பக்கம் 583 - 584 - 581 முஸ்லிமிலும் இந்த அறிவிப்பு வந்துள்ளது.

## 'ஹஜருல் அஸ்வத்' உள்ள மூலையில் தக்பீர் சொல்வது

225. அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ஒட்டகத்தின் மீது அமர்ந்து கஅபாவை வலம் வந்தார்கள். ஹஜருல் அஸ்வத் உள்ள முலைக்கு வரும்போது அதனை நோக்கி ஒரு பொருளைக் கொண்டு (கைப் பிரம்புகொண்டு) சைக்கினை செய்தார்கள். அல்லாஹு அக்பர் என்று கூறினார்கள்.

நூல்: புகாரி, அதன் விரிவுரை ஃபத்ஹுல்பாரி பாகம் 3 பக்கம் 476.

## எதிரிக்குத் தோல்வி ஏற்படுவதற்காக ஓதும் துஆ

اَللّٰهُمَّ مُنْزِلَ الْكِتَابِ سَرِيْعَ الْحِسَابِ اِهْزِمِ الْأَحْزَابَ اَللّٰهُمَّ اهْزِمْهُمْ وَزَلْزِلْهُمْ

226. பொருள்: யாஅல்லாஹ்! வேதம் அருளியவனே! விரைவாகக் கேள்வி கணக்கு கேட்பவனே! இந்த எதிரிக் கூட்டத்தினரைத் தோல்வி அடையச் செய்! யா அல்லாஹ்! இவர்களுக்குத் தோல்வியைக் கொடு! இவர்களுக்குக் கடுமையான பூகம்பத்தை ஏற்படுத்து!

நூல்: முஸ்லிம் பாகம் 3 பக்கம் 1362.

## ஒரு கூட்டத்தார் குறித்து அஞ்சும்போது என்ன ஓத வேண்டும்?

اَللّٰهُمَّ اكْفِنِيْهِمْ بِمَا شِئْتَ

227. பொருள்: *யா அல்லாஹ்! இவர்களை விட்டும் நீ எனக்குப் போதுமாகிவிடு; நீ விரும்பிய ஒன்றைக் கொண்டு!*

*நூல்: முஸ்லிம் 4 பக்கம் 2300.*

## ஆச்சரியத்தின்போதும் மகிழ்ச்சிகரமான பணியின் போதும் ஓதும் துஆ

سُبْحَانَ اللّٰهِ

*228. 1. ஸுப்ஹா னல்லாஹ்!*
*(அல்லாஹ் தூய்மையானவன்!)*
*நூல்: புகாரி, அதன் விரிவுரை ஃபத்ஹுல்பாரி பாகம் 1 பக்கம் 210, 390, 414 முஸ்லிம் பாகம் 4 பக்கம் 1857.*

اَللّٰهُ أَكْبَرُ

*229. 2. அல்லாஹு அக்பர் (அல்லாஹ் மிகப் பெரியவன்)*

*நூல்: புகாரி, ஃபத்ஹுல் பாரி பாகம் 8 பக்கம் 441. பார்க்க: ஸஹீஹுத் திர்மிதி பாகம் 2 பக்கம் 103, பாகம் 2 பக்கம் 335. முஸ்னத் அஹ்மத் பாகம் 5 பக்கம் 218.*

## சந்தோசமான செய்தி ஒருவரிடம் வரும்போது அவர் செய்ய வேண்டியதென்ன?

*230. அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் ஏதேனும் விஷயம் (பற்றிய செய்தி) வந்து அதனால் அவர்கள் மகிழ்ச்சி அடைந்தார்களெனில் அல்லாஹ்வுக்கு நன்றி செலுத்துவதற் காக உடனே ஸஜ்தாவில் விழுவார்கள்!*

*நூல்: அபூ தாவூத், திர்மிதி, இப்னுமாஜா, பார்க்க: ஸஹீஹ் இப்னு மாஜா, பாகம் 1 பக்கம் 233. இர்வாவுல் ஃகலீல் பாகம் 2 பக்கம் 226.*

### தனது உடலில் வலியை உணருபவர் என்ன செய்ய வேண்டும்? என்ன ஓத வேண்டும்?

**231.** தனது கையை உடலில் வலியுள்ள பகுதியின் மீது வைத்து 'பிஸ்மில்லாஹ்' என்று மூன்று தடவை சொல்ல வேண்டும். பிறகு ஏழு தடவை இவ்வாறு ஓத வேண்டும்:

أَعُوْذُ بِاللّٰهِ وَقُدْرَتِهِ مِنْ شَرِّ مَا أَجِدُ وَأُحَاذِرُ

பொருள்: அல்லாஹ்வின் கண்ணியம் மற்றும் ஆற்றலைக் கொண்டு பாதுகாவல் தேடுகிறேன்; நான் உணருகிற அஞ்சுகிற தீமையை விட்டு!

### ஒரு பொருளைக் குறித்துத் தனது கண்பட்டுவிடும் என அஞ்சினால் என்ன ஓத வேண்டும்?

**232.** உங்களில் ஒருவர் தனது சகோதரரின் பொருளையோ தன்னிடமுள்ள பொருளையோ தனது செல்வங்களில் ஒன்றையோ பார்த்து இது நன்றாக இருக்கிறதே எனக் கருதினால் அந்தப் பொருளுக்காகப் 'பரகத்' வேண்டி துஆ செய்ய வேண்டும். ஏனெனில், 'கண்' (படுவதென்பது) உண்மையே!

*நூல்: அஹ்மத், பாகம் 4 பக்கம் 447. இப்னு மாஜா, மாலிக். பார்க்க: ஸஹீஹுல் ஜாமிவு பாகம் 1 பக்கம் 212. ஸாதுல் மஆத் பாகம் 4 பக்கம் 170.*

## பிற்சேர்க்கை

இப்பகுதியில் பலதரப்பட்ட நற்காரியங்கள், ஒருங்கிணைந்த ஒழுக்க முறைகள் குறிப்பிடப்படுகின்றன!

**233.** ''இரவின் இருள் படர்ந்து விடும் போது (இன்னோர் அறிவிப்பின்படி) மாலை நேரம் வந்து விடும் போது உங்கள் குழந்தைகளைத் தடுத்து வையுங்கள். ஏனெனில் அந்நேரத் தில் ஷைத்தான்கள் பரவுகிறார்கள். இரவில் சிலமணி நேரம் கழிந்ததும் அவர்களை விட்டுவிடுங்கள். மேலும் வாசற்கத வுகளை அடைத்து வையுங்கள்; அல்லாஹ்வின் பெயர் கூறுங்கள்! (அதாவது 'பிஸ்மில்லாஹ்' சொல்லி அடையுங் கள்) ஏனென்றால் அடைக்கப்பட்ட வாயிலை ஷைத்தான் திறக்கமாட்டான்! மேலும் உங்கள் தண்ணீர்ப் பைகளின் வாய்களை பிஸ்மில்லாஹ் சொல்லிக் கயிறுகளால் கட்டுங் கள்! மேலும் உங்கள் பாத்திரங்களை அல்லாஹ்வின் பெயர் கூறி மூடி வையுங்கள்! அவற்றில் குறைவான பொருளே வைத்திருந்தாலும் சரியே! மேலும் விளக்குகளை அணைத்து விடுங்கள்!

**நூல்:** *புகாரி, ஃபத்ஹுல் பாரி பாகம் 10 பக்கம் 88. முஸ்லிம் பாகம் 3 பக்கம் 1595.*

**ஹஜ் - உம்றாவுக்காக 'இஹ்றாம்' தரித்தவர் எவ்வாறு 'தல்பியா' சொல்ல வேண்டும்?**

لَبَّيْكَ اللّٰهُمَّ لَبَّيْكَ ، لَبَّيْكَ لَا شَرِيْكَ لَكَ لَبَّيْكَ ، إِنَّ الْحَمْدَ وَالنِّعْمَةَ لَكَ وَالْمُلْكَ لَا شَرِيْكَ لَكَ .

*234.* லப்பைக் அல்லாஹும்ம லப்பைக்
லப்பைக் லா ஷரீக லக லப்பைக்
இன்னல் ஹம்த வன் நிஃமத லக வல் முல்கு
லா ஷரீக லக

**பொருள்:** ஆஜராகி விட்டேன். யா அல்லாஹ்! இதோ ஆஜ ராகி விட்டேன். இதோ நான் வந்து விட்டேன். உனக்கு யாதொரு இணையுமில்லை. திண்ணமாக அனைத்துப் புகழும் அருட்கொடைகளும் உனக்கே சொந்தம்! ஆட்சியதிகாரமும் (உனக்குரியதே!) உனக்கு யாதொரு இணையுமில்லை!

நூல்: புகாரி, ஃபத்ஹுல் பாரி பாகம் 3 பக்கம் 408. முஸ்லிம் பாகம் 2 பக்கம் 841.

**பதற்றம் அடையும்போது ஓதவேண்டியதென்ன?**

235. லா இலாஹ இல்லல்லாஹு -

அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவனில்லை.

நூல்: புகாரி, ஃபத்ஹுல் பாரி பாகம் 6 பக்கம் 181. முஸ்லிம் பாகம் 4 பக்கம் 2208.

**நிராகரிப்பாளர் தும்மும் போது அவருக்கு என்ன சொல்ல வேண்டும்?**

يَهْدِيكُمُ اللهُ وَيُصْلِحُ بَالَكُم

236. அல்லாஹ் உங்களுக்கு நேர்வழி காட்டட்டும். உங்களின் நிலைமையைச் சீராக்கட்டும்.

நூல்: திர்மிதி பாகம் 5 பக்கம் 82
அஹ்மத் பாகம் 4 பக்கம் 400
அபூ தாவூத் பாகம் 4 பக்கம் 308
பார்க்க: ஸஹீஹுத் திர்மிதி பாகம் 2 பக்கம் 354

**நிராகரிப்பாளர் சலாம் கூறும்போது எப்படி பதில் சொல்ல வேண்டும்?**

237. வேதம் வழங்கப்பட்டவர்கள் (யூதர்கள், கிறிஸ்தவர்கள்) உங்களுக்கு சலாம் கூறினால் பதிலில் வ அலைக்கும்

என்று கூறுங்கள். (பொருள்: உங்களின் மீதும் உண்டாகட்டும்)

நூல்: புகாரி, ஃபத்ஹுல் பாரி பாகம் 11 பக்கம் 42. முஸ்லிம் பாகம் 4 பக்கம் 1705.

**நோன்பாளியை ஒரு மனிதன் ஏசினால் அவன் என்ன கூறவேண்டும்?**

إِنِّي صَائِمٌ ، إِنِّي صَائِمٌ

*238. பொருள்: நான் நோன்பாளி; நான் நோன்பாளி.*

*நூல்: புகாரி, ஃபத்ஹுல் பாரி பாகம் 4 பக்கம் 103. முஸ்லிம் பாகம் 2 பக்கம் 806.*

**ஆடு, மாடு, ஒட்டகங்களை அறுக்கும் போது என்ன சொல்ல வேண்டும்?**

بِسْمِ اللهِ اللهُ أَكْبَرُ [ اَللّٰهُمَّ مِنْكَ وَلَكَ ] اَللّٰهُمَّ تَقَبَّلْ مِنِّي

*239. பொருள்: "அல்லாஹ்வின் திருப்பெயர் கொண்டு (நான் அறுக்கிறேன்) அல்லாஹ் மிகப்பெரியவன். யா அல்லாஹ்! (இந்த குர்பானி) உன்னிடம் நின்றும் உள்ளது. உனக்கே உரியது! யா அல்லாஹ்! என்னிடமிருந்து ஏற்றுக் கொள்வாயாக!*

*நூல்: முஸ்லிம் பாகம் 3 பக்கம் 1557. பைஹகி பாகம் 9 பக்கம் 287. பிறை வளைவினுள் உள்ளவை பைஹகி யின் வாசகமாகும். இறுதி வார்த்தையை முஸ்லிமின் அறிவிப்பிலிருந்து - கருத்தின் அடிப்படையில் எடுத் தெழுதியுள்ளேன்.*

**மூர்க்கத்தனம் கொண்ட ஷைத்தான்களின் மறைமுக உத்தி களை முறியடித்திட என்ன ஓதவேண்டும்?**

أَعُوذُ بِكَلِمَاتِ اللهِ التَّامَّاتِ الَّتِي لَا يُجَاوِزُهُنَّ بَرٌّ وَلَا فَاجِرٌ مِنْ شَرِّ مَا خَلَقَ ، وَبَرَأَ وَذَرَأَ ، وَمِنْ شَرِّ مَا يَنْزِلُ مِنَ السَّمَاءِ ، وَمِنْ شَرِّ مَا يَعْرُجُ فِيهَا ، وَمِنْ شَرِّ مَا ذَرَأَ فِي الْأَرْضِ وَمِنْ شَرِّ مَا يَخْرُجُ مِنْهَا ، وَمِنْ شَرِّ فِتَنِ اللَّيْلِ وَالنَّهَارِ ، وَمِنْ شَرِّ كُلِّ طَارِقٍ إِلَّا طَارِقًا يَطْرُقُ بِخَيْرٍ يَا رَحْمٰنُ .

*240. பொருள்: அல்லாஹ்வின் பூரணமான வார்த்தைக ளைக் கொண்டு நான் பாதுகாவல் தேடுகிறேன்; நல்லவர் - கெட்டவர் எவரும் அந்த வார்த்தைகளைக் கடந்து செல்ல முடியாது! அவன் நிலை நிறுத்திய படைப்புகளின் - அவன் படைத்த, பரவச் செய்த எல்லாப் படைப்புகளின் தீமையிலி ருந்தும்! (பாதுகாவல் தேடுகிறேன்) மேலும் வானத்திலி ருந்து இறங்குகிற, அங்கே ஊர்ந்து செல்கிறவற்றின் தீமையி லிருந்தும்! (பாதுகாவல் தேடுகிறேன்!) மேலும் பூமியிலே அவன் படைத்துள்ளவற்றின் மற்றும் அதிலிருந்து வெளிப்ப டுகின்றவற்றின் தீமையிலிருந்தும்! (பாதுகாவல் தேடுகி றேன்) மேலும் இரவு - பகலின் குழப்பங்களின் தீமையிலி ருந்தும்! (பாதுகாவல் தேடுகிறேன்!) மேலும் இரவில் வரக்கூடிய ஒவ்வொன்றின் தீமையிலிருந்தும்! (பாதுகாவல் தேடுகிறேன்) ஆனால் நன்மையுடன் வரக்கூடியவை நீங்க லாக! கருணைமிக்க இறைவனே!*

*நூல்: அஹ்மத் பாகம் 3 பக்கம் 419 நம்பகமான அறிவிப்புத் தொடர். இப்னு ஸுன்னி, ஹதீஸ் எண் 637. பார்க்க: மஜ்மஉஸ் ஸவாயித், பாகம் 10 பக்கம் 127, அர்னவூத் அவர்களின் 'தஹாவிய்யாவின் அடிக்குறிப்பு'' பக்கம் 133.*

பாவமன்னிப்பு தேடல், பட்சாதாபப்பட்டு மீளல்

*241. அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்:*

*அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நான் பகலில் 70 தடவைகளுக்கு அதிகமாக அல்லாஹ்விடம் பாவமன்னிப்பு கோருகிறேன்! பாவமீட்சி தேடி அவன் பக்கம் மீளுகிறேன்!*

*நூல்: புகாரி, ஃபத்ஹுல் பாரி. பாகம் 11 பக்கம் 101.*

*242. அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்:*

*''மக்களே, அல்லாஹ்வின் பக்கம் பாவமீட்சி தேடி மீளுங்கள். திண்ணமாக நான் ஒரு நாளைக்கு 100 தடவை பாவ மீட்சி தேடி அவன் பக்கம் மீளுகிறேன்.''*

*நூல்: முஸ்லிம் பாகம் 4 பக்கம் 2076.*

243. அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்:

எவர் இந்த வார்த்தைகளை ஓதினாரோ அவரை அல் லாஹ் மன்னித்து விடுகிறான்; அவன் யுத்தத்தில் புறங் காட்டி ஓடியிருந்தாலும் சரியே!

اَسْتَغْفِرُ اللهَ الَّذِيْ لَا إِلٰهَ إِلَّا هُوَ الْحَيَّ الْقَيُّوْمَ وَأَتُوْبُ إِلَيْكَ

பொருள்: அல்லாஹ்விடத்தில் பாவமன்னிப்பு கோரு கிறேன்; அவன் எப்படிப்பட்டவனெனில், அவனைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறில்லை. அவன் நித்திய ஜீவன்; பேரண்டம் முழுவதையும் நிர்வகிப்பவன்! மேலும் பாவமீட்சி தேடி அவன் பக்கமே மீளுகிறேன்.

நூல்: அபூ தாவூத் பாகம் 2 பக்கம் 85. திர்மிதி பாகம் 5 பக்கம் 569. ஹாகிம்.

— ஹாகிம் அவர்கள் இதன் அறிவிப்புத் தொடரை நம்பகமானது என்று கூறியுள்ளார்கள். இமாம் தஹபி யும் அதற்கு உடன்பட்டுள்ளார்கள். பாகம் 1 பக்கம் 511 - அல்பானி அவர்களும் இதனை நம்பகமானது என்று கூறியுள்ளார்கள். பார்க்க: ஸஹீஹுத் திர்மிதி பாகம் 3 பக்கம் 182 ஜாமிஉல் உஸூல் அஹாதீஸிர் ரஸூல் - பாகம் 4 பக்கம் 389 - 390.

244. மேலும் நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்:

இறைவன் அடியார்களுடன் - இரவின் கடைசிப் பகுதியில் மிகவும் நெருக்கமாகி வருகிறான்; இந்நேரத்தில் அல்லாஹ்வை நினைவுகூருகிற அடியார்களில் நீரும் ஒருவ ராய் ஆக முடியுமெனில் ஆகுவீராக.

நூல்: திர்மிதி, நஸாஈ பாகம் 1 பக்கம் 279. ஹாகிம், பார்க்க: ஸஹீஹுத் திர்மிதி பாகம் 3 பக்கம் 183. ஜாமிஉல்

உஸூல், அர்னவூத் அவர்களின் மேலாய்வுடன் பாகம் 4 பக்கம் 144.

245. மேலும் நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்:

அடியான் தன் இறைவனுடன் மிகவும் நெருக்கமாக 'ஸஜ்தா'வின் நிலையில் ஆகிறான். எனவே அப்போது அதிகம் துஆ கேளுங்கள்''.

நூல்: முஸ்லிம் பாகம் 1 பக்கம் 350.

246. அஃகர்ரு - அல்முஸ்னி (ரலி) அறிவிக்கிறார்கள்:

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: எனது மனத்தில் 'திரை' போன்றதொன்று ஏற்படுகிறது! நான் ஒரு நாளில் 100 தடவை அல்லாஹ்விடம் பாவமன்னிப்பு கோருகிறேன்.''

நூல்: முஸ்லிம் பாகம் 4 பக்கம் 2075.

(இப்னுல் அஸீர் அவர்கள் கூறுகிறார்கள்: திரை போன்ற ஒன்று என்பதன் கருத்து மறதியாகும். ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் அதிகமாக திக்ர், இறையச்சம், இறை தியானம் ஆகியவற்றில் இருந்து கொண்டிருப்பார்கள். சில நேரங்களில் இந்நிலைகள் ஒன்றில் நபியவர்களுக்குப் பராமுகமோ மறதியோ ஏற்பட்டால் அதனை நபியவர்கள் தாம் செய்த குற்றமாகக் கணக்கிடுவார்கள்! உடனே பாவமன்னிப்பு கோரி பாதுகாப்புத் தேடுவார்கள்!''

பார்க்க: ஜாமிவுல் உஸூல் பாகம் 4. பக்கம் 386.

**ஸுப்ஹானல்லாஹ், அல்ஹம்துலில்லாஹ், லாஇலாஹ இல்லல்லாஹ், அல்லாஹு அக்பர் ஆகியவற்றின் சிறப்பு**

1. அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்:

எவர் பின்வரும் இந்த வார்த்தையை என்றாவது ஒரு நாள் 100 தடவை ஓதினாரோ அவருக்கு அது, 10 அடிமை களை விடுதலை அளித்ததற்குச் சமமாக அமையும்! மேலும் அவருக்கு அதன்மூலம் 10 நன்மைகள் எழுதப்படும்; பத்துப் பாவங்கள் அழிக்கப்படும். மேலும் இந்த வார்த்தை மாலை நேரம் வரை - நாள் முழுவதும் பாதுகாப்பதற்கான கருவி யாக அவருக்கு அமையும். மேலும் அவரது அமலை விடவும் சிறந்த அமலை செய்து கொண்டு எவரும் வரமுடி யாது; அவரை விடவும் அதிகமான அமல்கள் செய்திருக்கும் மனிதரைத் தவிர!''

لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ وَحْدَهُ لَا شَرِيْكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ
وَهُوَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ

நூல்: புகாரி பாகம் 4 பக்கம் 95.
முஸ்லிம் பாகம் 4 பக்கம் 2071.

2. ஸுப்ஹானல்லாஹி வபி ஹம்திஹி (அல்லாஹ்வைப் புகழ்வதுடன் அவன் தூயவன் என்று துதிக்கவும் செய்கி றேன்) என்று எவர் ஒருநாளில் 100 தடவை ஓதுகிறாரோ அவருடைய பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன; அவை கடலின் நுரை அளவுக்கு இருந்தாலும் சரியே!

நூல்: புகாரி பாகம் 7 பக்கம் 168
முஸ்லிம் பாகம் 4 பக்கம் 2071.

3. அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்:

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்: ''எவர் காலையில் 100 தடவையும் மாலையில் 100 தடவையும் 'ஸுப்ஹானல்லாஹி வ பிஹம்திஹி' (அல்லாஹ்வைப் புகழ்வதுடன் அவன் தூயவன் என்றும் துதிக்கிறேன்) என்று

ஓதுகிறாரோ அவரது 'அமலை' விடவும் சிறந்த அமலை மறுமை நாளில் யாரும் கொண்டுவரமுடியாது; அவர் சொல்லியது போன்று சொன்னவரையோ அதனினும் அதிக மாகச் சொன்னவரையோ தவிர!

நூல்: முஸ்லிம் பாகம் 4 பக்கம் 2071

4. அபூ அய்யூப் அன்ஸாரி (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்: எவர் 10 தடவை இந்த கலிமாவை ஓதினாரோ அவர் இஸ்மா யீல் நபி (அலை) அவர்களின் சந்ததிகளில் நான்கு பேருக்கு அடிமைத் தளையிலிருந்து உரிமை விடுதலை வழங்கியவரைப் போன்றவராவார்''.

إِلَهَ إِلَّا اللهُ وَحْدَهُ لَا شَرِيكَ لَهُ ، لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ

பொருள்: ''வணக்கத்திற்குரிய இறைவன அல்லாஹ் வைத் தவிர வேறு யாருமில்லை; அவன் தனித்தவன்; அவனுக்கு யாதொரு இணையுமில்லை. ஆட்சியதிகார மும் அனைத்துப் புகழும் அவனுக்குரியவையே! அவன் அனைத்தின் மீதும் ஆற்றல் கொண்டவன் ஆவான்''.

நூல்: புகாரி பாகம் 7 பக்கம் 167
முஸ்லிம் பாகம் 4 பக்கம் 2071.

5. அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்: இந்த இரண்டு 'கலிமாக்கள்' நாவுக்கு இலகுவானவை; தராசில் கனமானவை; கருணைமிக்க இறைவனுக்குப் பிரியமா னவை:

பொருள்: அல்லாஹ்வைப் புகழ்வதோடு அவனைத் தூயவன் எனத் துதிக்கிறேன்; மகத்தான அல்லாஹ்வைத் தூயவன் எனத் துதிக்கிறேன்!

நூல்: புகாரி பாகம் 7 பக்கம் 168. முஸ்லிம் பாகம் 4 பக்கம் 2072.

6. அபூ ஹுரைரா (ரலி) அறிவிக்கிறார்கள்; அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள். ''நான் இந்தக் கலிமாக் களை மொழிவது, சூரியன் உதித்துப் பிரகாசமாக்கக் கூடிய இந்த உலகம் முழுவதை விடவும் எனக்குப் பிரியமானதாகும்.

سُبْحَانَ اللهِ وَالْحَمْدُ لِلهِ، وَلَا إِلَهَ إِلَّا اللهُ وَاللهُ أَكْبَرُ

ஸுப்ஹானல்லாஹி, வல்ஹம்துலில்லாஹி வலா இலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர்

நூல்: முஸ்லிம் பாகம் 4 பக்கம் 2072.

7. ஸஅத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:

''நாங்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் சமூகத்தில் இருந்தோம். அப்போது நபியவர்கள் கேட்டார்கள்: உங்க ளில் ஒருவர் தினமும் 1000 நன்மைகளைச் சம்பாதிப்பதற்கு இயலாதிருப்பாரா? அங்கு அமர்ந்திருந்தவர்களில் ஒருவர் 'எங்களால் 1000 நன்மைகளை எவ்வாறு சம்பாதிக்க இய லும்? என்று வினவினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள்: ''100 தடவை 'தஸ்பீஹ்' செய்யட்டும் ; அதனால் அவருக்கு 1000 நன்மைகள் எழுதப்படுகின்றன; 1000 தவறுகள் மன்னிக்கப்படுகின்றன!''

நூல்: முஸ்லிம் பாகம் 4 பக்கம் 2073.

8. ஜாபிர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அருளினார்கள்: ''எவர், ஸுப்ஹானல்லாஹில் அழீம் வபி ஹம்திஹி' எனும் கலி

மாவை ஓதினாரோ அவருக்கு சுவனத்தில் ஒரு பேரீத்தம் மரம் நடப்படுகிறது!''

நூல்: திர்மிதி பாகம் 5 பக்கம் 511. ஹாகிம் பாகம் 1 பக்கம் 501. ஹாகிம் அவர்கள் இதனை நம்பகமானது எனக் கூறியுள்ளார்கள்; இமாம் தஹபி அவர்கள் அதற்கு உடன்பட்டுள்ளார்கள். பார்க்க: ஸஹீஹுல் ஜாமிவு, பாகம் 5 பக்கம் 531. ஸஹீஹுத் திர்மிதி, பாகம் 3 பக்கம் 160.

9. அப்துல்லாஹ் பின் கைஸ் (அபூ மூஸா - அல் அஷ் அரி) (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள்: ''அப்துல் லாஹ் பின் கைஸே, சுவனத்துப் பொக்கிஷங்களில் ஒரு பொக்கிஷத்தை உமக்கு அறிவித்துத் தரட்டுமா? என்று! 'ஆம்' என்றேன் நான். நபியவர்கள் சொன்னார்கள்: 'லா ஹௌல வலா குவ்வத இல்லாபில்லாஹ்' என்று கூறுவீ ராக! (பொருள்: அல்லாஹ்வின் உதவி கொண்டே தவிர எவ்வித ஆற்றலும் சக்தியும் இல்லை)

நூல்: புகாரி, ஃபத்ஹுல் பாரி பாகம் 11 பக்கம் 213. முஸ்லிம் பாகம் 4 பக்கம் 2076.

10. ''அல்லாஹ்வுக்கு மிகவும் பிரியமான கலிமா நான்கு:

இவற்றில் எதனைக் கொண்டு நீ தொடங்கினாலும் உமக்கு எந்தக் குறையுமில்லை! உமது குழந்தைக்கு யஸார், ரபாஹ், நஜீஹ், அஃப்லஹ் என்று பெயர் சூட்டாதே! ஏனெனில் நீர் கேட்பீர் அங்கு இவன் இருக்கிறானா என்று; அங்கு அவன் இல்லையெனில் 'இல்லை' என்று பதில் கூறவேண்டியது வரும்!

யஸார் - இலகு. நஜீஹ் - ஈடேற்றம் பெற்றது.
ரபாஹ் - லாபம். அஃப்லஹ் - வெற்றியாளன்.

நூல்: முஸ்லிம் பாகம் 3 பக்கம் 1685.

*11. ஸஅத் பின் அபீ வகாஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:*

''அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் ஒரு கிராமப்புற மனிதர் வந்தார்; ''எனக்குச் சில வாக்கியங்களைக் கற்றுத் தாருங்கள்; நான் அவற்றைச் சொல்லிக் கொண்டேயிருப்பேன்'' எனக் கேட்டார்.

அதற்கு நபியவர்கள் சொன்னார்கள்: நீர் இவ்வாறு கூறும்:

لَا إِلٰهَ إِلَّا اللهُ وَحْدَهُ لَا شَرِيْكَ لَهُ ، اَللهُ أَكْبَرُ كَبِيْرًا ، وَالْحَمْدُ لِلّٰهِ كَثِيْرًا ،
سُبْحَانَ اللهِ رَبِّ الْعَالَمِيْنَ لَا حَوْلَ وَلَا قُوَّةَ إِلَّا بِاللهِ الْعَزِيْزِ الْحَكِيْمِ

பொருள்: வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை. அவன் தனித்தவன். அவனுக்கு யாதொரு இணையுமில்லை. அல்லாஹ் அனைவரினும் பெரியவன். எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே அகிலம் முழுவதையும் படைத்து பரிபாலிக்கும் இரட்சகனாகிய அல்லாஹ்வைத் தூயவன் என அதிகம் துதிக்கிறேன். யாவரையும் மிகைத்த- நுண்ணறிவாளனாகிய அல்லாஹ்வி(ன் உதவி யும், பாதுகாப்புமி)ன்றி (நன்மைகள் செய்வதற்கு) எந்த ஆற்றலும் இல்லை, (தீமைகளைவிட்டு விலக)எந்த சக்தியும் இல்லை.

அந்தக் கிராமப்புற மனிதர் கேட்டார். இது என் இரட்சகனுக்குரியது; எனக்காக என்ன உள்ளது? அதற்கு நபியவர்கள், ''நீர் கூறும்:

اَللّٰهُمَّ اغْفِرْ لِي ، وَارْحَمْنِي ، وَاهْدِنِي ، وَارْزُقْنِي

பொருள்: யா அல்லாஹ்! என்னை மன்னிப்பாயாக! எனக்குக் கருணை புரிவாயாக! எனக்கு வழிகாட்டுவாயாக! எனக்கு உணவு வழங்குவாயாக!''

நூல்: முஸ்லிம் பாகம் 4 பக்கம் 2072. அபூதாவூதில் சில விளக்கம் கூடுதலாக உள்ளது. அந்த மனிதர் திரும்பிச்

சென்றதும் நபி (ஸல்) அவர்கள் சொன்னார்கள்: இரண்டு கைகள் நிரம்ப நன்மையை அள்ளிக் கொண் டார். பாகம் 1 பக்கம் 220.

12. தாரிக் - அல அஷ்ஜயீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:

''புதிதாக ஒருவர் இஸ்லாத்தை ஏற்றால் அவருக்கு நபி(ஸல்) அவர்கள் தொழுகையைக் கற்றுக் கொடுப்பார் கள். பிறகு பின்வரும் இந்தக் கலிமாக்களை ஓதி துஆ செய்யுமாறு அவரைப் பணிப்பார்கள்.

اَللّٰهُمَّ اغْفِرْ لِي ، وَارْحَمْنِي ، وَاهْدِنِي ، وَعَافِنِي ، وَارْزُقْنِي

பொருள்: யா அல்லாஹ் என்னை மன்னித்து விடு; எனக்குக் கருணை செய்; எனக்கு வழிகாட்டு; எனக்கு ஆரோக்கியம் அளித்திடு; மேலும் எனக்கு உணவு வழங்கு!

நூல்: முஸ்லிம் பாகம் 4 பக்கம் 2073. முஸ்லிமின் மற்றோர் அறிவிப்பில் ''திண்ணமாக இந்த வார்த்தைகள் உனது உலகத்தையும் உனது மறுமையையும் ஒன்றிணைக் கும்'' என்று வந்துள்ளது''.

13. ஜாபிர் பின் அப்துல்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார் கள்:

''அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ''திண் ணமாகச் சிறந்த பிரார்த்தனை (துஆ) அல்ஹம்துலில்லாஹ் என்பதாகும். சிறந்த 'திக்ர்' லாஇலாஹ இல்லல்லாஹ்' என்பதாகும்.''

நூல்: திர்மிதி பாகம் 5 பக்கம் 462. இப்னு மாஜா பாகம் 2 பக்கம் 1249. ஹாகிம் பாகம் 1 பக்கம் 503 - ஹாகிம் அவர்கள் இதனை நம்பகமானது என்று சொல்லியுள் ளார்கள். இமாம் தஹபியும் அதற்கு உடன்பட்டுள்ளார் கள். பார்க்க; ஸஹீஹுல் ஜாமிவு பாகம் 1 பக்கம் 362.

Two Saudi Riyals

# حصن المسلم

## من أذكار الكتاب والسنة

تأليف

الفقير إلى الله تعالى

د. سعيد بن علي بن وهف القحطاني

باللغة التاميلية

ترجمة

علي أبو خالد العمري

راجعة

إلياس بن وقاص لبي (الشرقي)

مترجم بإدارة الجاليات بوزارة الشؤون الإسلامية

أشرف على مراجعة الترجمة وتصحيحها المؤلف

توزيع

مؤسسة الجريسي للتوزيع والإعلان

ص.ب: ١٤٠٥ الرياض: ١١٤٣١

هاتف: ٤٠٢٢٥٦٤ ناسوخ: ٤٠٢٣٠٧٦




ISBN: 9960 - 36 - 295 - 9